ஸ்ரீ

ஹரி ஓம்.

ஸ்ரீராமமயம்.

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ

# ஜாநகிபரிணயம்.

---

கவித்தலம்,

ஸ்ரீமாந், துரைசாமிமூப்பனாரவர்களால்

வடமொழியிலிருந்துதென்மொழியில்

செய்யப்பட்டு,

---

சென்னை,

கொம். பெ. செங்கல்வராயசெட்டியார்

அவர்களது ஸ்ரீநிலய முத்ராக்ஷரஶாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

---

விஷு ஹு பங்குனி மீ.

ஸ்ரீ

ஸ்ரீராமமயம்.

ஸ்ரீமதே ராமாநுஜாயநமஃ

# அறிவிப்பு.

---

அணா.

ஜாநகீபரிணயம் விலை........... ௫.

அயோத்திமாநகரமான்மியம் . ௬.

இவற்றைக் கும்பகோணம் நேடிவ் ஹைஸ்கூல் உபாத்தியாயர் T. ஸ்ரீநிவாசாசாரியாரிடம் பெற்றுக்கொள்ளலாம். புறத்தேயத்தார் ஒவ்வொன்றிற்கும் தபாற்கூலி ஒன்றரை அணா அனுப்பவேண்டும். ஒருசேரப் பத்துப்புத்தகம் வாங்கினவர்களுக்கு ஒன்று தரவு கொடுக்கப்படும்.

ஸ்ரீ.

ஸ்ரீராமஜயம்.

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# நூலினுட்பொருள்விளக்கம்.

அவையேற நவைபாறச் சுவையூறக்கற்ற கல்விமாந்தர்க ளே! கேண்மின்கள்.

ஸ்ரீ ராமபத்தரான ஸ்ரீமத்ராமபத்ர அந்தணர்பெருமான் வடமொழியில் செய்தருளிய ஜாநகீபரிணயமென்னும் இந்நா டகம் பலமங்கலச் செயல்களுள்ளும் ஏற்றமுடைய மணவினை யைப்போல ஏனை நாடகங்களுள்ளும் போரச் சீர்மைத்து.

ஆண்பாலார் பெண்பாலாருடைய அபிதானங்களை ஆண் டாண்டு இந்நூலில் பரக்கப் பகர்ந்திருக்கின்றமையின், ஈண்டு விரித்திலேன். நாடகமாகலின் வேதத்தோடொத்த ஸ்ரீமத் வால்மீகம் ஓதிய சிலவற்றிற்கு வேருகவே வியப்புறத் தொடுத் திருக்கின்றவற்றை இதன்கீழ் நவில்கின்றேன்.

பகவான் விசுவாமித்திர முனீந்திரர் மகஞ்செயலுற்று இ ராமலட்சுமணரை அழைத்தது இயற்கையாலன்று. தேவரு ணவை விரும்பிய சுணங்களைப் போல, அறுமுகனைத்தந்த ஐ ம்முகனைப் பெற்ற நான்முகனை யீன்ற மைதிலியாரைக் காத லித்த ஈரஞ்சு தலையனை அஞ்சிய ஜனகப்பிரபன்னர் காதி கா தலரைக் கண்ணுற்று முனீந்திரரே! மகமென ஒரு பொய்ப்பெ யரிட்டுத் தயரத சக்கரவர்த்தி தொடக்கத்தோரை நமதாச் சிரமத்தின்கண் உடன் கொடுபோந்து அழகுதானும் ஓரழகு பெறத்தானின்ற தாமரைக் கோயிலாளுக்கும், வீரந்தானும் ஓர் வீரம்பெறத் தான் தந்த தாமரைக் கோயிலானுக்குந் திருமண முடித்தருள்வீரென் றிரப்ப, அதனால் அம்மாமுனிவர் ஸ்ரீசா கேதஞ் சார்ந்து சக்கரவர்த்தி திருமகனரை அழைத்தனரெ ன்று கொள்க.

சக்கரவர்த்தி திருமகனார் தாடகையைக் கோறல்செய்தருளியது அவள் முனிந்துவந்த காரணம்பற்றியன்று. இராவணனுடைய தூதர்களாகிய சுகசாரணர் இருவரும் பிரமருஷியும், ராஜருஷியுமாகிய இருவரும் ஒன்றுசேர்ந்து சூழ்ந்த சூழ்ச்சியை யுணர்ந்து, இராமலட்சுமணரை ஜனகப் பெயர்ப் பெரியோர்பால் அணுகச் செய்யாமையின்பொருட்டுப் பகவான் கோசிகமுனிவரை யெடுத்துத் தண்டாது விழுங்குமாறு தாடகையை விடுத்தனரென்றும், அச்சழக்கி அச்சுகசாரணர் சொற்கொடு சேறலும், தாரகப்பரமனார் அவளைத் தமது ஏவென்னுங் கூற்றுவன் கைப்படுத்தருளினரென்றும் அறிக.

விமல சுகிர்த ரத்னம் சிலையின்மேல் சீர்பாதம் வைத்தருளியது அகலிகையின் கல்லுருவந் தவிர்த்தற்கன்று. வைதேகியார் இரகுநாதரையே காதலிக்கின்றமையின் அந்நாதரைக் கொன்று ஜாநகியாரை இராவணனென்னும் இழுதையை விரும்பச் செய்வான் நம் தாயாரைப்போல மாயா சீதையுண்டாக்கிக் காகுஸ்தரைக் கருதுப்பு காமநோயுற்று உய்யும்வகையின்றி அனலில் வீழ்ந்து ஆவிதுறப்பச் செய்தலும், இரகுபுங்கவர் சேய்மையினின்று அதனைக் கண்ணுற்றுக் காதலியாராகிய மைதிலியார் உயிர்நீத்தமையின் யாமும் அத்தீயிற் குளிப்போமென்று அணித்தாகி ஓர் கல்லின்மீது இவறலும், அப்பாறை யுருவாய்க்கிடந்த அகலிகை மெய்யான மெய்யோடு இராமாஜய ஜய, இராகவாஜயஜய, என்று மொழிந்துகொண்டே தோன்றினளென்று உணர்க.

மிதிலையர் பெருமனார் தம்மிடத்திருந்த சைவதனுசை விசுவாமித்திர மாமுனிவரோடெழுந்தருளிய இராகவபிரானது திருமுன்னரிட்டது அக்கார்முகத்தை வணக்கினவனுக்கே தமது காதலியை ஈதல்புரிவேமென்று சூளுறவு செய்தமையாலன்று. ஸ்ரீ அயோத்தியினின்றுங் கோசிகமாமுனிவர் பரமராம் இராமலட்சுமணரோடு சீதையாரது தாதையார் பால் சாருமுன் இலங்கேசன் என்னுந் துராத்துமன் பரமாத்தும

னெனவும், சாரணச்சழக்கன் ராமாநுஜனெனவும், வித்யுஜிஹ்வன் காதி காதலனெனவும் கள்ளப் படிவங்கொண்டு ஜனகர் பக்கல் வந்திருத்தலும், விமலையினின்றும் போந்த அம்மூவரும் உடனே ஆங்குவந்தருளினர். அதுகாலை மெய்யுணர்வுற்ற விதேயர் வேந்தர் ஐயுற்று, அவ்விருதிறத்தனரில் உண்மையுடையார் இன்னாரெனத் தெருளுவான் முன்னரோ தமக்குச் சங்கரன் அருளிய வாய்மையை ஓர்ந்து சிவசாபத்தைக் கொணர்ந்து காட்ட, நமது சர்வசுவாமி வளைக்கலுற்றவேலை அத்தநு அன்னாரது வரம்பிலாற்றலை ஆற்றாமே முறிந்ததென்றோர்க.

பரசுராமர் சைவமுனி இறலுற்ற ஓசையால் முனிவுற்று வட்டையில்வந்து ஜானகீ காந்தனை எதிர்த்தாரல்லர். ஜனகப்பெரியோர் சிவமுனியை வருவித்தலும், அச்சுற்றோடிய இராவணன் அழுக்காறுற்று, அரசர் குலகண்டகனை ஏவ அவர் வந்து மறித்தானெனத் தெரிக.

நம் முதற்பெருந்தேவை நாட்டினின்றும் அகற்றமந்தரை முயன்றதும், கைகேசி அதற்கு இணங்கியதும், சக்கரவர்த்தியார் உடன்பட்டதும், வில்லுண்டை உதையானும், தன் மகற்குப் பாரளிக்க நினைத்தமையானும், சம்பராசுரனுடைய போரில்வரன் ஈந்தமையானும் அல்ல; நாயினுங் கடையனான பத்துத்தலையான் பின்னும் மயனையும், மாரீசனையும், வித்யுஜிஹ்வனையும் ஏவலும், அம்மூவருஞ் சென்று மந்தரை கைகேசி தசரதராகிய அம்மூவருளத்திலும் புகுந்து இராமபத்திரனைக் காட்டில் விடுப்பச் செய்தனர். செய்யவே மந்தரை ஆதியராகிய அம்மூவரும் அவ்விராக்கதருடைய ஆவேசங்கொண்டு மூவரையும் கோசல தேயத்தினின்றும் அகற்ற உடன்பட்டனரென்க.

தண்டகவனத்தில் விராதனெனவன் மிதிலை நாடியானைத் தோளிற் பொறுத்துச் சென்றானல்லன். பஞ்சவடியில் இராம

# நூலினுட்பொருள்விளக்கம்.

சந்திரனைக் காணலுற்ற சூர்ப்பநகை அவரது சுந்தரத் திருத்தோளை அணையக்காதலித்து நங்கள் அன்னையாராம் வைதேகியாரெனவும், விராதன் ஜானகியாரைப்பாரா முழுப் பேதைமையினால் அவரைப் புல்ல எண்ணுபு இரகு புங்கவரெனவும் ஒருவரை யொருவர் தெரூமே சோரவேடம் பூண்டு கிட்டி,அவ்விராதன் சீதையார் திருவுருக்கொண்ட சூர்ப்பநகையை அச்சீதையா ரெனவே கருதித் தாங்கிச் செல்ல, இளையபெருமாள் அதனைத் திருக்கண்சார்த்தி விராதனை யிராதப்படிக் கொன்றருளினரெனக்காண்க.

சுவாமி பிராட்டியாரை நேடத் தொடங்கியதுமுதல் வாலியைக் கோறல்செய்தருளிய காறும் அந்தர் நாடிகையில் சுருக்கமொழியக் கண்டுகொள்க.

நம் எல்லாம் வல்ல சுவாமி இராவண சங்காரம் புரிந்தருளினும், கார்மேகத்தை நோக்கும் சாதகமெனப் பரிந்திருந்து எதிர் போந்த ஜானகியாரைத் தாசரதியார் தீயிற் குளிப்பத் தீமாற்றம் விளம்பியது அம்மங்கையர்க்கரசியாரதுதிருக்கோலத்தைக்கண்டருளினமையாலன்று. மிதிலை நாடியார் தமது கணவர்பா லணுகப் போதும் போது மூக்கறையுங் காதறையுமாகிய சூர்ப்பநகை எதிர்ப்பட்ட சகுன விரோதத்தாலென்று தெளிக.

பரதாழ்வாரும் சத்துருக்கினாழ்வாரும் நந்திக்கிராமத்தில் கனலில் ஆவிநீப்பத் துணிந்தது தமது பிரானார் எழுந்தருளுவதாய்ப் புகன்றருளிய அவதியில் வராமையாலன்று. இராவணனுதியரைக் கொன்றவனுடைய குலத்தை வேரறுப்பேனென்று சூர்ப்பநகை தாபசி உருக்கொடு நந்திக்கிராமநண்ணி இராமலட்சுமணர் அரக்கர் செய்த மாயையால் விண்ணுடாள உற்றனரென்று சாற்றிய மாற்றத்தாலென்றுகருதுக.

நம் அரும்பெறலடிகளுக்குப் பட்டாபிஷேக மகோற்சவம் நடந்தது ஸ்ரீ அயோத்தியிலன்று நந்திக்கிராமத்திலென்று பெருமகிழ்வடைக.

உ

ஸ்ரீ.

# அவையடக்கம்.

கற்றுணர்ந்த எந்தையீர் யானோ ஒரு பொருளல்லேன்: ஒரு சிறிதுங் கற்றேனல்லேன். கற்றவர் மாட்டுச்சார்ந்தேனு மல்லேன். ஐயன்மீர்! யான்கூறும் வழுப்பட நிரம்பாமென் சொல்லை இன்னுஞ் சிறிது கேண்மின். நத்தமான், மலயமான், சுதர்மான் என்ற முக்குலத்துள், அச்சுதர்மான் மரபிற்றோன்றிய எனது குரவர் பொன்னிநாட்டுச் சென்னிமாட்டு வில்லேருழவர்களாய்த் தொழில் புரிந்தனரோனும், பின்னர் உதித்தவர் * சொல்லேருழவர்களாய், அப்பொரு தொழிலை நீத்து உழுதொழிலை யேற்றமையின்புல்லியேனும் அம்மரபு வழுவச் செய்யாது செந்தமிழென்னுஞ்செய்ந் நிலனை எனது நாவென்னு முழுபடையினால் உழுது,மனமென்னும் விதைவிதைத்து, அறிவென்னும் புனல் பாய்ச்சிக் கல்வி யென்னும் பைங்கூழ்செடி கொடிகளை வளர்த்து, ஞானமென்னுஞ் செந்நெல் கொள்ளலோடு அச்செடியினுங் கொடியிலும் நற்சொல், நற்பொருள், நன்னடை, நற்றொடை என்னும் பலவகை நறுமலர்பறித்து விராவி அன்பெனுநாரால் தொடுத்து, குடந்தை மகிழுந் தாரகப்பரமனார் வரை புரைதிருத்தோளை ஒப்பனை புரிந்து, அபிமானம் பங்கமுற, அங்கம் நிலனுறப் பங்கயத்தாளைப் பணிந்து பணிசெய்தேனேயன்றி, நூல் செய்தேனென்னுங்கருத்துடையேனல்லேனாகலின் சொல்வழு,பொருள்வழு முதலியபதராைக் கண்டுழி என்னைத்தூற்றி முனியாதீர். நுமதருஞ்சிறுகுழவியின் மிழலையெனக்கொணடு நான் உய்யுமாறு அருள்சுரந்து ஆசி புரிந்தருண்மின். நான் விதைக்கும் விதை சோடையாயினும் செந்தமி ழென்னுங் கொழுநிலன் வளமிகுந்ததாகலின் ஸ்ரீஅயோத்திமா நகரமான் மியமும், இச்சானகீ பரிணயமுமாகிய செந்நெல்லை விளைத்தது. சங்கல்ப சூரியோதயமென்னும் அமுதையும் இனி விளையச்செய்யும்.

---

* சொல் = நெல்.

# தற்சிறப்புப்பாயிரம்.

ஸ்ரீ

ஸ்ரீராமமயம்.

கவித்தலம் கல்விச்சாலைத் தமிழ்ப்புலவர்

## மு. வை. ஐயாத்துரைஐயரவர்கள்

இயற்றிய

பன்னிருசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சொல்லிலும் பொருளிலுந் தொடையிலும் நடையிலும் நுகளறவிளக்கியின்பந், துய்த்திடச்சானகி பரிணயந்தன்னையேதுங்கமுறுதமிழ்வசனமாய்.

நல்லியற்சோழமண்டலநங்கைவதனமாய்நாவலர்க்குறைவிடமுமாய், நாகரும்விழைகவித்தலநகரில்வாழ்கின்றநற்குணனயந்தசீலன்,

பல்லியங்குமுறுகடைவாயிலன்பார்த்திபன்பாத்துணும்பண்புமிக்கோன், பரமனடியன்றிமற்றொன்றிலும்பற்றிலான்பைந்தமிழ்க்கடல்பருகினோன்.

இல்லையென்றுரையாத குறையன்றிமற்றெலா மேய்ந்ததுரைசாமிமகிப, னிப்புவியுளோர்க்கெலாமின்னமுதமெனநன்கியற்றியிசைபெற்றனனரோ.

---

ஸ்ரீராமமயம்.

மகாவித்துவஜ்ஜன சேகரரர்கிய

திரிசிரபுரம்.

## கோவிந்தபிள்ளையவர்கள்செய்த

---

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாசகலவிலையோலை வாங்கன்மனைவிக்கென்றன் றென்றவாய்மை, நேசமவன்மனைவிக்கேபணிசெயலென்றனுமனூர்நிற்பராம, தாசனெனுந்துரைசாமி ஜாநகீபரிணயநூறனையுஞ்சொன்னான், கோசலநாடுறுநகர்மான்மியங்கூறியுண்மைநிலைகுறித்துமன்றே.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

சென்னைச் சருவகலாசாலைத் தமிழ்த்தலைமைப்புலவர்

கோமளபுரம்

## இராசகோபாலபிள்ளையவர்கள்செய்த

நிலைமண்டிலவாசிரியப்பா.

---

பொன்னியனெட்டிதழ்ப்பூம்பொகுட்டின்மேல்
மன்னியநான்முகன்வகுத்தபல்லண்டக்
குழுமலிற்கதழூபுகூருமிவ்வண்டத்
தெழுதருசிவணலிலிருநிலமகண்முகக்
கணிபொலந்திலகமென்றுசிகுபுலமை
திணியுறுசெந்நாத்தெய்வக்கவிஞர்
தெள்ளிதிற்றெற்றெனச்செப்புசால்பிற்றால்
எள்ளலில்சீர்த்தியினிதுவிரித்த
சோழநாட்டுத்தொல்பதிப்பைஞ்ஞீல்
வாழ்நெறிப்புரிதிருமன்றலிற்சத்த
பதிநிகழ்பின்னர்ப்பரிவினிழைக்குறு
விதிமுறைகடவாவியன்மங்கலவினைக்
குதநவான்பொரிதரவுறவளை இச்செஞ்சொற்
கதிர்க்குலையரக்கிதழ்ச்கடிமலர்மீமிசைக்
கவினவணவல்கனல்வயினீட்டும்
காட்சியதாமாற்கயலினமுகண்டெழீஇ
வீழ்ச்சியிற்றளவின்விழுமுகையாங்கண்
பாசடைகிடத்தல்பசுமணித்தட்டம்
மூசுபூம்பொரியின்முழுநோக்குடைத்தால்
தாழ்சடையான்பணிதலைக்கொடுவாணன்
சூழ்நகர்ப்புறநிலை இச்சுடர்த்திறலாழியால்
விறலழிவுன்னுபுமெய்த்தேத்தொண்டர்க்

அ

# தற்சிறப்புப்பாயிரம்.

குறுபணியியற்றுவானுற்றனசெம்மணி
குயினீணுவளகங்குலவெழிலுடைத்தால்
குயிறளிர்பொதுளியகொழுமாப்புகுதல்
அரிவையர்செவ்வாயமிழ்துறழ்மிழலை
வெருவராத்திக்கண்வீழ்தலேய்க்கும்
விண்ணம்போழவிரிபொழிலார்ந்ததால்
பண்ணமர்செந்தமிழ்ப்பழமறையிறைவிநால்
மறைச்சிலதியரொடுமெகிழூஉநடங்குயிற்
றுறைதருபொன்மனையுயர்மறுகணித்தெனச்
செவித்தலநிரப்புதொல்சிறப்பவையெல்லையில்
கவித்தலமோம்பல்செய்காவலர்காவலன்
சுதன்மையன்பராவருஞ்சுதன்மமரபினன்
குறுமுனிநிகர்ப்பப்பெறுபுலமிக்கோன்
பொய்யாதிநான்மைபுகாத்தனிவாக்கினன்
செய்யாமொழியாந்திருவாய்மொழிப்பொருள்
பன்னுபுகழிதரூஉப்பயன்படுமெல்லையன்
கன்னியர்மயக்குக்காலாழ்பயம்பு
தவல்புரிதறுகட்டடங்கரக்களிறு
துய்த்திலாதுறுபொருள்வைத்தியலிங்கத்
தெய்த்தபுன்ஞமலியினியல்பினர்ச்சேரா
வாய்மைசால்புரவோன்வேய்புரைதோளி
பங்கனுட்குழைந்துபழிச்சுமெம்மாளுடை
அங்கணன்பூங்கழலகக்கணிறீஇயினோன்
பூதூரெந்தைதாட்போதருளத்தோன்
பொன்னினைச்சுவணமென்றிங்கிலவணைப்போர்
ஆமாறறைதல்போற்சீமானிவனென
உரைசாமியமிலாத்துரைசாமிநாவலோன்
வான்கரைபுகழ்மையேய்சானகிபேரிணையம்
தன்னிகரில்லாத்தென்மொழித்தேத்து
மொழிபெயர்த்துதவியமுதுக்குறைவாங்கதற்
குழிதராவுலகெலாமுலப்பிலாவவன்குணம்.

நாடுகோவேவாவிலேனல்வாழிகூறுகோ
பீடுமொணியதிறல்பிறங்கவன்சீர்த்தி
வீற்றுவீற்ருகநாத்தழுதழுப்பப்
பாடுகோபாடுகோபாடுகோயானே.

---

ஸ்ரீமத்வரவரமுநயேநம:.

**வித்வான்**

காஞ்சிபுரம். இராமசாமிநாயுடு அவர்களால் செய்யப்பட்ட
அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

---

பொன்பூத்ததாமரையின்பொகுட்டுறையுநான்முகத்துப்
புத்தேளெண்டோட்
கொன்பூத்தமுவிலைவேற்குலிசியீரிருகோட்டுக்
குன்றமூர்வோன்
தென்பூத்தநற்றவத்தராதியர்வேண்டிடநிருதர்த்
தெறுபாக்கெண்ணி
இன்பூத்ததயரதன்றனிருந்தவத்தாெனாருமகவா
யியைந்துதோன்றி (க)
ஈரொட்டாண்டுற்றுருப்பருவத்திற்கோசிகன்ற
னெழின்மகத்தைப்
பாரொட்டாப்புகழொடுகாத்தருங்கொடியதாடகையாம்
பதகிதன்னைக்
கூரொட்டாசுகமொன்ருனுயிர்பிரித்தேயரக்கருயிர்
குடிக்குமாசைச்
சீரொட்டாக்கூற்றினுக்கோர்விருந்திட்டான்செழுந்தவத்தன்
செல்லறீர்த்தே (உ)
வேலையுலகம்புகழும்விழுச்செல்வத்தணிமிதிலை
விழைவினேகும்
காலைய்ருங்கானமதிற்கல்லொன்றைத்தனுதுதிருக்
காற்றூசொன்ருல்

சேலனிகர்மதர்விழியாச்செய்துபடர்ந்தலகில்சுவை
செறிவுற்றென்றும்
பாலனிகர்மொழியுடையெம்பராற்பரையைக்கடிமணஞ்செய்
பரமமூர்த்தி (௩)

சரிதமதைச்சானகீபரிணயமென்ருெருநூலின்
றமிழிற்செய்தீண்
டரிறபுநற்சீர்த்தியையுற்றவிர்தந்தான்றிரிசிரனு
லப்பேரெய்தித்
திரிவின்றேகுலவுதிரிசிரபுரம்வாழ்வுவந்தகல்விச்
செல்வனுகிப்
பரிவுகூர்பாகவதரடிப்பொடியாங்கோவிந்தப்
பாவலற்கே (௪)

இரவியிடத்தநுமனெனவன்புபூண்டொழுகியியற்
றமிழின்மும்மை
நரலையறிவெனுஞ்சோங்கினன்குகடந்தயோத்திமா
நகரமேன்மை
பரவுபுவிபரவிடச்செய்திருெழிபேறெய்தியிட்டோன்
பல்லுயிர்க்கும்
புரவுபூண்டொழிலெழிலிபோனிறத்தெம்பெருமானைப்
பொருவுகிற்பான் (௫)

நாலெட்டர்மறத்தொகுதிக்காலயமாயிலங்குவோ
னவைதீர்ந்தென்றும்
மாலெட்டாமனமதனின்மாலெட்டாமக்கரத்தை
மன்னவைத்தோன்
பாலெட்டாமொழிமடவார்மடலூருர்திருவுருவன்
பரிகொடைக்கு
நூலெட்டாப்புகழ்க்கருணன்போன்மெனவான்ருெடுத்து
நுவலற்பாலோன் (௬)

பரசமயக்கறையடிகட்கரியேறுத்திகழுநெடும்
பண்பன்மேலோர்

பரவுமிசைவாய்ந்திடுகோமளபுரத்தோன்முத்தமிழாற்
 பவ்வமன்னோன்
விரவுகனவினுந்திருவட்டாக்கரநற்சவியமுதே
 விழைந்துவாழ்வோன்
அரவுபரிமகிதலத்தோர்க்கரிசமயப்பெருமையறைந்
 தகந்தீர்ந்துய்ந்தோன்

இன்னபன்னருங்குணத்துக்கிலக்காமெம்மிராசகோ
 பாலவள்ளல்
பன்னியமைத்திடச்சிமானெனும்பேர்பெற்
 றவாசிதவப்பயனேயீதாம்
என்னவுருத்தில்லறமாநல்லறம்பூண்டொழுகிற்போ
 னென்றும்பொன்றுப்
பொன்னகருஞ்சமழ்க்கும்வளப்புவித்தலமீக்கவித்தலமா
 புரிக்குவேந்தன் (அ)

ஆதுலர்தந்தாயகமென்றனைவருமேத்திடுசுதர்ம
 வருங்குலத்தில்
ஓதருஞ்சீர்முத்தையன்றென்மரபிற்றேய்விலுவா
 மதியமன்னோன்
தீதுசெறியாப்புலனைந்துடையான்மைந்துடையான்
 றெவ்வும்வேட்கும்
கோதகல்சீர்த்துரைசாமிமூப்பனெனுமியற்பெயர்வாய்
 குரிசின்மாதோ (க)

---

திருநின்றவூர் B. A. தேவராஜபிள்ளை யவர்கள்செய்த

நேரிசைவெண்பா.

தந்தனனனங்கட்குத் தாரணியின் மீமிசையே
எந்தநூலொக்கு மிதற்கிணையே—முந்தை
உரைசாலுஞ்சானகியா ரொள்வதுவைநூலை
துரைசாமி நாவலவன் சொற்று.

ஸ்ரீ.

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

புரசை, இயற்றமிழ்ப்புலவர்

கோ. பள்ளிகொண்டான்பிள்ளையவர்கள்செய்த

## அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

திருமகட்குத்தாயகமாந்திரைகெழுபாற்கடலுதக்குத்
திரநண்ணித்
திருமலர்வந்தவனரனுதியதேவர் பணிந்தேத்தித்
தீயோராய
திருமருவாவரக்கர் புரிசெல்லலெலாம் விண்ணப்பஞ்
செய்யவன்னோர்
திருமருவிவாழமுன்ன ரளித்தவரப்பயனுதவச்
சிந்தைசெய்து (க)

ஒருமுநிவன் மகமியற்ற வதன்கணெழுவமுதேயோ
ருருவாக்கொண்டே
ஒருமுநிவனருளினிற்கு மாழியான் புதல்வனென
வுதித்துப்பின்போய்
ஒருமுநிவன் மகங்காத்துத் தடமதில்சூழ் மிதிலைநக
ருருத முன்னர்
ஒருமுநிவன் பன்னிதனக் கொளிர்மலர்ச்சேவடித்துகளா
லுருவளித்து (உ)

கார்முகந்தோய் வடவரையாற் கண்டதோகட்செவிகட்
கரசுதானோ
கார்முகக்குங் கடல்கடைந்த கவ்வமோககனவில்லோ
கவன்றிடாதிங்
கார்முகத்தானமர்ந்தெடுக்கு மாற்றலுள்ளாரெவரோயென்
றறையும்பெற்றிக்
கார்முகமொன்றிறுத் தெந்தாய் தற்பரையைமணம்புணர்ந்த
காதைதன்னை (ஙு)

முத்தலமும்புகழும் வடமொழியினின்றுந்தென்மொழியின்
முதிஞர்யாரும்
முத்தமுறும்படி யியற்றி யச்சிட்டுத் தந்தனனன்
மூவாக்கீர்த்தி
முத்தமிழின் சுனைகண்டம் முத்தலையார் கடலுண்ட
முநிநிகர்த்தோன்
முத்தலையான் புரம்வாழுங் கோவிந்தப் புலவன்பான்
முதுநூல்கற்றேன். (௪)

சுதன்மகுல மெனுநரலை கலித்தோங்கவருசுதா
கரனெம்மாலச்
சுதன்மனைப் பாதம்பணியு முத்தையக்குரிசின்முனந்
தொடர்ந்துசெய்த
சுதன்மமெலாந்திரண்டு பகீரதன்கொலாமிவனெனவே
துதிக்கவந்த
சுதன்மகிழ்ந்து பதின்மருக்கும் பகிர்ந்துண்ணுமனையறத்தின்
சூழ்ச்சிதேர்ந்தோன். (௫)

கோமளமாபுரம் வாழ்நாவலர்பெருமானிராசகோ
பாலகோமான்
கோமளசீமானெனும் பேரளித்தழைத்துக்கொண்டாடுங்
குபேரச் செல்வன்
கோமளர்களுமு புவிகன்னிகையாதிதானமெலாங்
கொடுக்கும் வள்ளல்
கோமள நல்லறச் சாலைகழ கமுதல்வைத்தளிக்குங்
கொள்கைபூண்டோன். (௬)

முப்பகையும் வென்ற முநிகணமும் வானவர்கணமு
மொய்த்துப்போற்றும்
முப்பரமாம் பொருள்களுக்கு முதலவனுஞ்சிராம
மூர்த்திபாதம்
முப்பொழுது மெப்பொழுது மறவாதுமுன்னமா
முளரிவைப்போன்

முப்பரம மறைப்பொருளுங்குரவர்பாற்கற்றுணர்ந்தம்
முறையினிற்போன்  (எ)

தாரகவாச்சியன் பெயரே யோதிடஞப்பயனெனவுந்
தணவாதென்றும்
தாரகவாச்சி யன்புகழே கேட்டல் செவிப்பயனெனவுஞ்
சம்பு வேத்தும்
தாரகவாச்சியனுருவே யுன்னலுளப்பயனெனவுந்
தருமமன்ன
தாரகவாச்சியன் கழலேவணங் கறலைப்பயனெனவுஞ்
சரதங்கொண்டோன்.  (அ)

சங்கத்தாற்றருக் கொணர்ந்தான்றமர்க்கெளியான்பிறர்க்கரியா
ன்றகைசால்சாது
சங்கத்தானறியாத வறிவித்து மயக்கறுக்குந்
தருமக்கல்விச்
சங்கத்தானே மிவனை பொறிபுயத்தானூர்த்துவபுண்
டரந்தயங்கும்
சங்கத்தான் பூமகளு நாமகளு மகிழ்ந்துறையுந்
தானமாயோன்.  (கூ)

கவித்தலைவனுணையெனக் கட்டுரைக்கு மாணையுளோன்
கவினற்காமன்
கவித்தலம்வாழ்நராதி பனிப்புவி மிடியாம்வெயிலொரீஇக்
களித்துவாழக்
கவித்ததனித் தண்குடையர்ன் மங்கலமாக் கரிபுரிதேர்
காலாளுள்ளோன்
கவித்தலைவர் கற்பகமெந் துரைசாமி மூப்பனெனுங்
கலைவல்லோனே.

---

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாயநமஃ.

வெஸ்லியன் மிஷன் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர்,

## ரா· ஸ்ரீநிவாச முதலியாரவர்கள்செய்த

நேரிசை யாசிரியப்பா.

---

பூமலிதாமரைப்பொகுட்டுறைபுத்தேள்
தேமலியிதழிச்செஞ்சடைவானவன்
புரந்தரனாதியர் போற்றிவணங்குபு
நிரந்தரமரக்கர் நெடுந்துயர்சாற்ற
அன்னவர்க்கிரங்கி யருளியவாற்றால்
பன்னருஞ்சீர்த்திப் பார்த்திபன்றயரதன்
பெருமகத்தெழுந்த பெருஞ்சுவை யமுதோர்
உருவெனத் தாங்கி யொருமகவாய்வந்
திரெட்டாண்டு மியைவுறுமுன்னர்ப்
பாரெட்டாத்தவம்பல்குறுகோசிகன்
வேள்விக்கூறு மிகநனியியற்றும்
தோள்வெற்பேயெனச் சொற்றதாடகை
மைந்தரோடவிய மனத்திலுன்னி
மைந்துடையொருசரம் வழங்கிமாமுனி
மகமதைக்காத்து வான்மிதிலைக்குட்
புகவிழைந்தேகும் போழ்திற்கல்லொன்
றிளநீரிரண்டை யேந்திமுன்வர
வளமலிகழற்கால் வான்றுகள் பெய்தே
வில்லியலொண்ணுதன் மெல்லியலாக்கி
அநகத போதன ரடிபணிந்தேத்தும்
சனகநராதிபன் றந்தசிற்பரையைச்
சங்கரன் வில்லிறுத் தங்கவளிப்பப்

# தற்சிறப்புப்பாயிரம்.

பொங்கமார் கடிமணம் புரிந்தகாதையை
வடமொழிக்கிணங்க மனனுறவமைத்துத்
திடமுந்திலங்கு தென்மொழியதனால்
சானகீபரிணய மென்ஞெரு தமிழ்நூல்
மானவரேத்து வழங்குமாதந்தான்
பொன்னுட்டினுமுய ரெந்நாட்டையும்வெலும்
தென்னுட்டிடையமர் பொன்னுட்டலையெறி
காவிரித்துறையிற் கவினுறவின்றேன்
பூவிரித்தளிகள் புரிந்துண்வளனும்
வாட்டகட்டகட்டின் மோட்டிளவாளைதாய்
விரிதலைக்க முகந்தருபழனுகுத்து
விண்மணியென்னுமொண்கதிர்ச்செல்வன்
இரதத்தார்த்தவேழ்துரகதமருட்டி
மீண்டுறுதண்பணை யீண்டுறுவளனும்
சொல்லுக்கடங்கா தெல்லுற்றேங்கும்
புவித்தலக்கணியாம் கவித்தலமதனில்
சுதர்மகுலமாந் தொல்லார்கலிப்பால்
விதுவெனவந்து மிடலுடைத்திரிசிரன்
பெயரிற் குலவும் வியனுறு நகர்வாழ்
கோவிந்தவள்ளல் கோட்டமின்றளித்த
கல்விச்செல்வன் காவலர்புகழும்
கோமளபுரம்வாழ் நாமகனுவன்
தராதலம் போற்று மிராசகோபாலன்
வாமார்ந்திலகு சீமானெனும் பெயர்
தந்தலைத் திடவெழிற் சிந்தையுவந்தோன்
புறமதக் கரிகட் கெறுழரியேறனுன்
வளையாழிக்குறி வளர்புயத்தணிந்தோன்
திருமண்ணிலகவருமதிமுகத்தோன்
எண்ணுன் கறமு மியலுறநடாத்தி
நண்ணுச்சிறப்பி னவைதபநோற்று
இத்தரைபராவும் முத்தையப்பெருமான்

தொல்குடிவந்த நல்லறவுருவன்
ஓவியக் கவின்பெறு பாவையர்யாரும்
மடலூர்தரச்செயடலூர்மதனன்
ஆவலின்வந்த பாவலர்க்கெல்லாம்
கற்பகமனைய பொற்புறு கொடையான்
மாப்புவிபுகழ் துரைசாமி
மூப்பனென்றுலகு மொழிநாவலனே.

---

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ

இயற்றமிழாசிரியர்

கோ. இராசகோபாலபிள்ளையவர்கள்

மாணாக்கரும்

சென்னை S. P. G. ஹைஸ்கூல் தமிழ்ப்புலவரும், ஆகிய

ப. வாசுதேவமுதலியாரவர்கள்செய்த

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உலகெனலாகியுயிர்க்குயிராகியுயர்மறைதுணிபொருளாகி
அலகறுமன்பர்க்காரமுதாகியரியபேரின்பமாய்நலங்கொள் [ல்
பலகுணக்கடலாய்ப்பகரருஞ்சீர்த்திபல்கியவயோத்தியம்பதியி
இலகவந்துதித்தவிறையவனிறைவியிருங்கடிமணவினைக்கதை
யை. (க)

வடமொழிதனினின்றமுதுறழ்தமிழின் வளம்படவனப்பொரு
பத்தும், இடனுறவமைத்துக்கேட்குநர்படிப்போரிருசெவிநாச்
சுவையூறத்,திடனுறத்தொடையாத்தெள்ளிதிற்புனைந்தான்றெ
ய்வரும்விழைதரவென்று, மடனிகுதிறமிக்கௌவியமவித்தவ
ல்லுநர்நன்குவாழ்த்துறவே. (உ)

தன்குணநுதலுந்தனிப்பெயராகித் தகைகொள்சீமானெனுந்த
ணவா,இன்குணநாமமிராசகோபாலவியற்றமிழ்ப்புலவர்தமேந்
தல், மன்பெறத்தந்தவான்றிருச்செல்வன்மாண்கவித்தலநகர்ம
ன்னன், நன்குணவைப்பாமாயிருஞாலநவி றுரைசாமிநாவல
னே (ங)

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

இயற்றமிழாசிரியர்

# கோ. இராசகோபாலபிள்ளையவர்கள்

மாணக்கர்

# மயிலை. அ. சண்முகபிள்ளையவர்கள்

பாடிய

## கலிவிருத்தம்.

முப்பரம் பொருட்கொரு முதல்வன் மூலத்தோங்
கப்பரம்பொருளரிந்தம னஞ்சன
கப்பெருந்தகைதருங் கனியைவேட்டெழும்
அப்பெருஞ் சானகிபரிணயம்மரோ. (க)

சொன்னயம்பொரு ணயந்துறைந் தகத்தியம்
என்னநன் கெம்மனோர்க் கினிதினல்கினன்
பொன்னகரொனநலம் பொலிகவித்தலத்
தன்னிகரிலாத் துரைசாமிச் செல்வனே. (உ)

இன்னவன் றனக்கெனக் கியற்றமிழ்க்கடல்
நன்னயமோடு பகரிக்கு நாவலன்
என்னையுமல்வழி யெய்தொணதருள்
மன்னியவிராச கோபால வள்ளியோன் (௩)

முத்தலையானகர் முன்னிச்செய்தவம்
இத்திருவுருக் கொடிங்கெய்ந்ததாமெனச்
சொற்றிடு கோவிந்தத் தோன்றல்பானனி
முத்தமிழ்ப் பரவையை முகந்தநீர்மையால். (௪)

பூனதமாட மீப்பொலி கவித்தல
மாநகர்வயினெவரும் மகிழ்ந்திடத்
தானனிபுரத்தலாற் றகைமைசான்றசீ
மானெனுந்தனிப்பெயர்வழங்கலேற்றுளான். (௫)

---








ஸ்ரீராமமயம்.

# ஜாநகீபரிணயம்.

## முதலங்கம்.

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்:

திருக்கிளர்வானவரின்னற்கடல்கடப்பத்
தென்கடலைக் கடந்திலங்கை சென்றியாணர்
உருக்கிளர் விண்ணுடியர் வெஞ்சிறை யொழிப்பா
னொருதனியேசிறை கிடந்தாட்காழிதந்து
செருக்கிளர் வாளவுணரொடுமக்கன் யாக்கை
செகுத்துமீண்டிராகவன்பொற் றிருத்தாள் சார்ந்த
மருக்கிளர்காற்கான் முளைகாலிணையெக்காலு
மறவாமே வழுத்துகிற்பே மறுவில்லேமே.

மலரவனை நேருங் கும்பயோனியி னுடைய குண்டிகையி னின்றுதோன்றி, உலகளந்தறிதுயின்மேவும் அரங்கேசன்றிருவடியைச்சார்ந்துவந்து, ஆனைக்கா அரனை மஞ்சனயாட்டி, காசியையொத்த ஐயாற்றையும், கண்டமென்னுங் கடிநகைாநிகர்த்தகவித்தலமாநகரையுந்தனது தீரத்திற்கொண்டு, இரத்திநாகரனை மணந்தொழுகுதலின் கங்கையெனுங் கடவுட்டிருநதியோடெதிர்ந்து, கீடந்தோயுமேனும் வீடேயுதவாநின்ற காவிரிமாநதி யெஞ்ஞான்று மிடையீடின்றிப்பெருகுதலாற் சந்திரன்தவழச்செழித்துச் செம்மாந்த பூகத்தினுடைய தாறுகளையரியவெடுத்த கொடுந்துறடுபோலுயர்ந்து கதிர்வளையுஞ் செந்நெற்பைங்கூழ் வளராநிற்கும் பண்ணைகள் சூழ்ந்த சோணாட்டில்,பொன்னாலாகிய மதிள் சூழ்ந்ததாய்,கொடிநிரைநிவந்த வெள்ளிமலையைப்போன்ற மாடங்கள் நெருங்கியதாய், பிரமனுல

குபோலப் பிராமணர் வீதியுற்றதாய், அளகாபுரியொத்த ஆவணத் தெருவுள்ளதாய், இந்திரலோகமென்ன அரசர் மறுகு கொண்டதாய், கந்தருவ நகரம்போல வல்குல் விற்கும்பூங் கொடிகளுடைய அழகுள்ள வீதியோர்புறத்தடர்ந்ததாய்த் திகழ்ந்து, தெய்வப் புலமையென்னும் பெருமைகொண்ட கவிச்சக்கரவர்த்தியாரை நேரான கற்றவர்கள் வாழுந்திருக்குடந்தைமாநகரைநாட்டியத்தில் வல்ல நடனொருவன்சார்ந்து,பங்குனித் திங்களில் தாரகப் பரமனுக்கு நடவாநின்ற நவமித்திருவிழாவையும், அவ்விழாவைச்சேவிக்கத் தேசதேசங்களினின்று போந்து கூடிய மேலோர்கூட்டத்தையுங் கண்டுமகிழ்ந்து குண்டலமணிந்த காதைக் குண்டலத்திற்கொடுத்து, ஓ! சபையில் வீற்றிராநின்ற மேன்மக்களே! என்னைக்குறித்தென்னை கழறுகின்றீர்கள். நவரசமுற்றதும், நல்லகருத்துற்றதும், புதுவதுபுனைந்ததுமாகிய வோர் திப்பியநாடகமும்மாற்காட்டத்தக்கதென்று சொல்லுகின்றீர்களோ. ஆச்சரியம் ஆச்சரியம், எவ்விடயத்தி லெனதுகருத்துற்றதோ வவ்விடயத்தையே தாங்களுங்கொண்டது எனது பாக்கியமேயென்றனைத் தாங்குப்போட்டிருந்த வெழினியைநோக்கி, ஏநடி! இங்கே வாவென,வந்தேன் அத்தானென்றுவந்துசபையாரைவணங்கிப் பொன்னங்கொடிபோல நுடங்கிநின்றவளை நடன்பார்த்து,பெண்ணே! எனதுகண்ணே! அவைக்களத்தாருடையவாணையைக்கேட்டாயோவென்றனன். அந்நடி மோவாயிற் கைகொடுத்துப்பெருமூச்செறிந்து,கேட்டேன்கேட்டேன்,இரகுநாதருக்குப் பாரியாய் நிச்சயித்திருக்கிற ஜானகிபிராட்டியாரை மாயையில் வல்லவனானவோரிராக்கத னந்நாதருடைய வடிவங்கொண்டு கொண்டுபோக முயல்கின்றனனென்றுகேள்விப்படுகின்றேன். ஆகையால் வருந்துகின்றனென். என்செய்கோவென்றனள். கண்ணுள்ளனவளைநோக்கி நீ விசாரப்பட்டது போதும்போதும்,நிறுத்து. சீதாகலியாணத்தை முடிப்பிக்கும்பொருட்டுத் திரிலோகத்திலு மேன்மைபெற்ற பகவான் விசுவாமித்திரமாமுனிவ னொன்னலேற்படுத்தப்பட்டிருக்கின்றார். புத்தேளிர்களோ

டெல்லாவுலகங்களையும் மாறுகப்படைக்கத்தொடங்கிய வம்மா முனிவர் மைதிலியாருடையதிருமணத்தை முடிப்பர்.ஐயுறேல், இச்சவையார்களானந்திக்கும்பொருட்டு நாம் கானஞ்செய்யத் தொடங்குவோமென்றனன். அந்நடி அத்தான் ! இச்சபையி லுள்ள கல்விமான்கள் கண்டு களிக்கும்படியாகியநாடகம் யா தெனக் கருதுகின்றேனென, நடன் அவளைநோக்காப் புன் முறுவல்கொண்டு ஏடி! பூங்குயிலே! ஜானகீ பரிணயமென்னு நாடகத்தை நினக்குக் கற்பித்தேனன்றே? மறப்பெனுங்கள் ளன்கையிற் பறிகொடுத்துவிட்டாயோ ? சொல்லென்றனன். நடிநடனைப்பாரா அத்தானத்தான் இப்போதுணர்ந்தேன், மகானுபாவராகிய யக்கிய ராமதீட்சிதருடைய புத்திரசிகாம ணி சாகரத்திற்றோன்றுஞ் சந்திரனைப்போன்ற ராமபத்திர தீ ட்சிதராலன்றோ வந்நாடகமியற்றப்பட்டதென்றனள். நட னதைக்கேட்டு,ஆமாம் நன்கு ஞாபகங்கொண்டனே. கசடறக் கற்றுயர்ந்த செந்நாப்புலவர் சந்நிதியில் நீலகண்ட தீட்சிதராற்பு கழப்படுகின்றவரும்,கொண்டாஜௌதிஷிகரென்கிற வித்துவா ஹற் கனப்படுத்தப்படுகின்றவரும், ஸ்ரீபாலகிருஷ்ணரென்னும் தேசிகராற் றிருவருள் செய்யப்படுகின்றவரும்,சொக்கநாத தீட் சிதருடைய மருகரும்,இராமதாசருமாகிய இராமபத்திரதீட்சி தர் இரகுநாதர் சரித்திரத்தைப்புனைந்துரைத்துத் திரிலோகத் திலு மேம்பாடுபெறுகின்றனர். பரதாசாரியார் உடம்பாட் டின்படி யபிநயசாஸ்திரத்தை விளங்கச்செய்து நாமும் பே றுபெறுவோம், நீ கானஞ்செய்வாயென்றனன். அவ்வேலை நடி, குமரிகளுடைய வைம்பாலில்வனைந்திருக்கின்ற வகுளமா லையின் மணத்தாற் குமரர் கலவியின் முடிவிலுண்டாகின்ற தங்களயர்வைப்போக்க, அக்குமரிகள் சாளரங்கடோறுமந்த மந்தவருந் தென்றலினால் வியர்வைப் போக்குவார்களென் று கானஞ்செய்து மற்றொன்றைத் தொடங்குமுன் வெருவின வள்போலப் பாவனைசெய்து கானஞ்செய்யாது திரையினுட் சென்றனள். அவ்வேலை நடன், ஏடிஏடி! பூண்முலை! எங்கே குகின்றாயென்று தொடர்ந்துபோய், நினது சிறிது கானத்

தைக்கேட்டுச் சவையார் மிகவு மாநந்திக்கின்றனர். அது கண்டு நீ மிகவுமுள்ளமகிழாது, அச்சுற்ருேடுவானேன் வெளியில் வாவென்றனன். அக்கண்ணுளாள், இராக்கதனெருவனுங்குவருகின்றனனே, அவனைக்கண்டு நான் வெருவுருதிருப்பேனேவென,நடன் ஏ பூண்முலே! ஆங்குவருகின்றவன் இராவணனேடு திரிந்துகொண்டிராநின்ற சாரணனுடைய படிவத்தைத் தரித்துக்கொண் டிந்நாட்டிய நிலனிற்போதுகின்றனனென்று கருதுகின்றேன். மேல் நாடகத்தை நடத்துவோம். அச்சமடையாதி வாவென்று கைப்பற்றி அவைக்கணழைத்துவந்தனன். உடனே சாரணன்வந்து தூரத்திற் கண்ணைச்செலவிட்டு, ஆங்குப்போதுகின்றவன் யாவன்? தேவாசுரர்களெல்லாரும் பூசிக்கும் பாதாரவிந்தத்தை யுடையாராயும், திரிலோகாதிபராயும், நமக்குச் சுவாமியாயுமிருக்கிற இராவணேசுவரரால் மிதிலாதேசத்துக்குச்செல்ல வேவப்பட்டுவருஞ் சுகன் போற்ருேன்றுகின்ருனென்று நின்றனன். உடனே சுகன் சாரப்போந்து சாரணனைநோக்கா, நீ யிங்கண்வந்த காரியமென்னையெனச் சாரணன் நீ வந்தகாரிய மென்னென்றனன். சுக னவனை ப்பார்த்து நான் பின்னர்மொழிகின்றனென். நீ வந்தவா றுரைத்தியெனச் சாரணன், ஏசுகனே! கேண்மோ, ஜனகருடையயாகபூமியி லவதரித்தவளாயும், மூன்றுலோகத்திலுமுள்ள பெண்கட்கருங்கலனுயுமிருக்கிற ஜானகியை நமக்குத்தரும்படி ஜனகராசனிடத்திற் பேசிவருவாயென நமதரசராகிய இலங்காதிபராலேவப்பட்டு வந்தேனென்றனன். சுகனதைக்கேட்டு, தெய்வமகளிர்களெல்லாரையு மிலங்கையிற் கொண்டுவந்து சிறைச்சாலேயிலடைத்தது குழந்தைகள் விளையாடும் வண்டல்விளையாட்டுப்போலான இராவணனுர்க்கு மக்கட்பிறப்பினரான ஜனகரிடத்தில் வணக்கம்வந்தது ஆச்சரியத்தினுமாச்சரியம்,சீதையைப் பலாத்காரமா யெடுத்துப்போக இராவணனுர் கருதாததற்குக் காரணமென்னையோவென்றனன். சாரணன் சுகனே! அரம்பையிட்ட சாபத்தை நீயறியாயோ? அஃதன்றியு நட்பினரான ஜனகர்வருந்த நமதரை

யர் சீதையைச் சிறையெடார். ஆனதுபற்றி நீ சொன்ன துசிதமாகாதென்றனன். சுகன் சாரணனே! கேட்பாய், இரதியினு மழகுமிக்க மைதிலி யிரகுபுங்கவனுடையகட்டழகையும், வீரத்தையும், குணத்தையுங்கேட் டவனையே பதியாயடைவேனென்கின்றனள். ஜனகரு மதைக்கேட்டுச் சம்மதித்திராவணருக்குப்பயந்து, சீதைக்கு மிராமனுக்கும் பரிணயமுடிக்கும்படி புரந்தரனாதிக்கடவுளர்களை யின்னேபடைக் கின்றனெனென்றுதொடங்கிய விசுவாமித்திரனைக் கேட்டுக்கொண்டிருக்கின்றனர். அவ்விசுவாமித்திரனு மதற்கிணங்கித் தலைப்பட்டுத்தான் யாகஞ்செய்வதாய்ப் பெயரிட்டுக்கொண்டு இராமனுடன் தசரதர் கோசலைமுதலானவர்களை யழைத்துவர அயோத்தியாபுரிக்குச்சென்றிருக்கின்றனன். ஜனகர் தமக்கிளையவனை குசத்துவசனை மிதிலையில் வைத்துவிட்டுக் காதிகாதலனால் மகத்துக்கழைக்கப்பட்டவர்போல வெளியிட்டுக்கொண்டு புத்திரியான பூமிஜாவுடன் கோசிகனாச்சிரமத்தில் வந்திருக்கின்றனர். மகருஷி யிராசருஷியாகிய வவ்விருவருடைய கபடச்செயலை யோருங்காற் சீதைக்கு மிராமனுக்குமே மண நடக்குமென் றெண்ணுகின்றனெனென்றனன். சாரணன் சுகனைப் பார்த்து, அப்படி முடிவதானால் நாமென்செய்குதும். அரசனுடைய ஆணைப்படி ஜனகர் வசிக்கிற விசுவாமித்திர னாச்சிரமத்துக்குப் போகின்றேனென்றனன். சுகனவனைப்பார்த்து நீ யாங்குச்செல்வதிற் பயன்யாதெனச் சாரணன் சுகனே! பயன் யாதெனலாமோ? பிரமகுலத்திற்பிறந்தவர், அதிகபிரதாபமுள்ளவர். இந்திராதியரையாளுகின்றவர். வெள்ளியங்கிரியை யீசனோடெடுத்துப் பந்தாடினவர், தாமே விரும்பி மணமகனாகின்றேனென்ருற் பெண்கொடேனென்று மறுப்பாருமுளரோவென, சுகன் சாரணனே! கேட்டி. அவ்வாருயினும் ஜனகர் தமது பெண்ணினுடைய கருத்துக்கியைந்து மறுப்பரென்றனன். சாரணன் சிறிதாலோசித்து, சுகனே! இலங்கேசருடைய குலப்பெருமைநிற்க, அயனருளிய அளவிலாவாயுளார். அரனீந்தவாளர், செவியடங்காக்கேள்வி

யர், மதனன் வியக்குஞ்செவ்வியர், திரிலோகநாதர், த சக்கிரீவர், அவரைவிட்டு மானிடச்சிறுவனாகிய இராமனி டத்திற் சீதையம்மா ளெவ்வாறாசையுற்றனள்? இலங்காதிபதி சானகியையடையும்பொருட்டு, நாமிப்போது செய்யவேண் டியது யாதெனிற்சீதை யிராமன்பாற் கொண்டிராநின்ற வன்பைத்தொலைத்து நமது சுவாமியை வேட்கும்படி செய்ய வேண்டியதென்று கருதுகின்றேனென்றனன். சுகனதை க்கேட்டு, சாரணா! சீதையிராமனைத்தவிர வேறொருவனை யு முன்னவேமாட்டாள். இதனில் நீ முயல்வதுபயன்தராது. ஆ னலொரு சூழ்ச்சிசொல்கின்றேன். அதைச்செய்யின் முடியி னுமுடியும், தசரதர்முதலாயவர்களைக் கலியாணத்துக்கழைத் துவர அயோத்திக்குப்போயிருக்கின்ற க்ஷத்திரியப்பார்ப்பா னாகிய விசுவாமித்திரனுடையவரவைத்தடுத்து, இராமனைப் போல விராவணரும், விசுவாமித்திரனைப்போல வித்யுஜ்ஜிஹ் வனுமாயையா லுருவங்கொண்டு ஜனகர்பாலணுகவேண்டுமெ னலும், சாரண னச்சூழ்ச்சியைக் கேட்டுமகிழ்ந்து சுகனே! நீமொழிந்தது நன்றுநன்று. நீ சொன்னவுபாயத்தா லிராசகாரி யங்குறைவின்றி நிறைவேறும். சாகேதத்தினின்றுபோதுங் கோசிகனைத்தடுப்பது ஆயிரங்களிற்றின்வலியுள்ள நமது தாட கையாலன்றி மற்றொருவராலுமொண்ணாது. அத்தாடகையை யேவுவமே லோரிடத்திற் கரந்திருந்து வழியில்வரும்போ து அரசவந்தணனைக்கொன்று மென்றுதின்றுவிடுவாள். கொ ல்லுமுன் விசுவாமித்திரனுக் கன்னவளுடைய கொள்கை தெ ரிந்தாலும், பெண்ணென்றிரங்கிக் கொடுமைபுரியாது விட்டு விடுவனென்றனன். சுகன் நன்றுநன்று, அவ்வாறேசெய்யும் படி தாடகையை விரைவில் நீசெல்லவிடுதி. நான்சென்று இ லங்கேசர்க் கிச்சூழ்ச்சியையுரைத் தவரையழைத்துவருகின்ற னெனென் றகன்றுபோயினன். அக்காலை யிருகடைவாயினி ன்று சிந்தாநின்ற தசைகளைவிரும்பிக் கையேந்திப்பற்காட்டிக் கெஞ்சுகின்ற கழுதுகளும், விரிசிறைக்கழுகுகளும் புடைசூழ க் கருவரையெனத் திரண்டு நீண்டு நான்றுடாநின்றகொங்கை

களால் கருமுகில்களடிபட்டு வாய்வெரீஇக் கதறித் திசைதிசை யோடத்தாடகைவந்தனள். வந்தவளைநோக்கி நின்றநிருதன் ஏ பெரியவளே! சாரணன் நமஸ்காரஞ்செய்கின்றேனென வ த்தாடகை சாரணு! தீர்க்காயுள் பெறுதியென்றனள். சார ணன் அம்மா! அதிவிரைவாய் நீ யெவணேகுகின்றாயென அவள் சாரணு! கேண்மோ. விசுவாமித்திரன்புரியு மகமழியு மாறு செய்யாமையின்பொருட் டம்முனிவனுடைய மித்தி ரனாகிய பரசுராமனாற் பிரார்த்திக்கப்பட்ட நமதாண்டகையா கிய தசக்கிரீவனுடைய வாணையை மாரீசனுக்கறிவிப்பான் செல்கின்றேனென்றனள். சாரணனதைக்கேட்டு நகையாடி நாசியிற்றர்ச்சனி விரலைநிறுவித்தலைதுளக்கி விசுவாமித்திரனு டைய வுபாய நன்றாயிருக்கின்றது. சதுர்வித வுபாயங்களினு மிகுந்தவல்லவனாதாற் பிறந்தயோனியையும் வேறுபடுத் திக்கொண்டான். ஏதாடகை! சீதைக்குமிராமனுக்குங் கலி யாணஞ்செய்யும்பொருட்டுச் சனகனும் விசுவாமித்திரனுங் கூடி யாகமென்று பொய்யேற்பாடுசெய்துகொண்டிருக்கின்ற னர். நமதுபெருமான் இராவணரோ மைதிலியை நினைத்துநி னைத்து அனலுற்றமெழுகுபோ லுருகுகின்றனரென, தாட கை குழந்தாய்! சாரணு! அவ்வாறாயின், அம்மைதிலியை நானொருவருமுணராது தூக்கிக்கொண்டு வருகின்றேனென்ற னள். சாரணன் தாடகை! அது யுக்தமன்று, இராவணர் திக் குவிஜயஞ்செய்தகாலத்தில் இமயமலைச்சாரலி லோர்நாள் தங் கியிருந்தனர். அன்று குபேரனுடையகுமாரன் நளகூபர னை யணையச்சென்ற அரம்பையைநோக்கி, அத்தயக்கிரீவர் மோகங்கொண் டவளை யிரந்தனர். அவ ளுடன்படேனெ னவும், கேளாது மேல்வீழ்ந்தனர். வீழ்கையி லவள்சினந்து அடாபாவி! நின்னைவிரும்பாத மாதர்களை, இனிவலிசெய்து புணர்வாயே லெனதுமொழியால் நீ கேடெய்துகவென்று ச பித்தனள். நீ சீதையையபகரித்துவந்து மவளிணங்காவிடின் நீதூக்கிச் சுமந்துவந்ததுதான் பயனாய்முடியுமாகலின், இலங் கேசர் சீதையை யடையும்பொருட்டு நானுஞ்சுகனுஞ்சூழ்ந்த

சூழ்ச்சி யீதென்று முன்னுய்ந்து துணிந்ததையுரைத்தலும், அக்கொடியாள் கேட்டுவந்து சாரணனைக்கொண்டாடிக் குழந்தாய்! மன்றல்செய்யும்பொருட்டு யாகமென்றுபெயரிட்டு வஞ்சஞ்செய்வோர்களை, நாம் வஞ்சனையாலேயே வேறல்வேண்டும். நான்சென்று விசுவாமித்திரன் வரும் வழியிலிருந்து அவனை விழுங்கிவிடுகின்றேன். நீ யிப்போதே யிலங்கைசார்ந்தரசனை யழைத்துவாவென் றுரைத்தேகினள். பின்பு சாரணன் சுகனழைத்தலு மிராவணர் தாமதியாது வந்துவிடுவர். நாமிலங்கைக்குப்போகவேண்டுவதில்லை. அரசமாதவனைக்கொல்லத் தாடகைக்குதவியாய் மாயையில்வல்ல மாரீசன் சுவாகுமுதலியோரை யனுப்புவோமென்று புறம்போந்தான். அவ்வேலை சுகனுற்கூவப்பட்ட இராவணன் வித்யுஜிஹ்வனோடுவந்து, ஏசாரணா! என்செய்கேன், சீதையால் யான்படுமின்னலை யாரிடத்துரைசெய்தாறுவேன். பூமகளான அவளதுபொற்பையுங் குணத்தையுங்கேட்டபின்னர் உலகிலுள்ள மற்றை மகளிர்களெல்லாருமெனக் காணுகத்தோன்றுகின்றனரே. அதையறிந்து மதனனென்னோடு மாறுபுரிகின்றனன். சீதையைப்பெருவிடின் இறந்தாலன்றி யவ்வநங்கனுடைய வலியைக் கடக்க வலியிலேன். யான் சீதையைப்பெறுமாறு புரிதியெனச் சாரணன், இலங்காதிபரே! நீர் இராமனைப்போல வுருக்கொள்ளும், ஜானகியையானே நுமக்குக்கொடுக்கின்றேன். இராமவேடத்தைத்தரிக்க வுமக்கு மனமில்லாவிடின் சீதையை மறந்துவிடும். அம்மைதிலி யிராமனிடத்திற் கொண்டிராநின்ற வன்பைவிட்டாலும், இருபதுகையும் பத்துத்தலையுமுடைய வும்மை விகாரவடிவனெனக்கொண்டு விரும்பாளென்றனன். இராவணன் ஓசாரணா! ஓர் மானிடப்பெண்ணை நான் காதலித்தகாரணத்தால் தசக்கிரீவன்த சக்கிரீவனென்று மும்மையுலகமும் வழுத்தும் பெருமைசான்ற வென்னை நானேவெறுத்துஇராமனைப்போல வேடங்கொள்வதினெனக்கு நாணந்தலைக்கொள்கின்றதெனச் சாரணன்கைகுவித்து இலங்கேசரோ! கேளும். விதர்ப்பதேசத்து மன்னவன் மங்கையாகிய தமயந்தி

யை மணம்புரியக்காதலித்து இந்திரன்முதலிய சில வமரர்கள் மனிசனுகிய நளச்சக்கரவர்த்தியினுடைய வேடத்தைத்தரித் தனரென்பதைக் கேட்டிலீரோ. நீரிப்போது செய்யத்தொடங் குவது புதிதன்று. விண்ணவர்களும் விரும்பிச்செய்த வினைய மேயென்றனன். அவ்வேலை யாங்குநின்ற வித்யுஜிஹ்வன் அவ் விந்திராதிவிபுதர் நளனுடையவேடந்தாங்கியுந் தமயந்தியை யடையாததுபோ லிவ்விராவண னிராகவனுடையமேனியை க் கொண்டாலுஞ் சீதையைப்பெருனென்று மனத்தினுட்சிரி த்து, அஃதை வெளிக்காட்டாது இராவணனைத்தொழுது ஐய! சிறிதுபொழுது இராமனுடைய வேடத்தைத்தரிப்பதி லித்த னையாலோசனையென்னை? பாணிக்காமல் நாம் விசுவாமித்திர னுடைய ஆச்சிரமஞ் சாரவேண்டுமென்றனன். இராவணன், அவ்வித்யுஜிஹ்வனையும், சாரணனையும் பாரா நீவிர் மொழி வதினின்று நானெழிவதில்லை. கோசிகனுச்சிரமஞ்செல்வோ ம். புஷ்பகமென்னுமுன் அவ்விமானம்வந்தெதிர்நின்றது. வித் யுஜிஹ்வனேக்கி மூன்றுலோகத்திலிராநின்ற வெழின் மிக்க பிணுக்களெல்லாரு மிலங்கேசராகிய வுமக்கேயுரியவர்களென் றற்குச் சான்று, திக்விஜயஞ்செய்தகாலத்தில் நீர்காதலித்த தடமுலையார்களைத் தொகுதிதொகுதியா யேற்றிவருங்காலையப் பெண்களுடைய பெருமூச்சுப்பட்டு வேறுவேறு வண்ணங்களை க்கொண்டிராநின்ற முத்துமாலைகளாற் ருேற்றமாறிநின்றதித் தெய்வ விமானமேயன்ருேவெனத் தசக்கிரீவ னதைக்கேட் டுச் சிறிதுசினமு நாணமுமுற்ற டாவித்யு ஜிஹ்வா! நீசொன்ன வாறன்று. வீரமில்லாதவனைப்போல நமதாண்டகை யிராவண னிஞ்ஞான்று தமதியற்கையுருவத்தைமாற்றி வேறுருக்கொ ண்டு வஞ்சஞ்செய்யத் தொடங்குகின்றனராகலின் நாமு நமது ருவைமாற்றி மாறுதோற்றம் பற்றவேண்டுமெனக்சொடு விமா ன மவ்வாறிருக்கின்றதென நினைக்கின்றனெனென்று, வித்யு ஜிஹ்வா ! இன்னும்பாராய், விமானத்தைக்கண்டு சித்தர் வித் தியாதரர் கின்னரர் கந்தருவர் முதலாகிய விண்ணவரெல்லா ரும் வணங்காமலுந் துதிக்காமலுமிருக்கின்ருர்கள். விமானத்

திசாசரருடைய ஆர்ப்பையடைக்கும் விட்புலமடந்தையர்களுடைய கானமு மவர்நடனமும் பல்லியமுழக்கமு மில்லையென்றனன். அவ்வித்யு ஜிஹ்வன் திரிலோகாதிபதியே! மிதிலைநாடியை யடையுமாறு கருதுவதையன்றி வேறொன்றையுமிப்போது நோக்கற்க. சீதையை மணம்புரிந்து மேகமுமின்னலும்போல நீரிலங்காபுரிக்கேகும்வேலை யெல்லா முன்போலாகும். சுவாமி! விமானமீ திவரலாமென்றனன். பின்னர் இராவணன் வித்யுஜிஹ்வனுடனும், சாரணனுடனும், புட்பகமேற்கொளலு மத்தேவவிமானங் காயம்வழிச்சென்றது. சாரணனேச்ஜெகதிசரோ!இலங்கைநாதரோ!விமான மதிவேகமாய்ச் செல்கின்றது. பூமி கீழேவிழுகின்றாற்போற் றோன்றுகின்றது. கடல் விரலாற்கீறியகோடுபோற் றோன்றுகின்றது. உதயகிரி அஸ்தகிரி சிறு மண்ணாங்கட்டிகள்போலத் தெரிகின்றனவெனறோதுங்காலை வித்யுஜிஹ்வன் இலங்கேசரே!விசுவாமித்திரருடைய பன்னசாலைக்கணித்தாய் வந்துவிட்டோம். கனிந்து செந்தேன்பில்குகின்ற நறுங்கனிகளையுடைய பலதருக்களடர்ந்த சிறுவனமாயிருக்கின்றது. அத்தருக்களின்பணைகளில் மரவுரிகளுமான்றோல்களுந் தூங்குகின்றன. வனமுழுவதும் புலித்தோல்தர்ப்பாசனங்கள் முதலிய நிறைந்திருக்கின்றன. மிருகங்கள்ஊர்வன பட்சிகள் பகையின்றித் திரியாநின்றன, ருஷிகளெல்லாருஞ் சமித்துகளை நாடுகின்றனர். சிலரெரியோம்புகின்றனர். சிலர் தவம்புரிகின்றனர். ஆகலாற் கோசிகனுடைய குடிலை யிதுவேயென்றனன். இராவணன் புட்பகத்துநின்றிறங்கி சாரணா! மைதிலியினுடைய நெறித்திருண்டு நீண்டுநெய்த்துக்கடைகுழன்ற கூந்தலிற்றோய்ந்த காற்றுவீசும்பக்கமாய்ச் செல்வோமெனச் சாரணன் சுவாமி! நாம் கண்கட்டிவித்தையினு லொருவருமறியாது எங்குமுழன்று மாக்கள் சொல்லும்வார்த்தைகளை யறியவேண்டுமென்றனன். வித்யுஜிஹ்வன் தனதுகண்ணைமூடிப் பிறர்கண்ணுக்குத்தாங்கள் மூவருந்தெரியாமலும் பேசிக்கொள்வது கேளாமலு மிருக்கும் கண்கட்டி வித்தைசெய்தான். பின்னர் இராவணன்முதல் மூ

வருஞ் சிறிதுசேய்மைக்கட்சென் றோர்மரத்தடியினிற்றலும், பகவான் விசுவாமித்திரருடைய மாணுக்கன் சத்தியவிரதனும், சதானந்த மகருஷியினுடைய மாணுக்கன் தேவவிரதனும், முப்புரிநூற் புரளு மார்பினராய், முஞ்சியணிந்த இடையினராய்,வேதநவிலு நாவினராய் வந்தனர். வந்தவர்களில் சத்தியவிரதன், தேவவிரதா!அயோத்தியாபுரிக்குச்சென்றுள்ளபகவான் விசுவாமித்திரமகருஷியாரா லெரியோம்பும்படி நான் நியமிக்கப்பட்டிருக்கிறேனுகலாற் றருப்பைசமித்துக்கொண்டுபோகவேண்டுமென்றனன். தேவவிரதன், ஜனகருடனிருக்கிற சதானந்த மகருஷிக்குத் தூப்புல் சமிதை நானுங்கொண்டுபோகவேண்டுமென்றனன். சத்தியவிரதன் தேவவிரதனைப் பாரா, ஜனக ரொத்தனைநாள் விசுவாமித்திரருடைய ஆச்சிரமத்திலுறைவரொனத் தேவவிரதன் மகருஷியாக முடிக்குங்காறு மவணுறைவரொன்றனன். அவ்வேலை மரத்தடியினின்ற தசக்கிரீவன் சாரணு! இந்தப்பிரமசாரிக ளிருவருங் காதிகாதலன், கௌதமன் காதல னிருவருடைய மாணுக்கர்களென்று நினையாநின்றேன். அவர்கள்நேசத்தா லொருவர்க்கொருவர் வார்த்தைசொல்லிக்கொள்ளு மழகைப்பார்த்தாயோ? அவ்வெல்லா நாமறைந்திருந்து கேட்போமென்றனன். சாரணன் இலங்காதிபரே! வித்யுஜ்ஜிஹ்வனுடைய கண்கட்டிவித்தையை நோக்கவில்லையோ? நாமிருக்கின்றதையும் பேசுகின்றதையு மவர்களறிகின்றிலரே, நமக்குவேறுகரந்துறைநிலையென்ன வேண்டியிருக்கின்றது? இச்சையானவிடனிற் சுகமாயுலாவலாமென்றனன். தேவவிரதன் சத்தியவிரதா! யாகத்தைக் கெடுக்கிறதற் கெண்ணிறந்த நிசிசரர்கள் தீட்சித்துக்கொண்டிருக்கையிற் பகவான் கோசிக ரச்சமிலா தெவ்வாறு தலைப்பட்டனரொன, சத்தியவிரதன் தேவவிரதா! கேள். முன்னோர்ஞான்று சரணமடைந்த திரிசங்குவுக்குத் தனுவுடன் துறக்கமெய்த வருளியகாலை சுரர்கள்புரிந்த தவற்றால் உலகங்கள் முதல் யாவும் மாறுபடைக்கின்றேனென்றெடுத்த முனிவைப் பிரமன்வேண்டவிடுத்தவரும், ஆட்டைப்போல யூபத்திலணைத்

து வதைசெய்வான் அயோத்தியராண்டகையாகிய அம்பரீஷன் தாய்தந்தையருக்கு விலைகொடுத்து வாங்கிவந்த சுனசேபனுக் காருயிரையளித்தவருமாகிய பகவான் விசுவாமித்திர மகருஷியார்க்கு இராக்கதரிடத்தி லச்சமுமுண்டோவென்றனன். ஒளிந்துநின்றவித்யுஜிஹ்வன் சாரணா! இந்தப் பிரமசாரியினுடைய வார்த்தையைக்கேட்டாயோவெனச் சாரணன் ஆம், கேட்டேன், விசுவாமித்திரனுடைய வலிமையறிந்து தான் நமதரசர் மகாமாயாவியான மாரீசனை யிந்தப்பிரதேசத்தில் நியமித்திருக்கின்றனரென வித்யுஜிஹ்வன் உண்மைதான். மாரீசன் மாயையில் மிகுதியும்வல்லவன், அமரரோடு சமரநேர்ந்த காலையில் பகலையிரவாக மாற்றினன். அக்கணத்திலேயே பகலாய்ச்செய்தனன். நீருண்டபுயல்கள் சூழ்ந்தாற்போற் றோற்றுவித்தனன். புகைநெருங்கினாற்போலுண்டாக்கி விழிபிதுங்கச்செய்தனன், பின்னும் பற்பல மாயைபுரிந்தனனன்றோவெனவு மிராவணன் வித்யுஜிஹ்வா! பாம்பின்காலைப் பாம்பேயறியுமாபோல மாரீசனுடைய மாயையை யுணர்ந்தவனீயேயென்று கொண்டாடினன். கோசிகர் மாணாக்கனாகிய சத்தியவிரதன் தேவவிரதா! பகவான் விசுவாமித்திர மகருஷியினுடைய நோன்பினோன்மையைப் பாராய். கொட்டாவிவிடாநின்ற சிங்கத்தினுடைய வாயிலிருக்கிற முளரிநாளத்தைக் கடகரி தனது புழைக்கையாற்பற்றி யீர்ப்பதைக்காணாய், புன்மேயச்சென்றுள்ள ஆனிரையின் குழக்கன்றுகள் பெருமுழைகளிலுறைகின்ற பெண்புலியினிடத்துப் பால்குடிக்கின்றதை நோக்காய், விசுவாமித்திரனைப்போல் தேசுந் திறலுமுடையாரும், அம்மகருஷியின்றிறத்தை யறியாதாரு மிவ்வுலகில் யாவரெனத் தேவவிரதன் ஆமாம். பகவான் விசுவாமித்திரர் யாரினுஞ்சிறந்தவராயதினாற்றா னிராக்கதருக்கு வெருவாது மகம்புரியத்தொடங்கித் தமது மித்திரராகிய தசரதசக்கரவர்த்தியை யழைத்துவரப் போயிருக்கின்றனரென்றனன். வித்யுஜிஹ்வன் வெகுண்டு சாரணா! பிரமசாரியான விச்சிறுவன் மாரீசனுடைய மாயையையறிந்தவனல்லனாகலால் விசுவாமித்தி

ரனைப்போற்றுகின்றனனெனச் சாரணன் வித்யுஜிஹ்வா! ஒவ்வொருவனுந் தன்னைச்சார்ந்தவனைப்போற்றுகிற துலகியல்பு. விசுவாமித்திரனை யவன்புகழ்வதினால் நீயடைந்தபேறழிவியாதெனவித்யுஜிஹ்வ னதைக்கேட்டுமடங்காது மாயைவல்லவன் மாரீசனையன்றி யாவனிருக்கின்றனன். ஒருவர்கண்ணுக்கும் புலப்படாது ருஷிகள்செய்யும் யாகநிலனிற் போந் தாங்குள்ளவிப்பிரர்களையடிப்பன், கடிப்பன். யூபங்களைமுறிப்பன். மட்பாத்திரங்களையு மரப்பாத் திரங்களையுந்தகர்ப்பன். பசுக்களையு மவிகளையுந்தின்பன். வேள்வித்தீயையவிப்பன். உருட்டிவிழித்து ருஷிபத்தினிகளை வெருட்டுவன். அதுநிற்க, கோசிகமாமுனிபயந்து யாகத்தை முடிப்பிக்கவேண்டுமென்று பரசுராமர்மூலமாய் நமதரசனிடத்து விண்ணப்பஞ்செய்து கொண்டதை யிப்பிரமசாரியறியான்போலும்; அதை யறிந்தவனுயினவ்வாறுபுகலான். வசிட்டரது காமதேனுவினுடைய மயிர்களினின்றுமுதித்த துருக்கர் முதலானவர்களாலடிபட்டுத் தவஞ்செய்யப்போகிறேனென்று கானத்துக்கோடிய விசுவாமித்திரன் திண்ணியன், தொடங்கியகருமத்தை முடிக்கவல்லவனென் றெல்லாந்தெரிந்த ஜனகரெவ்வாறு துணைக்கொண்டனர். ஈது வியப்பென்றனன். இராவணனதைச் செவியேற்று வித்யுஜிஹ்வா! விசுவாமித்திரனைப்பற்றி யழகாய்ச்சொல்லினையென்று கைபுடைத்தனன். சத்தியவிரதன் தேவவிரதா! தசரதசக்கரவர்த்திக்கு ருஷியசிருங்க மகருஷியினுடைய அனுக்கிரகத்தால் நான்குகுமாரர்கள் தோன்றியிருக்கின்றனர்களென்றும், அவர்களில் இராமசந்திரர் அநந்தகல்யாணகுணசம்பூர்ணரென்று. மீரேழுலகத்தவர்களுக்கு மாநந்தங்கொடுக்குஞ் சௌலப்பியரென்றுங் கேள்வியுறுகின்றேன். நீ யறிவாயோவென, தேவவிரதன் நானறிவேன். பிரபன்னரான ஜனகமஹாராசாவினிடத் தெனது தேசிகரான சதானந்தமகருஷி தசரதசக்கரவர்த்திக்குப் புதல்வராயவதரித்திருக்கின்ற இராமர் ஜகத்காரணர், உலகமெல்லாமெதிர்த்தாலும் வெல்லு மாற்றலர், செருக்கில்லாதவர், வஞ்சமில்லாதவர், பொய்யு

ையாதவர். அஸ்திரசஸ்திரவித்தையிற் றேர்ந்தவர். பிரமசரியாச்சிரமத்தி லிருக்கின்றவர், யாவரினு மேன்மையரென் றடிக்கடிசொல்லுங்காலே கேட்டிருக்கின்றனெனென்றனன் அப்போது இராவணன் அழுக்காறுற்று வித்யுஜிஹ்வா! முட்டிவாங்கு மிப்பிரமசாரியினுடைய குழறலைச்கேட்டாயோ? தர்ப்பைகொண்டு சீவிக்கிற சதானந்த னெப்பொழுது மந்திபோலச் சனகர் பக்கலிருந்துகொண்டு இராமனைக்குறித்துப் பிதற்றுகின்முனென்று நன்குவிளங்குகின்றது. அப்பிதற்றலைக் கேட்டே சனகரு மவர்புதல்வியு மிராமனையே விரும்புகின்றனர். அங்ஙனமில்லாவிடின் திரிலோகாதிபதியாகிய வென்னை விட் டிராகவனை வரிக்கிறதற்குக் காரணமில்லையென்றனன். வித்யுஜிஹ்வன் சாரணு! கேள். அச்சதானந்தனுடைய வன்னையாகிய அகலிகையை வலாரிகற்பழித்தனன். அவ்விந்திரனை நமதிலங்கேசர் சிறைப்படுத்தினர், தனதுதாயையழித்தோனையிழித்தவனை வழுத்தாது எங்கேயோ நேற்றுப்பிறந்த வோர்சிறுவனைப் புகழ்கின்றனனுகலா லச்சதானந்தன் நன்றியறியாதவன்போலுமென்றனன். சத்தியவிரதன் ஆமாம். நீசொன்னபடியேசதானந்தர் ஜனகரிடத்தில் இராமனை யெப்போதுந் துதிக்கிறபடியாலே சீதை யிராமரோ நாயகரொன் றுறுதியாயிருக்கின்முளெனத் தேவவிரதன் சத்தியவிரதா! அதனிற்சந்தேகமா? சதானந்த ரிடைவிடா திராமனைப்புகழ்கின்றமையாற் சனகர் சதானந்தருக்கு இராமஸ்தோத்திரம் பண்ணுகின்றவரொன்று பெயரிட்டழைக்கின்றனரொன்றனன். வித்யுஜிஹ்வன் சாரணு! உள்ளது வெளிப்பட்டது கேட்டாயோ? சதானந்தனைச்சவட்டாது விடுவோமாறு லவனெப்போது மிராமனையே புகழ்ந்துகொண்டிருப்பன். அதைக்கேட்குறும் ஜனகருக்குஞ் சீதைக்குமிராகவன்கண்ணே யன்புவளருமாதலால் நமதுமாரீசனையேவினுற் சதானந்தனை யெடுத்துத்தண்டாதுவிழுங்கிவிடுவானென்றனன். தேவவிரதன் சத்தியவிரதா! ஓர்நாள் சதானந்த ரிராமனைப்பழிச்சுங்காலே ஜனகர் சதானந்தரே! நீரெப்போது மிராமனைப்புகழ்கின்றீர். நமது

சீதையும் அவ்விராகவனையே வரிக்கின்றாள். சூரியகுலத்துச்கு
ஞ் சந்திரகுலத்துக்குஞ் சம்பந்தஞ்செய்யத்தகுதிதான், ஆயினு
மவ்விருவருக்குங்கலியாண நடப்பதரிதென்று நினைக்கின்றே
னென்றனரென்றனன். அச்காலை வித்யுஜிஹ்வன் ஜனகர் நன்
றுகூறினர். திரிலோகாதிபதியார் சீதையை வேண்டுகையில்
கோசலை மதலைக்கு வதுவை நடக்குமோவென்றனன். சாரண
ன் வித்யுஜிஹ்வா! அடுத்தடுத்து நினதுவாயைவிள்ளற்க. பன
வர்குலச்சிறுவர்களுடைய வார்த்தையை முற்றுங்கேட்போ
மென்றனன். சத்தியவிரதன் தேவவிரதனைநோக்கி இராமபிரா
னுக்குஞ் சீதைக்கும் விவாக நடப்பதுவருத்தமென்று ஜனகர்
சொல்ல ஏதுவேதெனத் தேவவிரதன் சத்தியவிரதா ! பிரம
னுடைய கொள்பெயரனும், பெருந்திண்மையனும், நாலைந்து
கையனும், ஈரைந்து தலையனும், இந்திராதியரை யேவல்கொள்
கின்றவனுமாகிய இலங்கேசன் சீதையை மணம்புரியவேண்டு
கின்றனனென்று இரகசியமாய்த்தாம்கேள்விப்படுகிறபடியால்
அச்சனகர் தமதாரியனைநோக்கி எசதானந்தரே! இராவணனு
க்குப்பயந்து சீதையை யவனுக்குக்கொடுக்கிறதா? உமதுமதப்
படியும் சீதையினுடைய சம்மதப்படியு மிராமனுக்குத்திரும
ணம்புணர்க்கிறதா? என்செய்கிறதென்று நெஞ்சமறுகுகின்ற
னெனென்றோதினரென்றனன். வித்யுஜிஹ்வன் நம்முடைய
ஜனகர் சதானந்தனுடையவாயை நன்றாயடக்கினர். அவ்
வேலை சதானந்தனுடையமுகம் இரந்தவர் மகிழும்படிகோ
டுத் தவருவத்தலைக் கண்டுவந்தறியானை யிரந்து மீளுவோனு
டைய வதனத்தைக் குறைவறவொத்திருக்குமென் றெண்ணு
கின்றேனென்றான். சத்தியவிரதன் தேவவிரதா! முன்னோர்
காலத்தில்வாலி இராவணனுடைய இருபதுகைகள் முன்னையு
மிரண்டுகால்கள் பின்னையு நாலப்புறத்தி லுதரபந்தனத்தைப்
பற்றித் தூக்கிச் கேடகம்பற்றினவனைப் போலத்திரித்துக்
கடலினுள் நாகலோகங்காறு மழுத்தியெடுத்து வானிலொற்
றி மலைகளின்மோதித் தரையிற்றேய்த்துப் பேய்ப்பயலே! இ
ராவணா! என்னை யாராகநினைத்து என்செய்தா யென்செய்தா

யென் றொருகையா லிருபது கன்னங்களையு மப்பம்போல வு ப்பப்புடைத்தகாலைப் பிரமனுடைய கொள்பெயரனென்றபெ யரும், மகாபலமும், இருபதுகையும், பத்துத்தலையும் விட்புலத் தரசன் முதலியோரை யேவல்கொள்கின்ற வாண்மையு மெங் கேபோயின ? அப்போது இராவணன் தாயைினுடைய தா ளினிலங்தோயவீழ்ந்து கதற,அவள் வாலிபுயத்தில் தனது தட ங்கொங்கையைப்பூட்டி அன்ப ! தசக்கிரீவனைவிட்டு வெருட் டென்று கிஞ்சுகவாயாற் பஞ்சரக்கிளிபோற் கொஞ்சாவிடின ன்றே முடிவனன்றேயென்றனன். இராவணன் மீசைதுடிப் பக் கண்கள்சிவப்பவெயிற்றாலிதழதுக்கிப் பெருமூச்செறிந்து இக்கொடியபிரமசாரியை யின்னே வாளுக்கிரையாக்கினே னென்று முனிந்தான். பின்ன ரவ்விராவணன், வித்யுஜிஹ் வன் சாரண னவ்விருவருடைய மொழியா லம்முனிவை நீக்கி நின்றுவித்யுஜிஹ்வனைநோக்கிவாலியென்றொருகுரங்கென்னி லும் தோள்வலியுடையதோ? அற்றைஞான்றோர் காரணத்தா லெளிதிலகப்பட்டுக்கொண்டேன். என்னை யெடுத்துச் சுற்றும் படியான சிறிது வன்மையேயவ்வலிமுகத்துக்கிருந்தது. உட னே நான்குத்திய வொரேகுத்தா லக்குரங்குஞ் சலித்தது. பின்னர் நாங்களிருவரு முறவாடிக்கொண்டோம். இதனால் வா லிக்கு வெற்றியென்ன? எனக்குத் தோல்வியென்ன? என்றன ன். சாரண னதைக்கேட்டுச் சுவாமி! இலங்கேசரே! அறியாப் பிள்ளையினுடைய வார்த்தையிற் றங்கள்சினங்கொளலாமோ? ஏழை தங்களுடைய பெருமையை யுணராமையினாற் றங் கட்கிளிவரலென்ன? சிவன் வீற்றிருக்குங் கைலைவெற்பைச் சல்லிவேருடன்பறித்துத் தங்கள் கைகள் பந்தாடவில்லை யோ? அவ்வெற்பைப் பிடுங்கினகாலை பார்வதி பயமுற்று ஓ டிவந்து தழுவிக்கொள்ளக் கலகலவென்று சிரித்து வலிய வோர் பெண்வந்து தழுவிக்கொள்ளும்படியாகிய பாக்கியத்தை யிலங்காதிபதியா லின்றுபெற்றேனென்று எல்லாராலுங் கொ ண்டாடப்படுஞ் சங்கரன் தங்களைக்கொண்டாடவில்லையோ வென்றனன். தேவவிரதன் ஏசத்தியவிரதா! இராவணனோ

சமயத்தில் வர்லியா விழுக்குற்றதை நீயிளிவரலென்புகல்வது தகுதியன்றெனச் சத்தியவிரதன் ஓதேவவிர்தா! அதுமட்டுமோ. ரேவாநதியில் ஐஞ்ஞூறு கைகளா ஞேடுபுனலைமறித்து மற்றைந்நூறு கைகளாற் காமனுங் காமிக்குமாதர் மாதர்களுடைய தனத்திற்கூழுமவப்பிய கலவைகளைக்கழுவியும், நாகமென நான்ற பின்னலைப் பிடித்தீர்த்தும், தங்கத்தட்டமென வொளிர்ர்நின்ற நிதம்பர்தோன்ற மேகலைசூழ்ந்த கலையை நீக்கியும், புனலை முகத்திலெற்றியும், இருகுறங்கினூடு கையைக்கொடுத்துத் தடங்கொங்கைபற்றி யுயரத்தூக்கி யாகாயகங்கையிற் றோய்த்தும் விளையாடிய கார்த்தவீரியார்ச்சுனனாற் கட்டுண்டு சிறையிலடைக்கப்பட்டு மலரவனால் மீட்கப்பட்டவ னிவ்விரர்வணனன்றோவென்று புகன்றனன். இராவணனைதச்செவியேற்று முனிந்து துஷ்டனும், சண்டாளனுக்கு வேதமோதி யாகத்தைச்செய்வித்தவனும், முனிகளுக்குட் கடைப்பட்டவனுமாகிய விசுவாமித்திரனுடைய மாணவகனுகையாற் குருவைப்போலவே சீடனும்குழறுகின்றனன். மேலுலகத்திலும் விசுவாமித்திரனுக்குப்பணிபுரிய விப்பிரமசாரியையனுப்பும்படி நம்மால் தாடகை யனுமதிக்கப்பட வேண்டியவனென்றனன். தேவவிர்தன்சத்தியவிரதா! கேள் யமனோடு போர் புரிந்தவனையும், நரகத்தினின்றும் வெளிப்பட்டவர்களாற் றுதிக்கப்பட்டவனையும், தேவாசுரர்களால் வியக்கப்பட்டவனையும், தனது கழல்பூண்ட கழலொலியைக்கேட்டு வெருண்டுமீண்டோடின வெருமையேற்றினின்று குப்புறவிழுந்தயமனைப்பார்த் தசிபுரிந்த விராக்கதப்படை யுடையானையு மிருக்கிற இலங்காதிபன் வலியுடையானல்லனோ? என்றனன். வித்யுஜிஹ்வனதைக்கேட்டுத் தேவவிரதன் நன்றாய்ச்சொல்லினன். அவனுடைய வாசகத்தாலேயே யவன் நல்லவனாய்க் காணப்படுகிறான். வடமொழி தென்மொழியன்றி யிலக்கணமமையப்பெறாத மற்றைப்பாடைகளைப்போற் கன்னபின்னவென்று சத்தியவிரதனதுபயனில்சொல்லினாற் பயன்யா

தென்றனன். பிரமசாரிகளிருவருங் காலங்கடந்தது. ஆச்சிரமத்துக்குப் போவோமென்று போயினர்.

முதலங்கமுற்றிற்று.

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளேசரணம்.

---

## உ-ஆமங்கம்.

பகவான் விசுவாமித்திர மகருஷியினல் வேள்வியின்பொருட் டழைக்கப்பட்ட அத்திரிமகமுனிவரும், அவரதுமனைவியார் அநசூயைத்தாயாரு மெழுந்தருளினர். அத்திரிமகருஷி ஏ அநசூயை! விசுவாமித்திர ராச்சிரமத்துக் கணித்தாய் வந்துவிட்டோம்; ஜனகமகாராஜர் குழந்தை சீதையுடனுங்கு வந்திருக்கின்றனரென்று கேள்வியுறுகின்றேன். அச்சீதையின்கையில் யாதைக்கொடுக்கலாம்? ஆண்குழவியாயிருந்தாற் சோடிபூணூல் கொடுக்கலாமென அநசூயைத்தாயார் சுவாமி! இந்திர னமக்குத் தந்த சிணும்சுகமுதலியவற்றைச் சானகிக்குக் கொடுப்போம். அவளதைத் தரித்துக்கொள்வளே லிராக்கதபயம் பைசாசபயமொன்று மவளையணுகாதென்றனர். அத்திரிமகருஷி ஏ அநசூயை! நான் மறந்துவிட்டேன். இந்திரன்கொடுத்தவைகளைத் தரிக்கவுரியவள் சானகியே அன்றியுமிராவணனவளைவிரும்புகின்றனனென்று கேள்விப்படுகின்றேனென்று முன்னேபார்த்துக் கமலத்தையு மதன் நாளத்தையு மாங்குக் கொண்டுபோகின்றவள் யாவளென்றனர். அநசூயைத்தாயார் அவள் மைதிலியினுடைய தோழியாகிய சுசரிதை. சீதை மன்மதனாலேயோ? வெய்யவனாலேயோ?வெப்பமடைந்திருக்கின்றனளென் றெண்ணுகின்றேனெனப் பகவான் அத்திரி மகருஷி மனக்கண்ணாலோர்ந்து மிதிலைநாடி கனவி லிராமபிரானைப் பார்த்துச் சித்தத்தை யவனிடத்திலேயேசெலுத்தி வேறொன்றையுஞ் சிந்தியாது, வேளினல் வெதும்புகின்றனளென்றுணாத்துச் சனகர்பா லணைவோமென்றேகினர். இராவணன் ஏ சாரணா! சீதையை யெப்போதுபார்ப்போம் பார்ப்போமென் றெ

ன திருபதுநாட்டங்களுநோறுது விரைகின்றன. விசுவாமித்திரனுடைய ஆச்சிரமத்துக்கெந்நெறியேபோகலா முறைத்தியெனச் சாரணன் இவ்வடவியூடு செல்லலாமென்றனன். வித்யுஜிஹ்வன் சுவாமி! இலங்கேசரோ! காற்றிவ்வழிபோதுகின்றது. ஜானகியினுடைய வியற்கையாய்த் தெய்வமணங்கமழ்கூந்தலிலளாவிய கால் வீசுநெறியை முந்தியே விரும்பினீரே இவ்வழிபோதலாமென்றனன். சாரணன் விசுவாமித்திரருடைய ஆச்சிரமந் தெங்கினுலும், கோங்கினுலும், கமுகினுலும், வாழையினுலும், ஆலினுலும், மாவினுலுஞ் சூழப்பட்டு நமக்குப் பெருமகிழ்விளைக்கின்றது. மரங்களின் வேர்கள் முதிர்ந்த கனிகளி னிரசத்தா னனைந்திருக்கின்றன. வானிற்பூத்த வுடுக்களென மரன்கள் பூக்களாலடர்ந்திருக்கின்றன. வெயிலியங்காவண்ணஞ் சோலைகளோங்கியிருக்கின்றன. குளிர்ந்த வந்துவந்து வீசுகின்றதெனெ வித்யுஜிஹ்வன் ஆமாம் சந்தனுதி தைலவாசனையோடு மகிழம்பூமணமு நாறுதலால் மந்தமாருதன்மைதிலியினுடைய வைம்பாலிற்றோய்ந்து வீசுகின்றனனென்றனன். இராவண னீரைந்து நாசியாலுங் காற்றை வாங்கிவாங்கிவித்யுஜிஹ்வா!நன்குணர்ந்துகூறினைகூறினையென்று குதிகொண்டனன். அப்போது திசைக்குட் சானகியெழுந்தருளியிருந்து சித்திரம்வரைய வேண்டியதற்கு வேண்டியபொருள்களைக் கொண்டுவரப்போன சிலவதியும், சீதஞ்செய்வான் கோகனகங் கொணரப்போன சுசரிதையு மின்னும் வரக்காணேன். யாருமில்லையென் றநங்கனென்னை நலிகின்றனனேயென்செய்கோவென்றனள். இராவண னதைக் கேட் டாங்கோர் பெண்குயில் கூவுகின்றதெனச் சாரணன் இலங்கேசரோ!வார்த்தைகள் செவிவயின் சார்கின்றமையாற் குயிலன்று பெண்கிளியாயிருத்தல்வேண்டுமென்றனன்.பின்புதிசையிலுள்ளமைதிலியார்சிவனிடத்தடாதுசெய்ததினுலங்கமிழந்த அநங்கா! நின்னுல் யாரும் படாதபாடுபடுகின்றேன். எனது நாயகனுடைய வதனத்தைக் காணுங்காறு மென்னைக் கொல்லாதியென்றனள். இராவணனதைச்செவியேற்று யா

ரோ வோர் ருஷிபன்னிகொழுநனைப்பிரிந்து விரகத்திஞற் புலம்புகின்றனள். அவளுடைய வின்குரலோசையா லவள் மிக் ரூபலாவண்ணிய முடையாளென்று நினைக்கிறேன். அவளை நாடிக் காணவேண்டுமென்றனன். சார்ணன் மகாராஜா! கொடியிற்றேடிக் காட்டுகின்றனனென்று நாலுபக்கங்களிலுஞ் சுற்றிப்பார்த் தொருவரையுங் காணேனென்ருன். இராவணன் அரிதரிது செவிக்கமுதென இப்போது மதுரமொழிகளைக் கேட்டோமே. மொழிந்தவளைக்காணேமே யென்றழுங்கினன். வித்யுஜிஹ்வன் ஆம்மகாராஜா! நம்முடைய மாயையினுங்கிது வலியமாயையா யிருக்கின்றதென்றனன். திரையினுள்மைதிலியார், ஏ மீனக்கொடியோனே! இரந்தவர்க்கீயாத புல்லருட் சிறந்த புல்லனே நீ? கொல்லாதென்னுயிரையீவாயென்றிரந்துங் கொடுமைபுரிகிற்றி யென்றனர். சாரணன் மகாராஜா! வார்த்தைகள் கேட்கின்றன. உருத்தெரியவில்லை யென்றனன். இராவணன் சாரணா! மேகமில்லாமல் மழைபெயலேதடா? தேன்போன்ற மொழிகளைச் செப்புகின்றவளாரடா துருவிப்பாரடாவென்றனன். திரையினுட் சாணகி வெளியிற்போன தோழிமாரிருவரும் வந்தாரில்லை. மதனனே வென்னைவிட்டேகினனில்லை. இனி நஞ்சத்தையுண்டுயிர்நீப்பதே கருமமென லுஞ் சுசரிதைதிரைக்குட்சென்று அம்மா மைதிலீயாரோ! விடமென்றமொழியைச்சொல்லாதிரென்று பல்லவங்களைப்பரப்பியதிற்சேக்கைகொள்ளுமென்று தாமரைப்பூக்ககளாற் கால்போத விசிறினள். இராவணன் ஒரணங்கு நாயகனை நினைத்துச் சோர்வடைந்திருக்கின்றனள். அவளுடைய தோழியச்சோர்வை நீக்குவானினிய செயல்களைப் புரிகின்றனள்போலாம். விரகதாபத்தை யடைந்திருக்கின்ற அவளைப்பார்க்க நமது கண் புண்ணியஞ்செய்யவில்லையென்று துயர்ந்தனன். சாரணன் இலங்கேசரோ! தோழிதெரிகின்றனள் காமநோய்கொண்டவள் தெரியவில்லை. ஆச்சரியமாயிருக்கின்றதென வித்யுஜிஹ்வன் சிறிதுழந்தா லவளையுங்காணலாம். முனிகளுடைய தவச்செயல்களிங்கு நன்ருய் விளங்குகின்

றனவென்றனன்.சுசரிதை,சானகியாரே!நாளைத்தின நமதுநாயகர் வருகின்றனரெனக் கேள்வியுற்றனன். நீர்பார்க்கலாமெனச் சீதையாரின்று நான்சாகாம லிருந்தாலன்றேவென்றனர். சாரணன் ஐயோ இவள் நாயகனுரோவென, இராவணன் இவளையடையும் புண்ணியம் செய்தவன் யாவனோவென்றனன்.சுசரிதைபெண்ணமுதே!சானகியாரே! நமதுபதியைச் சித்திரத்திலெழுதிப்பார்த் துயிர்விடாதுபொறுத்திருமெனலும், சீலவதி சித்திரமெழுதற்குரிய பொருள்களைக்கொணர்ந்து கொடுத்தனள். சீதையார் கரத்தால்வாங்கிச் சித்திரப்பலகையைப் பார்த்துப் புளகம்போர்த்து நடுக்கமுற்றனர். சுசரிதைபெண்ணிற்றிலகமே! மிதிலையர் கோனன்னமே! என்னுற்று யேனச்சமுறுகின்றீரெனச் சானகியார் யேடிதோழி!அடியார்களையெழுபிறப்பி லெழுதாப்பரமனை யிப்பலகையில் நானெவ்வாறெழுதுவேன். மகானுபாவனை யோர்நாள் கனவிற்கண்டது தானே என்றனள். சாரணன் இலங்கேசரோ! உம்மைத்தான் சொல்லுகின்றனள். மகானுபாவர் நீரேயன்றி வேறியாரென இராவணன் களிப்புற்றுமாம். இன்னு மவள்சொல்லுகின்றதையெல்லாங்கேட்போமென்றனன்.திரையினுள் மிதிலைநாடியரொருவாறு தேறிச்சித்திரமெழுதினர். இராவணன் சாரணா! கையிலணிந்திருக்கிற கங்கணத்தொலி யந்நாயகி யோர்நாயகனை வரைகின்றனளென்று விளக்கின்றதென்றனன். திரைக்குட்சானகியார் ஏதோழிசுசரிதை!நமக்குக்கிடைக்காத வொருவனைக் கைவருந்த வெழுதுவதிற் பயனென்னோவென்று நயனத்தினின்று சிலமுத்துகளை யுதிர்த்தனர். சுசரிதை யக்கண்ணீரைத்துடைத்து அந்நாயகனையேயடைவீர் முழுதுமெழுதுவீரெனச் சீதையாருக்கங்கொண் டலர்ந்ததாமரைபோன்ற சேறடிகளையும், வாள்விசித்திருக்கின்ற விடையையும், நூலணிந்த வரையென வகன்ற மார்பையும், முழந்தாள்வரையிற் றுழ்ந்தகைகளையும், வில்லுடன் றூணிதூக்கிய திருத்தோள்களையும், புண்டரிகமெனத் துலங்குங் கருணைக்கண்களையும், வண்டுகள்மொய்த்த பதுமமெனப்பொலியு மீசையுடைய திருமுகத்

தையுமெழுதிக் கைகுவித்து நாதரோ! உம்மை நான் காதலித்த நவையினால் மலயமாருதன் ஆதிசேடனுடைய பெருமூச்செனவும், குளிர்ந்தசந்திரன் வெண்ணெருப்பெனவுந் தோன்றுகின்றனவென்றுரைத்து, இவ்வேலைவந் தென்னையாண்டருளுமென்று புகன்றனர். சீலவதி யதைக்கண்டு புன்னகைகொண்டு சுசரிதையைநோக்கிச் சீதையார் தாமெழுதிய சித்திரத்தோடு பேசுகின்றனர் பாராயெனக் கண்ணாற்சொன்னாள். அச்சீலவதி சுசரிதைக்குக்கண்ணைக்காட்டியதைச் சானகியார்கண்ணுற்று அச்சோ, நாம் படத்தோடுபேசிய பேதைமையைக்கண்டன்றோ இதுளையரிருவருங் கண்ணாற்பேசிக்கொண்டு நகைக்கின்றனரென்று நாணமுற்றனர். இராவணன் படத்தைப்பார்த்து மனந்தளர்ந்து அந்தோ பத்துத்தலைகளு மிருபதுகரங்களுமில்லையே. வேறெவனையோ வெழுதியிருக்கின்றனளேயென் றுயிர்த்துயிர்த் துயங்கினன். சாரணனு மப்படத்தைப்பார்த்து ஓ! ஓ! பங்கயப்பாதங்களும் சுந்தரத்தோள்களும், சந்திரவதனமும்,செவியளாவுகண்களும்,இந்திரநீலத் திருமேனியுமுடைய விப்புருடோத்தமன் யாவனோ? ஆடவரெல்லாரும் பெண்மையையவாவுமழகுடையவனாயிருக்கின்றனனென் றுன்னினன். துக்கத்தால் மௌனமாயிருந்த இராவணன் வித்யுஜ்ஜிஹ்வா! படத்தைப்பார்த்தாயோவென, சுவாமி பார்த்தேன்பார்த்தேன் கையிலிருக்குங் கோதண்டம் அரசிளங் குமரனென்று முப்புரிநூல் பிரமசாரியென்றுந்தெரிவிக்கின்றனவென்றனன். எழினியினுள் மைதிலியார்எசுசரிதை!நான்பொறித்த படத்தைப் பாராயென! அவள் எ தேன்மொழி நான்பார்ப்பதிற் பயனென்ன? நும்மாலெழுதப்பட்ட வந்நாயகர் பார்ப்பரேல் நுமது கைகட்குக் கங்கணம்போடுவரென்றனள். சீலவதியதைக்கேட்டுச் சுசரிதை தரித்துக்கொள்கின்றவர்களை ,யிராக்கதருக்குத் தெரிக்காதனவும், சூரியன்போற் பிரகாசிக்கின்றனவும்,பகவான் விசுவாமித்திர மகருஷிகொடுத்தனவுமாகிய கங்கணங்களை ஜானகியாருடையகையில் முந்தி நீயே போட்டிருக்கின்றாயன்றோ வென்றனள், வித்யுஜ்ஜிஹ்வ னதைக்கேட்டு இலங்கேசரோ! உன்

ளந்து வெளியாயிற்று. நம்மாற் பார்க்கப்படக்கூடாதவள்தா ன் சீதை.சித்திரத்தில் விளங்குகின்றவன்தா னிராமனென்னலு மிராவணன்இவன்றானு?சீதையினுடைய நல்லமனத்தைக் கவ் ர்ந்த இராமனென்று அப்படத்தைநோக்கி யிம்மென்றெழுந் து.முனிந்து நறநறவென்று பல்லைக்கடித்து இரகுகுலத்திற் க டைப்பட்ட ஏ இராமா! என்ன அஞ்சாது விழிக்கின்றாய். ஈ ரேழுலகிலுஞ்சிறந்த சீதை நம்மையே வரிக்கின்றனளென்று தருக்குக்கொள்ளாதை, ஜானகியினுடைய அறிவின்றெளிவா லும்,கைச்சாமர்த்தியத்தாலுஞ் சித்திரத்திற் சிறிதழகுடையவ னைப்போலப் பொலிகின்றாய். உன்னைக்கொல்வான் மாரீசன் தேடிக்கொண்டிருக்கின்றனன். இப்போது சீதையெழுதிய படம், மாரீசன்வாயில் நீயகப்பட்டபின்பு, நினதுதாய்தந்தை யருக் கதிகதுக்கத்தைக்கொடுக்கும், ஒருவாறவ்வலக்கணையு நீ க்குமென்றனன். சாரணன் திரிலோகாதிபரே! விசுவாமித் திரனுடைய வினயத்தையறிந்திரோ? சீதையை நீர்கண்டாற் சிறையெடாது விடீரென்றெண்ணி நம்முடைய கண்களுக்குச் சானகி தோன்றாமலிருக்கும்பொருட்டுக் கங்கணங்கொடுத்தி ருக்கின்றனனென்றனன். வித்யுஜிஹ்வன் கெட்டவனாகிய க்ஷ த்திரியப்பார்ப்பான் வஞ்சஞ்செய்யக் கொஞ்சமு நெஞ்சஞ்சா தவனெனலு மிராவணன் ஆகாயத்தைப்பார்த்துப் பல்லாலித ழுதுக்கி ருஷிகளுக்குள் எறிந்துபோட்ட விசுவாமித்திரா! நினது நாமத்தினுடைய காரணத்தையே தொழிலாய்ப்பூண்டி ருக்கின்றனை. அக்காரணத்தா லென்னாலவதைபடுவாய். வேறு சுவர்க்க முண்டுபண்ண வல்லமையுள்ளவனே! மாரீசனை வெ ற்றிகொள்ளவலியில்லாதவனே! அரம்பையை வென்றவனே! தாடகையைப்பயந்தவனே! திரிலோகாதிபதியாகிய எமது முய ற்சிக்கு விரோதஞ்செய்கின்றமையால் நீ கடுகியிறந்துபோவா யென்றனன்.சாரணன் மகாராஜரே! என்னை? இறந்துபோவா யென்றுசொல்லுகின்றீர். இறந்தாயென் றேதுமென்றனன். இராவணன் சாரணா! ஜானகியை நாம் பார்ப்பான் உபாயந்தே டுவாயென அவன் இலங்கேசரே! முன்னமே யாராய்ந்து மு

டித்துவிட்டேன்.அதாவது நான் முனிவேடந்தரித்துக்கொண்டயோத்தியினின்று வருகின்றவனைப்போலவந்து சீதையினுடைய கையிலிருக்கிற கங்கணத்தைவாங்கி விடுகின்றனன். பின்பு நீர் சீதையைப் பார்க்கலாமென்றோதிச் சிறிதுதூரமகன்று முதிர்ந்தபருவமும்,தளர்ந்தமெய்யும், வியர்வாற் கரைந்தொழுகுந் தெய்வத்திருமண்ணும், கட்டுவிட்டசடையும், கையிலூன்றுகோலும்பொலிய வோர்தவனுருக்கொடு ஜானகி வீற்றிருந்த திரைமருங்கு சார்ந்து ஓ பெண்களே! அயோத்தியினின்று வருகின்றேன். வழிநடந்தமையால் மிகவும் வருந்துகின்றேன். எனதுவருத்தத்தைச் சிறிது போக்குமினென் றயாவுயிர்த்துக்களைத்துப்படுத்தனன்.மிதிலையார்கோனன்னஞ்சுசரிதை!யாரோ அயோத்தியினின்றும் வருகின்றேனென்கின்றார். அவருக்குக் கைந்நீர் அடிநீருண்ணீர்முதலியவை.கொடுத்துபசரிப்பாயென அச்சுசரிதை சாரணன்பால் வந்து தாமரையிலைகளினால் மெல்லெனத் தண்கால்பட வீசினள். சாரணமாமுனிவன் இடுங்கிய கண்ணைச் சிறிது விழித்து வாயாலு நாசியாலு நெடுட்யிர்ப்பெறிந்து அயாவுயிர்த்து, குழந்தாய்! பெண்ணே! சிறுகாலுதவியாவி யுதவினையெனச் சுசரிதை தெய்வாதீனம் அருந்தவருயிருய்ந்தனரென்றுன்னிச் சுவாமி தேவர் யாவர்? எவணின்றிவட்போதந்தீரெனக் கடாவச்சாரணன் ஏமாதே! தசரத சக்கரவர்த்தியினுடைய தலைமகன் இராமனல்லனோ? என்றுமாத்திரஞ் சொல்லிப் பேரின்னலடைந்தவனைப்போலவும், சிரமத்தாலயர்ந்தவனைப்போலவு மிருவகையாய்த்தோன்றும்படி கண்மூடி நெடிதுயிர்த்துச் சோர்ந்திருந்தான். திரையினுள் மைதிலியார்சக்கரவர்த்தி முதற்புதல்வர்இராமபிரானல்லரோ? என்று மற்றொன்று முரையாதிவ்வந்தணருயிர்ப்படங்கியிருத்தலை நோக்குங்காலை இராகவபிரானையிந்நிலவுலகிழந்ததோ? மற்றியாதோ? எனத் திருவுளமறுகித் தெய்வமே தெய்வமே இரகுநாதனைப்பற்றி யிம்முனிவரென்ன சொல்லுகின்றாரோவென்று விம்மிவிம்மிப் பொருமி ஏசுசரிதை! விரைவில் முற்றுங் கேட்டியென்றனர். அச்சுசரிதை ஏமுனி

புங்கவரே! மேலே கூறுவதைக்கூறுமினெனவஞ்சமனத்துப் படிற்றொழுக்கச் சாரணன் மங்கையே! என்னைப் புலர்கின்ற தென்றனன். நாயினுங்கடைப்பட்ட இராவணன் நகை புரிந்து பகைஞனாகிய இராமனுடைய நாமத்தையுரைத்தாயன்றோ? நினது பொய்ந்நாப்பிளக்கவில்லையோ? ஈரம் வற்றியது மட்டுமோவென்றனன்.எழினியினுள்மிதிலையர்கோன்பொன்னன்னார் ஆ! ஆ! இப்பெருந்தவர் நமக்குத் துன்பச்செய்திமொழிவர்போற்காண்கின்றார். என்செய்கேனென்றுளமழுங்கலுஞ் சிலவதியதைக்கண்டு ஏ சுசரிதை! இவ்வையருக்குப்பருகத்தண்ணீர் தந்து மற்றைய சமாசாரங்களைக் கேட்போமென்றனள்,சுசரிதை தாமரைப்பச்சடையில் நளிர்புனல்கொணரலுந் தீயவினைவல்லசாரணன் ஏ அரிவை! நான் மாதர்கள்தொட்ட வுதகமுண்ணமாட்டேனென்றனன்.மிதிலைநங்கையார் சாரணன்உதகமுண்ணமாட்டேனென்ற மாற்ற மாத்திரங் கேட்டு அச்சோ அச்சோ, அருந்தவர் உண்ணீரும் வேண்டாவென்றல்லலுறுகின்றனர். நமது நாயகரென்ன தீங்கடைந்தனரோவென்றுரைத்தேங்கினர். கொடுமைமிக்க சாரணன் நினது நாயகன் மட்டுமோ? விசுவாமித்திரனும் இடுக்கணடைந்தவனேயென நெஞ்சினுளெண்ணி, யான் நீர் வேட்கை தணிந்தது சாலுஞ்சாலும், இக்கதியடைந்திருக்கின்றவென்னை யிராமனைச் சார்ந்தவர்கள் பார்த்தால் மிகுதியுமலக்கணுழப்பார்களென்றனன். வித்யுஜிஹ்வன் நகையாடி அடேபேய்ப்பயலே! சாரணா! இப்போதுனது படிவத்தையும், சாலத்தையும், சோர்வையுங்கண்ணுற்றால் நம்முடைய இராக்கதர்களும், சாரணா! நினக்கேனடா விந்தக்கேடென்று மாழ்குவார்களென்றனன் சிலவதி மிதிலையர்கோன்குலமாதரே! வந்திருக்கின்றவன்முனியல்லன். நிருதனொருவன் முனிவர்படிவந்தரித்துக்கொண்டு வந்திருக்கின்றனனென்று கருதுகின்றேன். இவன் வஞ்சமொழியினால் நீர் சோகமடையாதிரொன, கள்ளவேடம் பூண்ட சாரணன், அந்தோ நாம் இராக்கதனென விவளெவ்வாறு தெரிந்துகொண்டனளென்றச்சுற்றதை யொழிப்பான் கருத

னூற்றுக் குன்றெனப்பணைத்த குவிமுலைப்பொறையால் நுடங்குநுண்ணுசுப்பாளே! யானோ தாசரதியினுடைய தோழன். அன்னோனுக்காருயிரினு மினியனென்றனன். இராவணன் ஆமாம். இராமனைக் கோறல்செய்ய நீ துணிந்திருத்தலாலவனுக்குத் தோழனுமாருயிரினுமினியவனு நீயன்றி மற்றியாவனுளனென்று பெருநகை புரிந்தனன். சீலவதி ஓ அந்தணீர்! நீர் போந்தகாரியமென்னை? தாமதியாது சொல்லுமெனச்சாரணமாமுனிவன் உங்கட்கெல்லாவற்றையுஞ் சொல்லுகின்றேன். நீயிர் இராவணனைச் சேர்ந்தவர்களல்லீர்களோ சொல்லுமினென்றனன். மிதிலை நாடியார் ஆ! ஆ! இப்பெருந்தவர் நங்கள் நாயகருக்கு மிக்கபேரன்பினராகலா லிவ்வின்மொழி கூறினரென்றுன்னினர். சீலவதி ஏ சுசரிதை! இராவணனென்பவன் யாவன்? நீயவனையறிதியோ வெனக் கடாவுதலும், இராவணன் மீசை துடிக்கத் தீயெரிய விழித்து ஏனடி யேனடி பெண்பேயே! திசைக்களிற்றின்பணைமருப்பை விரிதலையினிளந்தண்டுபோல முறித்தும், நமனுக்கு நமனானவனும், இந்திரனை ஏவல்கொள்கின்றவனும், கைலையைப் பிடுங்கிப்பந்தாடினவனும், மும்மையுலகத்தையுமாள்கின்றவனும், இராவணேசுவரனென்று பெயர்பெற்றவனுமாகிய வென்னை நீ கேட்டறியாயோ? ஏ பேதாய்! ஏழாய்! நின்னுலன்றோ நல்லறிவுள்ள மாதர்களெல்லாரும் பேதையரென்று பெயர்பெற்றனரென்று முனிந்தான். திரையினுட்சீதாபிராட்டியார் தோழிகாள்! இராவணன் இராக்கதனென்றெல்லாரும் வெறுக்கின்றனர். அவனைப்பற்றி நமக்கென்ன வார்த்தையென, இராவணனதைச் செவியுற்று வருந்தி, வித்யுஜிஹ்வா! மைதிலியினுடைய வார்த்தையைச் செவியேற்றனையோவென்றனன். வித்யுஜிஹ்வன் மகாராஜா! கேட்டேன். ஆனமையால்தான் சிறிதுபொழுது இராமனுடைய படிவத்தைத் தாங்கள் தரிக்க வேண்டுமென்று யாங்கள் வேண்டுகின்றனமென்றனன். இராவணன் வித்யுஜிஹ்வா? நம்பாலாசை யில்லாதவளைக் கவர்வதும், அச்சீதையானென்றறியாமையின்பொருட்டு இராமப்

படிவத்தைக்கொள்வதும், நமது நண்பரு மிராசருஷியுமாகிய ஜனகரை வஞ்சிப்பதும், இவளைச் சிநேகித்து மானத்தை விடுவதும் கீழ்மையேயன்றி மேன்மையாமோவென, வித்யுஜ்ஜிஹ்வன் இலங்காதிபரோ? அகாரணத்திலிவ்வெண்ணந் தங்களுள்ளத்திலெங்ஙன முளைத்தது? பிறரை வஞ்சிக்கிறதன்றி நமக்குத்தொழில் வேறுமுளதோ! இராமனுடைய வேடத்தைத் தரித்துச் சீதையைக் கைப்பற்றுவதே காரியம் வேறொன்றுங் கருத வேண்டாவென்றனன். சீலவதி அந்தணரே! நாங்கள் இராவணனைச் சேர்ந்தவர்களல்லேம்,இங்கு வீற்றிருக்கின்றவர் தாம் மிதிலாதிபதியாராகியஜனகருடையசெல்வப்புதல்வியார். நாங்களவருடைய சிலதியர். வந்தகவ்வையைக் கூசாதுரைமினென்றனள். அக்காலைக் கரவடச்சாரணன் அரிதரிது! இவள்தான் சீதையென்று கைந்நீட்டி நெடுநிலனைக் காண்பிக்கின்றனள். நமக்கோ அவளிருக்கையைக்காட்டின விடனன்றிச் சீதைதெரியவில்லை. க்ஷத்திரியப் பிராஹ்மணன்கொடுத்த கங்கணத்தாற் சீதை கண்ணுக்குப் புலப்படவில்லை. கடகத்தை வாங்கவுபாயமென்னென் றுன்னினன். சீலவதி ஓ யதிசிரேட்டரே! இப்போழ்திரகுநாதரைப் பற்றி க்ஷேமவார்த்தை சொல்வீரேல் நெஞ்சு பெருமகிழ்வுபூத்தெங்கள்சீதையார் நுங்கையிற் கங்கணம் போடுவரெனப் படிற்றொழுக்கச் சாரணன் நான் தவப்படிமைகொண்டு முயல்வது வேறெதன்பொருட்டு, அக்கங்கணத்தைக் கழற்றவேயென்றுன்னி நகைத்தனன். ஜானகியார் இராகவபிரானுரொன்னுற்றனரோ? அதனைப் பகரமாட்டாம லிம்முனிவர் துயர்கின்றனரொன்றயர்ந்து சோர்ந்தனர். இருவரியருவரு நோக்கி அம்மா அம்மா சீதா! என்னுற்றனை யென்னுற்றனை? ஆருயிர்த்துணைவராகிய இராமபிரானுர் தீங்கடைந்தாரெனவெண்ணிச் சோகமுற்றீரோ இவ்வயர்வுதிர்மின்; எங்களோ டோருரையுரைமீரென்றரற்றிப் புலம்பினர்.சாரணன் காரணமில்லாம லிங்கேனழை? அங்கசிரமத்திருலல்லவோ சிறிதுபேசாதிருந்தனெனென்னு முற்றுங்கேட்குதிரெனத்தோழிகள் அம்மா மைதிலியாரோ! குறைமொ

ழிகளையுங் கேட்குதுமென்று தேற்றினர். தேன்மொழியார் தெளிவடைந்து சாரணமா முனிவனை நோக்கினர். அக்க ள்ளத்துறவி அம்மா ஜானகி! மதனனு மாதுருவை விரும் பத்தக்க இராகவனும் பகவான் விசுவாமித்திர மகருஷியு மி ன்றிவட்போதுவர். நீ அல்லலுழப்பதேனென்றனன். இரா வணன் சாரணு! சந்நியாசிவேடம்பூண்டு நன்குநடிக்கின்றாய் பொய்யுமாக்கின்றாய் திருடவுந் திருடுவாயென்றனன். இராம பிரானும் பகவான் விசுவாமித்திரரும் வருகின்றாரெனக்கேட் டசீதையார் மகிழ்ந்துவிரைந்தெழுந்து விசுவாமித்திரர் கொடு ப்பக்கரத்திலணிந்திருந்த கங்கணங்களை யெடுத்துச் சாரணன் கையிற் கொடுத்தனர். கொடுத்தலுஞ் சானகியார் கண்ணுக்கு த் தோற்றினர். இராவணன் பார்த்திஃதென்ன வியப்பு? வானும், நிலனும், பக்கங்களுந் தங்கத்தை யுருக்கி வாரிப் பூசப்பட்டவோ? மேகமில்லாமல் மின்னல்கள் திரண்டு பரந்திருக்கின்றனவோ? சீதையினுடைய திப்பிய வுறுப்பு களைப் பார்க்கவொண்ணாது, அவளுடைய திருமேனியின் காந்தி கண்களைக்கூசத் தாக்குகின்றதென்றனன். அக்காலை வேள்வியின்பொருட்டு விசுவாமித்திர மகருஷியாலழைக்கப்ப ட்டு வந்த அநசூயையோடு பகவான் அத்திரி மகருஷியைச் சனகர்வழிபாடுற் றம்மகருஷியை வணங்குவான் நம்சீதைவரு கவென மாதரைவிடுக்க, சானகியாரவர்பாற் சென்றனர். இராவணன் ஐயோ! சீதை புறங்காட்டிப் போகின்றனளே. அவளுடைய சந்திரவதனத்தையும், கலசக் கொங்கையையும், தொடியணிந்த வேய்த்தோளையும், மேனியினொளிப் பிழம்பி னுற்கண் வழுக்குற்றுக் கண்டிலேன். முழுமதியைக் கௌ வும் இராகுபோன்று கறுத்தபின்னலைமாத்திரங் கண்டேன். ஏ வித்யுஜ்ஜிஹ்வா! நம்மாற்கவரப்பட்டுச் சிறையில் வைக்கப் பட்டதெய்வமகளிர்களும், நாககன்னிகைகளும், அரசமாதர்க ளுமின்னேயவரவரில்லமேகட்டும். சீதை கிடைப்பளேலவளை யன்றிமற்றியாரையுநோக்கவுமாட்டேனென்றனன். வித்யுஜ்ஜி ஹ்வன் இலங்கேசரோ! இராமவுருத்தரித்தால் சீதை தங்கட்கரி

யளோவென ? இராவணன் ஒருவனைப்போல மற்றொருவன் வேடங்கொள்வது ஆண்மைமகனுக் கழகன்றே. அதனினு மிராவணன் மானிடவேடங்கொள்வது கீழ்மையினுங் கீழ் மையதென்றனன். அவ்வேலை கள்ளநடைச் சாரணன்வந்து அரசமாதவன் மந்திரஞ் செய்து கொடுத்திருந்த கங்கணங்க ளைவாங்கும்வரையுஞ் சீதை கண்ணுக்குப் புலப்படாதிருந் தாள். நானெண்ணியவாறே கடகங்களைவாங்கினேன். பின் னர் ஜனகர்பாலெய்திய மைதிலியோடு தோழிகளுமேகினர். ஒருவருமாங்கில்லாமையினாற் சுற்றிலும் பார்த்துச் சீதையெ ழுதிய இராமபடத்தையுங் கொணர்ந்து வந்துவிட்டேனென் றனன். இராவணன் சாரணா ! நமக்குச் சத்துருவாகிய மனி தனுடைய படத்தையுஞ் சானகியைக்காட்டாது கரந்துவை த்திருந்த கங்கணங்களையுந் தூரவிட்டெறிவாய், அக்கங்கண ங்களை நீ கைக்கொண்டிருத்தலால் நீ யெனக்குத் தெரியவில் லையென்றனன். சாரணன் அக்கங்கணங்களையும், படத்தை யும் புட்பகத்தின்மிசை யோர்புறத்துவைத்தனன். இராவ ணன் இனி யாதுசெயற்பாற்றென்று கவன்றிருந்தான்.

உ - ஆமங்க முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளேசரணம்.

## ௩-ஆமங்கம்.

களவிலும், குத்திரத்திலும், மாயையிலும் வல்லமாரீசன் வந்தான். வந்து அந்தோ ! ஒப்பற்றவாற்றலுடைய இராமபா ணமென்னைத் தூக்கிக்கொண்டுபோய்ச் சாகரத்திலெறிந்தது. பெருவலி யுடையேனாகையாற் பரவையினின்றெழுந் திப்பு றம் போந்தேன். கொடுமை கொடுமை ! இன்றுகாறு மொரு வரும் படாதபாடுபட்டேன். அவ்விராமன் கூர்ங்கணையால் கார்க்கொண்டலினூடு கரந்த சுவாகுவும்பட்டான், தாடகை நிலவுலகமுற்றும் மண்தூளிவிரித்ததனுள் ஒளிந்துவந்தனள். இராகவனம்பென்னும் பெருமாருதத்தினாலத்தூளியை விலக்

கித் தாடகையைக் கண்டு பெண்ணெனன்றிரங்கிக் கொல்லெ ன்று வேறுவிசிகந் தொடுக்காமலிருத்தலும், அத்துகளைப் போக்கிய அஸ்திரமே பகையென்று ஆயிரங் கடகளிற்றினு டைய வலியுள்ள தாடகையுயிரையுமுண்டதெனவுணாத்துத் தாயைக் கருதி யரந்தையுற்றென் னன்னையே யன்னையே! என்னையீன்றோயே! நீயாண்டுற்றாய். தமியனைப் புலம்புகி ன்றேனே அம்மை அம்மை? ஈராஞ்ஞூற்றுக் கைம்மலையி ன்திண்மையுடையாளே! இராமபாண நினது நெஞ்சைப்பிள ந்தாலுங் காலன் நின்னை வெருவாது கிட்டிப்பற்றிப்போயின னோ? அல்லது நீயேயவ்யமபுரிசென்றாயோ? நின்னைப்பிரிந்து யான் தரியேன் வந்தேன் வந்தேன். ஏ சுபாகு! நீ யாங்குச் சென்றாய்? அம்மனையோடேகினையோ? நானிருக்க, இலங்கா திபதியிருக்க, கரனிருக்க வுங்களிருவருயிரை நமனஞ்சா துண்டானோ? அக்கூற்றுவனுயிரை யின்னே நான் பருகுகி ன்றேன். ஏ கராளா! நீயுமிறந்தாயோ? நின்னையுங் காணே னே. வேந்தர்குலப்பனவனாலின்னம் விளைவது யாதோவென மொழிந்து சிறிது நெறி கடந்தனன். உடனே கராளன் வந் தான். வந்து ஓபாலநேத்திரனு மஞ்சுந் தோலாவலியுடைய அரசகுலச் சிறுவனாகிய இராகவன் விடுத்த கணையினுடைய கண்ணுக்ககப்படாதொளிந்தோடிவந்தேன். ஆனால் எனது வேகத்தாற் பிழைத்தோடி வந்தேனல்லேன். பிறன்வரை நின்றாளைக் கண்டவுத்தமனைப்போலப் பாணமெனதுவெரிநை க்கண்டு நாணமுற்று மீண்டு சென்றது, திரும்பிப் பார்ப்பே னேலெனது மார்பு தோன்றுகின்றதென்று இராமபாண மீ ளுமென்னுமச்சத்தால் நிலனைப்பார்த்தவண்ணமா யோடிவந் தேன். மாரீசன் உயிரோடிருக்கிறானோ வில்லையோ? அறி யேன். அவனை மேகமண்டலத்துக்கு மேற்கொண்டுபோன இராமாஸ்திரமெவட்போட்டதோ? எங்குமடித்ததோ? எவ ன்செய்ததோ? அறியேன். மகேந்திர பருப்பதத்துக்கப்பால் கடலில் அம்மாரீசன் விழுந்திருப்பானென்று நினைக்கின்றே னென்றான். கராளனுடைய குரலைக்கேட்டு மாரீசன்மீண்டு

வந்தான். கராளன் இங்குவருகின்றவன் யாவன்? மாரீசனெனலாம். நனைந்து பாசிபற்றிய ஆடையுடையவனும், பேநாறுங் குஞ்சியுடையவனும், உவர்மேலிட்ட மேனியனும் விளங்குகின்ற னென்றுரைத்தனன், உடனே மாரீசன் வரலுங் கராளன் எதிரோடி ஏ பெரியவரோ! கராளன் நமஸ்காரஞ் செய்கின்றேனென்றனன். மாரீசன் குழந்தாய்! கராளா! தீர்க்காயுள் பெறுதியென்றாசி சொல்லி, இராகவனுடைய அம்பெனுங் கூற்றின்வாய்ப்படாதுதெய்வாதீனம் பிழைத்தனையேயென்று கண்ணீர் மல்க, அக்கராளனைக் கட்டிக்கொண்டி-ராமபாணத்தின் வலியையுரைப்பதெவன்! இராகவன் கார்முகத்தை வாங்கிச்செய்த நாணொலியினாலண்ட முகடுவிண்டது! விண்ணேறென விழுகின்ற வெங்கணைகளின் துழனியால் திக்கயங்கண்டு நடுங்கிச் செவிடுற்றன, மாரீசன் தொலைந்தான்தொலைந்தானென்று தேவர்கள் கைபுடைத்தார்க்கு மமலையால் நான்செவிடுற்றேனெனக் கராளன் மாரீசனைநோக்கா, பெரியீர் மாயைவல்லீர்! தெய்வச்செயலால் உயிருய்ந்து வந்திரோயென்று பராய் ஐய! இராமனைக் கோறல் செய்யாது சென்று நமதரசனுக்கு நாம் பட்டவாற்றை யுணர்த்துதுமேல், நம்மைத்துகளௌனவு மதியான். அன்றியும், இராமனுயிரோடிருந்தால் நமது வேந்தனுக்குஞ் சிதைக்கும் விவாக நடப்பதரிதாகையா லிராமனை யுருச்கு முபாயமென்னையென, மாரீசன் சிறிதாராய்ந்து கராளா! சீதையைப்போல் மாயையினால் படைத்துச் சனகனுயிர் மாய்ந்தன னென்றாங்கவட்குணர்த்தித் தந்தையிறந்த வின்னலாலவளை யிராமன்முன் செந்தீயில் வீழ்ந்திறக்கும்படி செய்வமேலவ்விராகவன் சீதைமாய்ந்தும் வாழ்வேனோவென் றவ்வங்கியிலேயே யாவி நீப்பன். பின்றைப் புத்திரசோகமடைந்த தசரதனை விசுவாமித்திரன் தேற்றி அயோத்திகொண்டேகுவன். அப்போது இராசகாரியம் ஊறின்றிமுற்றுப் பெறும். அங்ஙனமியற்றும் மாயையைக்காதிகாதலனறியாதியற்றவேண்டுமென்றனன். கராளன் ஐய! உமது சூழ்ச்சி

நன்று நன்று. கௌசிகாநதியின் கூலத்தில்விசுவாமித்திரனு டைய பன்னசாலைக் கொன்றனைக்காவதத்துக் கப்புறத்தில் த சரத சக்கரவர்த்தி வந்தினிதிருக்கின்றனனென்று கேள்வி யுறுகின்றேன். ஆங்குச் செல்வோமென்றிருவரும்வழிக்கொ ண்டனர். கராளன் பரிமாக்களுடையகனைப்பொலி கேட்கி ன்றது. வனமேதிக ளவ்வொலியைப் பொருது கொம்பினுல் புற்றுகளை முட்ட வப்புற்றுகளி லிராநின்ற மாசுணங்கள்கா ன்ற நஞ்சையளாவிய காற்று வீசுகின்றது. பேரிமுதலியபணை களினெலியைக் கேட்டு வலிமுகங்கள் பணைகளிற் ருவுகின் றன. கடகரிகட்கரிந்த நாணற்புற்களினடிகள் தோன்றுகின் றன. இனி நாம் ஆங்கட்செல்லாது இராமன் இவட்போத லுக்குரியகருமம்புரியவேண்டுமென்றனன்.அவ்வேலையிராமப த்திரர் வேட்டைமேல் நசையுற்றுத் தந்தையோடுனாயாது, தம்பியனைக் கூவாது மணிபதித்த மரவடிமீதிவர்ந்து சராசன மேந்திய கமஞ்சூன்முகில்போல வனத்தினூ டெழுந்தருளி னர். மாரீசன் இராகவபிரானைப்பார்த்துத்தெய்வாதீனம் கும் பிடப்போன தெய்வங் குறுக்கேவந்தாற்போல யாதொரு முய ற்சியுமின்றி வலியவே யிராமன் வருகின்றனனென்று களித் துச்குழந்தாய் கராளா! நீயிராமனுடைய நண்பனாகிய பிங்கள னைப்போல வேடங்கொண்டு வனகரியா லலைக்கப்பட்டவன் போற் கதறியோலமிட்டு இராமனை மிக்கசேய்மையில் கொ ண்டுவந்துவிடு. நான் காசிபனைப்போலமேனிகொண்டு, மா யாசீதையை யிராமனுக்குக் காட்டி, முன்னியவாறு முடிக்கி ன்றேனென்றகன்ருன். நினையினுட் கராளன் பிங்களனு டைய படிவங்கொண்டு ஏ இராமா! காட்டும்பலென்னைப் பு ழைக்கைகொண்டோச்சுகின்றது. இவ்வேலை வந்தென்னைக் காவாயெனவரற்றி, இறந்தேனிறந்தே னென்று கதறலும், அருள்வள்ளலாராகிய தாசரதியாராங்கோல மிடுகின்றவன் நமதன்பன் பிங்களனேயென்று வருந்திவின்னுணைத் தெ றித்தொலிசெய்து குரலெழுந்த திக்கைவினைந்து சார்ந்து, ஆங்குமதமாவினு லறையுண்டு சோகமடைந்தவனைப்போற்

பாவனைசாட்டிக் கிடந்த பிங்களவேடக் கராளனைத் திருக்கரங்களாலெடுத்து மடிமீது வைத்துத் தைவந்து காலியங்கவுத்தரியத்தால் விசிறிப் பிங்களா! பிங்களா! எழுவாய் எழுவாய் கண்டிறவாய் திறவா யென்றனர். கராளன் சோகந் தீர்ந்தவனைப்போலெழுந்து ஏ இரகுநாதரோ! நீர் வேட்டமாடத் தனியாய்ச் சென்றிருக்கின்றீரென்று கேட்டு வந்தேன். மதவெற்பொன்றென்னை வெருட்டித் தூம்பு டைக்கையாற்முக்கலு நானிட்டவோலங்கேட்டு, நீர்விளைத்த நாணொலிக் கவ்யானை வெருண்டித் தண்டத்திறூடு சென்றதென்றனன். இராமபத்திரர் பிங்களா! தெய்வாதீனம் பிழைத்தனையே. சாதுக்கள் மனம்போற் றெளிந்தருகில் நதி தண்ணெனப்பெருகுகின்றது. தட்பமாகக்குளிர்ந்ததென்றல் வீசுகின்றது. தருக்களுடையநெருக்கத்தாற்கதிரவன்வெயில்புகாதிருளாகியிவணெல்லாந் தண்ணென்றுள்ளது. காதுக்கினிதாய்ச் சுரும்பினந்தூங்கிசை பாடுகின்றது. மயிலினமாடுகின்றது. குயிலினங் கூவுகின்றது. கிளியினம்பேசுகின்றது. இந்நிலனுள்ளத்துக் கின்பம் பயப்பதாயுள்ளது. நம்மைச் சேர்ந்தவர்கள்வருங்காறு மிவட் சுகித்திருப்போமெனத் திருவாய்மலர்ந்தருளக கொடுமனக்கராளன் நம்மைச்சார்ந்தவர்கள்வருங்காறுமன்று மாரீசன் காசிபனுடைய வேடந்தரித்து வருமளவு நாமிவணிருத்தல் வேண்டுமென் றுள்ளத்தினுளெண்ணி நன்று நன்று. இத்தருவின்புனைநிழற்கீழிருந்து விடாய்தணிவோமென்றனன் இரகுநாயகர் பிங்களா! என்னுருயிரனைய நீ சாவடைதியேல் இரதியினுஞ் சிறந்த சீதையைக் கலியாணஞ்செய்யேன். உயிர்வாழ்வையு மதியேனெனக் கூறியருள, வஞ்சகக் கராளன் இரகுநாதரோ! தீதொன்றும் புகலாதீர். சீதையை நீர்திருமணம் புரியாவிடி னவளிறப்பது திண்ணம். உம்மையன்றி வேறு யாரையுமதியாளென்றனன். இராமபிரானுர் அன்பா பிங்களா! உண்மை யுரைத்தாய். சீதை யென்னைக் கனவிற் கண்டுகாமுற்று, வெறிகமழ் சந்தனக்குழம்பணிந்தும், மென்றளிர்ப் பூஞ்சேக்கையிற் படுத்தும், முண்டகப் பூவை முகிழ்முலையி லொ

ற்றியும் விரகவெப்புநோய் மாறாது வெதும்புகின்றனளென்றுகாசிபரெனக்குச் சாற்றியருளினரென் றருளிச்செய்யக்கராளன் அச்சோ! மாரீசன் இன்னம் வரவில்லையேயென்றயலெங்கும் பார்த்துச் சுவாமி! காசிபரென்பவர் யாரென்று கடாவினன். இராமசந்திரர் பிங்களா ! பகவான் விசுவாமித்திரருடைய மாணாக்கர் காசிபரென்று நீயேயெனக்கு முந்தியுரைத்தனை. மறந்தாயோவென வினவியருளத் தீவினைக் கராளன் அந்தோ!தெரிந்தவனைப்போல, வாளாவிராது நெஞ்சைமாரீசன்பாற் செலவிட்டமையால் வாயில்வந்ததைச் சொல்லிவிட்டோம். இராமன் ஐயுறுவனோவென்றஞ்சி, இராகவரே! பொய்சாந்தேனல்லேன். வெங்கதவாரணத்தை முன்னுந்தோறுமெனதுநெஞ்சம் பறையடிக்கின்றமையா லுணர்வழிந்தேன்.நங்காசிபர் பொய்யுரையார். இப்போது சீதை நல்லுணவுண்ணாமலும், நள்ளிரவிலுங் கண்வளராமலும், நீராடாமலும், நல்லாடை புனையாமலும், பூச்சூடாமலும், ஆடல்புரியாமலும், அணியணியாமலுநும்மையேநினைந்துநினைந்துருகுகின்றனளென்று கேள்வியுறுகின்றேனென்றான். இரகுநாயகர் நமது நண்பனுடைய விம்மொழியால் மதனனம்மிடத்து மெல்லமெல்லக்கிட்டிவர நமது வலியுநாணமு மானமு மெட்டிப்போகின்றன. சீதையோ வெனதுள்ளத்திற் குடிகொண்டு புறத்திற்றோன்றா திருக்கின்றனள். என்செய்குதுமென்று வருந்திமௌனமாயிருந்தனர். கராளன் இரகுநாதரோ ! ஏன் ஒன்றும் புகலாதிருக்கின்றீரென, இராமபத்திரர் பிங்களா! இனிச்சீதை வார்த்தையை நிறுத்தென் றுரைத்தருளினர். கராளன் கைகூப்பிச் சுவாமி! மைதிலியினுடைய சரித்திரத்தைக்காசிபர்முதலாகிய பலராலுமென்னாலுங் கேட்டுக் களிக்குநீர் இப்போது சீதை மொழியை நிறுத்தென்றீர். சீதையெனு நாமமுமக்குக் காமப்பிணியைத் தருகின்றதோ ? நம்மை நினைத்துச் சானகி ஐங்கணைக் கிழவனால் வருந்துகின்றனளே யென்று நீர் மறுகுகின்றீரோ ? மைதிலியையடைவேமோ ? மாட்டேமோ ? என்று சிந்திக்கின்றீரோவென மொழிந்துநகை

புரிந்தான். இரகுநாதர் தமது இதயத்தைநோக்கி ஏ கெட்ட மனமே! இரதியுஞ்சேடிக்குந் தரமல்லாதவழகுமிக்க சீதையைக் கண்ணுற்றாயில்லையே. கேள்வியுற்றதைக்கொண்டு வருந்துகின்றனையே. பிறர் நகைத்தலைநோக்கியேனுங் கூசுவாயல்லையேயென்று வருந்தி ஏ பிங்களா! சீதை நமக்குக்கிடைப்பதரிதென்றோதியருளினர். கராளன் ஓ! ஓ! இந்த வரசர் குலச் சிறுவனுக்குச் சீதையின்கண் வேட்கை கைம்மிகுந்திருக்கின்றதென்று முன்னி இராகவரோ! சானகியை யுமக்கு மணஞ்செய்விப்பான்பகவான்விசுவாமித்திரரொத் தினித்திருக்கின்றரென, இராமபத்திரர் பிங்களா! பகவான் விசுவாமித்திரமகருஷி கடிமணவிடயந் தொடங்கி யிருக்கின்றனரொன்று நீயறிவாயோவென்று வினவியருளினர். கராளன் விசுவாமித்திரன் செயலை யிராமபத்திர னறியான்போலு மென்றெண்ணிக் காசிபர் சொல்லவெனக்குத் தெரியவந்ததென்றான் இராமசந்திரர் ஆமாம். காசிபரார் நீதானே. சிநேகத்தாலவர்நினக்குச் சொல்லியிருக்கலாமென் றருளிச்செய்தனர். அவ்வேலை சீதையைப்போலவு மவளுடைய தோழிகளைப்போலவு மாரீசன்மாயையாலுண்டாக்கித் திரைக்குளிருந்து இராமபிரானைநினைந்துவிரகதாபமடைந்து புலம்பும்படிசெய்து,பின்னராங்கோர் மகிழமரத்தினடியிற் றோன்றுகின்ற இருவர் இரா மனும் பிங்களனுடைய வேடத்தைக்கொண்ட கராளனும் போல்கின்றா ரென்றெண்ணுற்றுக் கிட்டி நட்பினாற் காசிபர் நீயேயென்று கராளனை நோக்கிச் சுவாமிமொழிந்தருளிய அம்மொழியைக் கேட்டு ஓ! ஓ! அவன் நமதுகராளனல்லன். காசிபன் பிங்களனுடைய வேடங்கொண்டு வந்திருக்கின்றனன் போலாம். அக்காசிபன் பிங்கள வேடந்தரிக்கக் காரணமென்ன? காசிபனுடைய படிவத்தை நாம் தரிக்கின்றனமென்பதை அரசகுலப் பார்ப்பான் ஞானநோக்காலுணர்ந்து நாஞ்செய்யுஞ் செயலையுணருமாறு காசிபனைப் பிங்களவேடத்தோ டிராமன்பால் விடுத்திருக்கின்றனன். அண்மையிலுள்ள விரிதலைத்தருவனத்தினுள் மறைந்திருந்து நிகழ்வனவற்

றைக் கண்ணுறுவோமென்று போந்து கரந்திருந்து மாயை யைக்கருதினன். அவ்வேலை திரையினுட் சீதை தோழி காள்! எனதுடல் வெதும்புகின்றது. தாமரை மலர்க ளையுந் தண்டுகளையுங் கொணர்வீரென்றனள். இராமசந்தி ரர் கராளனைநோக்கிப் பிங்களா! அவாசியி லரவமென்ன? யாருடைய மொழியாயிருக்கலாமெனக் கடாவியருளக்கரா ளன் நான்குதிசையையும் பார்த்து மாரீசன் காசிப வேடங் கொண் டின்னமிவட்போதர லில்லையாகலின் பேசினவள் மாயாசீதையன்று. ஐயோ! காலஞ்செல்லுகின்றதே மாரீச ன்போதரவில்லையேயென்று நெஞ்சம் புழுங்கி இராமசந்திர ரே! அடவிகளிற் சஞ்சரிக்கின்ற வனதேவதைகளுடைய வார்த்தையென்று நினைக்கிறேனென்றனன். ஒளிந்திராநி ன்ற மாரீசனதனைக் கேட்டு ஓ! ஓ! அவனுண்மைக்காசிபனே பிங்களனுடைய வேடங்கொண்டு வந்திருக்கின்றனன். நம து கராளனே சீதையென்றன்றோ சொல்லுவன். கராளன் இது காறும் இவட்போதராதிருப்பக் காரணமென்ன? அரச மாதவனுடைய வாளையால் இலட்சுமணனவனைக் கொன்று விட்டானே? அவ்விருவரும் இராமனும் காசிபனுமே சுவாகு வையுங் கராளனையும்போலவ்விருவரையு மிறக்கச்செய்வோ மென்றுன்னினன். இராகவபிரான் பிங்களா! முந்திச்சிலமாற றங்கேள்வியுற்றோமே. ஆங்குச் சென்று பார்ப்போமென்று சிறிது சேய்மை நடந்து கரிந்தபல்லவச்சேக்கையையும், சித றிய சந்தனச்சேற்றையும், மைகரைந்தொழுகிய கண்ணீரை யும், தாமரைநாளத்தாற் செய்த வளையங்களையுங் கண்டிவை யென்னையெனக் கராளன் இரகுநாதரே! நான்கழறியபடி வன தேவதையல்லள். விரகதாபமடைந்தவோர்பெண் இவ்வி டத்திலிருந்து நமது வார்த்தையைக் கேட்டு நாணமுற்றகன்ற னளென்றுன்னுகின்றேனென்றான். திரையினுள் அடிசே டி! சீதாபிராட்டியாருக்குக் காமநோயதிகம்வளர்கின்றது. புதி யபல்லவங்களையும், நறுமலர்களையுங் கொணர்வாயென் றொ ருத்தி செப்பலும், இராமசந்திரர் பிங்களா! நீ மொழிந்தவா

றுபெண்தானென்றனர், கராளன் அரிதரிது! மாரீசனே இன்னங்காணும். மாயாசிதையென்றும், உண்மைச் சீதையென்றும், வேறுயாரென்றுந் தெரிகிலேம். மாரீசன் காசிபனுடைய மேனிகொண்டுவருங்காலை க்ஷத்திரியப்பார்ப்பானறிந்து இலட்சுமணனைக்கொண் டவனைக்கோறல் செய்திருப்பன். இன்றேல் மாரீசன் காலநீட்டியானென்றுன்னி வருந்தி, நாமிதுபோது வருந்துவதழகன்றென்று தேறி, இராமப்த்திரரே! அயன்மாதைப் பார்ப்பதிற் பயனெவன்? சக்கரவர்த்தி முதலாயோரும்மைத்துருவுவர், மீண்டுசெல்லுதும் வாருமெனவுங்கரந்திராநின்ற மாரீசன் அவனுண்மைக் காசிபனே, ஐயமில்லை. இராமனைத் தசரதன்பா லழைத்துக்கொடுபோக முயல்கின்றனன். நமது கராளனுயின் நமது வரவை நோக்கி இராமனையிங்ஙனே யிருப்பச் செய்வன். நல்லது முற்றுங் கண்டுணர்வோமென்றிருந்தனன். இராகவபிரான் பிங்களா! இப்பருப்பதத்தைப் பாராய். துகிற்கொடிகளை நிகர்த்தகதலிகளும், மாதர்களைப்போன்ற மஞ்ஞைகளும், ஆடவர்களைக்கடுத்த அரிமாக்களும் பொலிதலால், நமதயோத்தியாபுரியிலுள்ள மாடம்போலத் தோன்றுகின்றதென் றுரைத்தருளி, பெயர்த்தும் பார்த் ததன்பாங்க ரோர்மங்கை தெரிகின்றனளென் றியம்பியருளினர். கராளன் ஆமாம். சிறிதண்மிக்கண்ணுறுவோமென்றான். மாரீசன் அடே காசிபா! நன்று நன்று. மாரீசனென்னு நமனால் நீ நாசமடைவாயென்று மெல்லவோதினன். திரையினுள் அடி தோழி! பங்கயப்பூக்களைத் தகர ஞாழலில் தோய்ப்பாயென்றுவார்த்தைபிறக்கக் கராளனதைச் செவியேற்று, அம்மங்கையினுடைய மொழிகள் இனிய நறுந்தேறல் போலிருக்கின்றன. இரகுநாதரோ! ஆங்குச்சென்று பார்ப்போமோ வேண்டாவோவென, இராமபிரான் சிறிது தூரஞ்சென்று சேடியர் சூழநின்ற மாயாசீதையைக் கண்டு பிங்களா! அவளார்? பாரெனக் கராளன் நோக்கி மாரீசன்செய்த மாயாசீதைதானேவென்றெண்ணி, இரகுநாதரோ! அவளழகுக்கோரெல்லையில்லை, தெய்வப்பெண்ணோ? நாககன்னிகை

யோ? விஞ்சையர்மாதோ? ஈசன்கண்ணால் மதனன் வெந்த மையால் விரகதாபமடைந்த இரதியோ ? விண்ணைப் பிரிந்து மண்ணையுற்ற மின்னலோ? யாரோ? பல்லவங்களெல்லாங் கரியவீற்றிருக்கின்றனள். அவளுடைய வுடலின்ஒளியும், திருமுகச்செவ்வியும், தனங்களினுடைய இரமணீயமு நன்றாயிருக்கின்றனவென்றனன். மாரீசனதைக்கேட்டுக் காசிபனுமிராமனு நம்முடைய மாயவலையில் நன்கு சிமிழ்ப்புண்டனர்கள். சுபாகுவுக்கும் கராளனுக்கும் பிரதியாக இவ்விரண்டு பெய்யையுங் கொன்றுவிடுவோமென் றெண்ணினன். இராமபத்திரர் வனத்தைநோக்கிஐயோ! சீதைபடுந்துயரத்தைக்கண்டல்லவோ கிளிகளுங் குயில்களுமாங்கனி முதலானவைகளையுண்ணவில்லை. செம்முளரிப்போதுகளிலுறைகின்ற எகினங்கள் நெருப்பினுப்பண்வீழ்ந்தனபோல வாடுகின்றன. மயில்களகவா தொடங்குகின்றன வென்றனர். தீயவினைக் கராளன் அவைகளெல்லாம் மாரீசன் மாயையன்றி வேறன்றென்று நினைந்து, இராகவரோ! இப்போது நம்மால் காணப்படுகின்றவள் சீதையேயென, இராமசந்திரர் ஜானகி விரகதாபமடைகின்றனளென்று காசிபர் நமக்குச் சாற்றியிருக்கின்றனரோ. அச்சீதைதானிவள், ஐயப்பாடில்லையென்றனர். பின்னர் விசுவாமித்திரமகருஷியினுடைய மாணுக்கராகிய காசிபர்வந்தார். அணுகிவந்து சீதாபிராட்டியாரை இராமபிரானுக்குத் திருமணம்புணர்க்கவேண்டுமென்று நமது தேசிகராகிய பகவான்விசுவாமித்திரர் தலைப்பட்டிருக்கின்றனர். நட்டோனாகிய பிங்களனுடைய மொழியினால் இராகவபிரானுடைய மனம் சீதையையே நாடுகின்றது. வேட்டையாடுவான் தனியே சென்ற இரகுபுங்கவரின்னு மீண்டுவரவில்லை. அவரைத் தேடிப்போய பிங்களனும் வந்தானில்லை, இவ்வனத்திலவனைத்தேடிப் பார்ப்போமென்று சுற்றினர். தீத்தொழிற் கராளன் காசிபரைப்பார்த்து, நமது மாரீசன் காசிபர் வேடங்கொண்டு வருகின்றனனென்றுவப்பெய்தி இரகுநாதரோ ! சீதையினுடைய நிலையைத் தெரிந்த காசிபர் ஆங்குவருகின்றனர். நான்சென்

றவனை நும்வயிற்கொணர்கின்றேனென்று வெளிப்பட்டான், இரகுநாதர் போதருகின்ற காசிபர் காமநோயுழக்கு மப்பெண் சீதையென்பரோ? அல்லளென்பரோ? என்றுவருந்தினர். திரையினுள் மாயாசீதை அச்சோ! எனது காமநோய்க்கு மருந்துமுண்டோ ? அதை நீப்பாருமுளரோ? என, இரகுநாயகரதைத் திருச்செவிசார்த்திப் பெண்கனியினுடைய கண்டத்தி னின்றமுதம்பெருகினாற்போலெழு மதுரமான மொழிகளெனது செவிக்கின்பஞ்செய்கின்றன. யாழுக்குங்குழலுக்குமவளுடைய மொழியே யினிமையைக் கற்பித்தனவெனலாம். அளகம் மேகமெனக் கறுத்ததெனப் பொலிவதாயினும், நுதலிற் சுருண்டு சுருண்டு திகழ்தலால், அளிகள்முரலுமரவிந்தமெனப் பொலியு மம்முகத்தாளை, அநங்கன் கூர்ங்கணையெனப் பொலியுங் கண்ணாளை, பொற்றாமரைமொட்டினெழிலையழித்த குயத்தாளைப் படைத்தவன் நான்முகனோ ? மதனனோ ? நானுமவளை யடைவேனோ? என, அரம்பைக் கானின் மறைந்திராநின்ற மாரீசன் அவளைப் படைத்தவன் நான்முகனு மதனனுமல்லன். மாரீசனென்று முறுவலித்துத் தான்முன் சூழ்ந்தவாறு காசிபமாமுனிவருடைய திருவேடங்கொண்டு வெளிப்பட்டான். கோசலை திருமதலையார் அவளைப் பாரா ஆங்குக் காசிபர் போதருகின்றனர். அவரை நோக்கவெனதுள்ள நாணுகின்றதென்று தலைவணக்கியிருந்தனர். மாரீசன் ஆயிரம்புழைக்கையின்வலியுடைய தாடகையைக்கோறல்செய்த க்ஷத்திரியப் பிரமசாரி யேழைபோல வீற்றிருக்கின்றனன். திரிலோகத்தையு முடிக்கு மாற்றலுடையானேனு மதைக்காட்டாது விநயசம்பத்துடையானா யிருக்கின்றனன். கண்களுக்கினியனாயினுங் கருமத்தாற்கொடுமையனான அவனைப் பெருந்தியிற்றள்ளிக் கொன்றுவிடுவோமென்றுன்னிவந்து, நமது குழந்தை இராமனுக்கு மங்களமுண்டாகுகவென்றனன். இராகவபிரானார் மாரீசனைநோக்கிக் காசிபரோ? நீரென, மாரீசன் நாம் காசிபனுடைய் படிவங்கொண்டு வருகின்றனமென்பதை இராகவனுணர்ந்துண்மைக்கா

சிபரோ? என்று வினவினஞே? எனக்கொடு வெருவலுற்றுத் தாசரதிநமது மாயையின் திறத்தைத்தெருண்டுகொண்டவன ல்லன். காசிபன் பிங்களனுடைய வேடந்தரித்துவந்திருப்பதை யிராமபத்திரன் அறிந்திருக்கலாம். நாமிவ்வமையங் காசிபன துபடிவங்கொண்டு தோன்றியிருக்கின்றமையி னப்பிங்கள வேடங்கொண்ட காசிபர்நீர்தாமேயெனக்கேட்டனனென்று தேறி, இராமா! நான் பகவான் விசுவாமித்திர மகருஷியா ருடைய மாணுக்கரி லொருவனுகிய காசிபன். கபடமில்லாதவ னென்றனன். இரகுநாதர் ஓ! ஓ! பிங்களன் புகன்றகாசிபர் இவர் தாமென்றெண்ணி ஐயரோ! ஆங்குத் திரையினுளுறை பவள் சீதையோ? சொல்லுமினென்றனர். மாரீசன் ஆமாம் அவள்தான் ஜானகியென, இராமசந்திரர் ஏ வருந்திய உள்ள மே! அவளே ஜானகியாம். முனிவரோடவளைப்பற்றி நா ம்பேசுங்காறு நீயங்குமிங்கு மலையாதிருத்தியென்று நெஞ்சி ற்கோதி, ஏ காசிபமுனிவரோ! சீதையின்திறத்து நீர் சிலமொ ழிகள் மொழிந்தீரெனக் கேள்வியுற்றேனென்றனர். மாரீச னதனைக் கேட்டிதுவரையிலு மிராமனுே டிழைந்தவனுண் மைப் பிங்களன்தான். நமது கராளனல்லன், அவன் இலட் சுமணனுலுயிர்நீத்தவனே என்செய்கேனென்று வருந்தி,இரா மசந்திரரோ! பிங்களனெங்குற்றுனென, இராமபத்திரர் நம் மைவிட்டுப் பிரிந்துபோன பிங்களனிக்காசிபரைச் சந்திக்க வில்லனுே? சந்தித்திருக்கிற் பிங்களன் யாங்குச் சென்று னென்று யினவ ஏதுவில்லையே யென்றுன்னு, காசிபரோ! பிங்களன் நீயிர் வருதலைப்பார்த்து, நும்மை விளித்துவர வெ திர்கொண்டுபோந்தான். முன்னர்ப்போலக் கானகத்துங்கலி ன்கையிலகப்பட்டானுே வென்றருளினர். காசிபர் வேடங் கொண்ட மாரீசனதனைக் கேட்டு, இதுகாறும் இராமனுேடு கொஞ்சிக் குழைந்துநின்றவன் நாம் நினைந்தபடி யுண்மைப் பிங்களனல்லன். நமது கராளனே யென்றுள்ளுக்குளுவந் தான். கோசிகாநதி தீரத்திலிருந்து வேட்டைமேனசையாற் றனியே சேறலுற்ற தாசரதியைத் தேடிநடந்தவுண்மைப்பிங்

களனை யுண்மைக்காசிபர் தேடுவான் சுற்றுகின்றனரென்று முந்திப் புகன்றேமல்லேமோ? அக்காசிபர் பிங்களனை யெவ ணுங்காணலராகிப் பெயர்த்தும் வந்து சேய்மையினோக்கி யாங்குத் தோழியர் புடைசூழப் பல்லவச் சேக்கையிலிருந்து தாபமடைகின்றவள் ஜனகர்குல சுந்தரியார்போலக் காண்கின் ருள். ஓ! ஓ! அச்சானகியார் பகவான் விசுவாமித்திர மகா முனிவரது பன்னசாலையிலன்றோ விருக்கின்றனர். இக்க ன்னிகையோ மைதிலியார்போலவே கட்டழகுடையவளாயி ருக்கின்றனளென்றுகருதி யயலினோக்கி யோர் பள்ளத்திற் பெருந்தீவளர்த் தோர்பாறையினு லதுமூடப்பட்டிருக்கின் றது. இதற்குக் காரணம் யாது? மதனனுல் மம்மருழக்கி ன்ற அவ்வன்னமன்னுள் அங்கியிற்புகவோ? அறிகிலேம் இக்குறுஞ்செடிமறைவிலிருந்து நிகழ்வதைப் பார்ப்போமெ ன்றிருந்தனர். பின்னருண்மைப் பிங்களன் வந்தெனதைய னை இராமபிரானை யான் கண்ணுற் பார்ப்பதென்றென்று வரு ந்தி நான்குதிசையினுநோக்குற் றோர்திசையின் விசிகத்தா லேவுண்ட கடகரி, எண்கு, கேழல், கொடுவரிமுதலியவற்றின் புண்ணீர்த்துவலை சிந்தியிருத்தலைக் கண்ணுற்றுத் தாசரதி செ ன்றவழி யிதுவேயென்று சிறிது சேய்மை நடந்து ஓ! காசி பராங்கு நிற்கின்றனர். இராமபிரானு மாங்கணிருக்கலாமெ ன்றுவந்து, புறத்திலம்புப் புட்டிலுங் கரத்தில் வில்லுமிடையி ல் வாளுங் கண்ணிற் கருணையுந் தாங்கிக் காசிபருக் கயலில் நமது நாதர் நிற்கின்றுரென்றுவந்தனன். மாரீசன்வருமப் பிங்களனைப் பார்த்துப் பிங்களவேடங்கொண்ட நமது கரா ளன் வருகின்றுனென்று கருதி, இராகவா! பிங்களன் வந் துவிட்டானென இரகுநாயகர் பிங்களா! நீ யுண்மையைச் சொன்னுயென்று இப்போதுதானெண்ணினேனென்றூர். பிங்களனதனைச் செவியுற்று நாமோவொன்றும் புகலாதிருப் ப, நீ வாய்மைபகர்ந்தனையென்று சுவாமி சொல்லக் காரண மென்னவென்று நினைந்து, இரகுநாதரோ! நீர் கூறியருளிய திருமொழியை யானுணரவில்லையென்றனன். மாரீசன் வி

ரைந்து, முந்திக் கால்விசைத்தோடி வந்து அப்பிங்களனை நோக்கிக் கராளா! தெய்வாதீனம். நின்னையுயிரோடு கண்டேனே. காசிபன் பிங்களனுடைய வேடத்தைத் தரித்துக்கொண்டு, இராமனோடு குலாவுகின்றனனென்றும், சுமித்திரை சிங்கத்தால் அடிக்கப்பட்டு, நீ துஞ்சினையென்றுமெண்ணிப் பீழைப்புணரியிலழுந்தினேனென, பிங்களன்மாரீசனைக் காசிபரென்றேயெண்ணி நகைத்து ஒருப்பட்டு நிற்குமனமுடைய காசிபருங் கட்குடியனைப்போல நன்றாய்க் குழறுகின்றனரென்றுள்ளத்தினுளுன்னிக் காசிபரோ! நீர் புகன்ற மொழிகளென்னால்தெருளப்படவில்லை. என்னை நோக்கிக் கராளா! என்றீரோ. மீண்டுஞ்சொல்லுமினென, மாரீசன் ஓ! ஓ! நமது கராளனல்லனென்றுவெருவந்து நண்புடைய பிங்களா! பெண்துணிவாயிற்றாவென்றன்றோ சொல்லினேன். மற்றவை நிற்க, ஆங்கு நிற்கிற பெண்ணமுதைப்பாரென்றுகண்ணுற்காட்டினான்.பிங்களன் கண்ணுற்றுமைதிலியாரன்றி இவ்வளவுப் பெருஞ்செல்வியுள்ள பெண்ணு முலகிலுண்டோ? அம்மிதிலைநாட்டியாரோ! ஒன்றரைக்காவதத்துக் கப்புறனிலுள்ள பகவான் விசுவாமித்திரருடைய ஆச்சிரமத்திலிருக்கின்றனராதலா லிவளவரல்லள். எழிலெல்லாமொருசேரத்திரண் டோருருக்கொண்டாற்போ லிருக்கின்றனளென்று நின்றனன். மாரீசன் ஓ! ஓ! இவன் கராளனல்லன். பிங்களனே அரிதரிது! குழந்தை கராளன் நாமுன்னரோ யெண்ணியாங்குச் சுமித்திரைகான்முளையால் முடிந்துவிட்டானோ? பிங்களப்படிவங்கொண்டு, வேறெவனிருக்கின்றானோவென்று பருவந்து இரகுநாதரோ! கண்களினின் றாலிசிந்தவப் பெண்மயிலழுகின்றனள் பாரீரென, இராமபத்திரர் பார்த்து, ஓ! ஓ! அவளுடைய முகங்கமலத்தினளவாயினுங் கண் கடலினும் பெரியவாயிருக்கின்றன. இடையிழையினு நுண்ணியதாயிருப்பினும், பொன்வள்ளம்போலு முலைகள் மலையென விளங்குகின்றன. பூமகளினு மாமைமிக்க வெழிலுடை அவள் வருந்துகின்றமை யெனதுள்ளத்தை

வருத்துகின்றதென்றனர். பிங்களன் இவருண்மைக் காசிபரா யின், நம்மைப்பார்த்துக் கராளா! நீயிறந்தாயென்றும், காசிபன் பிங்களனுருக்கொண்டு வந்திருக்கின்றனனென்று நினைத்தே னென்றும், மறைபொருளாக நமக் கியம்ப ஏதுவுண் டோ? இல்லையாகலா லிவன்காசிபரல்லன். தாடகையையிரகு நாதர் கொன்றமையா லோரரக்கன் மாயையாற் சீதையைப் படைத்துக் காட்டி நமது இராமசந்திரனைக்கொல்வான் காசி பர்வேடந் தரித்திருக்கின்றனன். நீ முந்திச் சொல்லியதை மீண்டுமுறையென்று நாங்கேட்டதற்கதைப் புகலாதுசிதமான விடை சொல்லாது வெருவுற்றுக் கராளாவென்று விளித்த தை மறைப்பப் பெண்துணிவாயிற்றுவென்றேனென்றுனென் று நினைந்து, இட்சுவாகு குலசம்பூதரோ! ஆங்குக் காணப்படுகின் றவள் சீதையாரல்லள். இவ்வடவியி லச்சானகியார்வரக் கார ணமில்லை. இது நிசாசரருடைய மாயையென் றெண்ணுகின்ற னெனென, இராமசந்திரராலோசித்துக் காசிபரைத் தூரத் திற் கண்டெதிர்கொண் டவரையழைத்துவருகின்றே னென் று சென்ற விப்பிங்களன் அக்காசிபரைப் பாராமல் மீண்டு வந்து, அவள் சீதையல்லள் மாயையென்கின்றனன். முந் தியோ சீதை சீதையென்று கொண்டாடினன். உண்மைச் சிதையை மாயாசீதையென் றிப்போ திவனுரைக்கக் காரண மென்னவென் றுன்னி, மாரீசனைநோக்கிக் காசிபரோ! பிங்க ளனுடைய மொழியைக் கேட்டீரோவென, மாரீசன் இராமப த்திரரைக் கிட்டி இரகுநாதரோ! மாயைதெரிந்த வோரரக் கன் நமது பிங்களன்போலப் படிவங்கொண்டு தாடகையையு ஞ் சுவாகுவையுங்கொன்ற நும்மைக் கொலைபுரிய வந்திரு க்கின்றனனென்று கருதாநின்றேனென்றான். இராமபத்தி ரர் காசிபரோ! நீர் பகர்ந்ததுண்மையே. நமது பிங்களனிவ் வெல்லை வந்துவிட்டா லிவனடையும் பெற்றியென்னுமென, மாரீசன் இராமசந்திரரோ! தாடகையுஞ்சுபாகுவுமடைந்த பெற்றியே யிவனுடையதாகுமென்றனன். அவ்வேலை பிங் களன் அத்தோ! நாம் பிங்களனல்லோமென்று மிக்கரவட

ஊனக் காசிபரென்றுங்கொண்டு, அவன் மாற்றத்தைச் சுவாமி யேற்றுக்கொள்கின்றனரோ யென்செய்குதுமென்று பொருமி இரகுநாதரோ ! உமதடியேனுகிய நானிருப்ப வென்னைத் தவிர்த்துக் கள்வனேடென்னுளையாடுகின்றீரென்றனன். தாசரதியார் மாரீசனைப் பாராக் காசிபரோ ! நாம் பேசுமமையத் திவ்வரக்கனஞ்சா திடையிடைப் பேசுகின்றுனெனப் பிங்களன் அதனைக்கேட்டுத் தன்னியற்கையுருமாறிக் காசிபருடைய வேடம்பூண்ட விராக்கதனுலிப்போதுள்ள நமது தன்மை நன்றுயிருக்கின்றது. உண்மைக்காசிப ரிப்போதிவண்வந்தாலிவன்மொழியென்னுகுமோ ? என்னைச் சொல்லியாங்கவனையும் அரக்கனென்றே மொழிந்து நீக்குவனே வெனநினைந்து அரிதரிது! இராகவபிரானுரோ ! ஆராயாதொன்றும்புரியாதிர். இராக்கதருடைய வஞ்சகத்தைப்பின்னுல் நீரோ பார்ப்பீரென்று வாளாவிருந்தனன். அக்காலை மாரீசன் மாயாசீதை புலம்பும்படி தனது மாயவிஞ்சையைக் கருதுதலும், திரையினுள் மாயாசீதை அறம்புரியாத் தமியேனுக்கு இரகுநாதருடைய திருமார்பு கிடைக்குமோவென, இராமபிரானுரம்மொழியைச் செவியேற்றுப் பெண்ணிற்றிலகமே ! நினது விழியென்னும் வேலாற் புண்கொண்ட வெனதகலம் பொற்றுமரையின் மொட்டுப்போலத் திகழு நினது தனங்களாலொற்றப் படாவிடி. னப்புண்ணெவ்வா றுறுமென்று தாமே செப்பிக்கொண்டனர். காசிபருடைய வேடங்கொண்டுநின்ற மாரீசன் இராமபத்திரனுக்குச் சீதையின்மேல் விருப்புக் கடலினும் பெரிதுபெரிது! நாமெண்ணியவண்ண முடிக்கலாமென்றெண்ணி இராகவா! சீதையினதெண்ணத்தை நீ நிறைவுசெய்யவேண்டுமென, இரகுநாயகர் காசிபரோ ! கேண்மின். இவ்வனத்திற்ரேன்றுநின்ற சானகியென்னைக்குறித்து விரகதாபமடைந் தெனதுமுயக்கத்தை யாதரிக்கின்றனள். அவளுடைய சம்மதமவ்வா றிருந்தும், பரிணயமாகாமையினு லவண்மாட்டனுக வச்சமடைகின்றனனென, மாரீசனதனைக்கேட்டு, முன்போல மாயையைக் கருதுதலு மெழினி

யினுள் தோழியரிலொருத்தி கைகுவித்து, அன்னமே சொன்னமே தேனே ! மைதிலீ! கேளாய், இரகுநாயகர் நினக்கு நாயராகக் கிடைப்பரோ ? மாட்டாரோ? என் றையமுற்று வருந்தாதை. பகவான் விசுவாமித்திர மகருஷி நும்மிருவரையுங் கூட்டுவரொன்றனள். இராமபத்திர ரம்மொழியைத் திருச்செவியேற்றுவந்து ஆமாம். மன்றற் செய்தியிற் பகவான் விசுவாமித்திரர் தலைப்பட்டிருக்கின்றனரென்று நமது பிங்களன் கூறக்கேட்டிருக்கின்றேமே. இம்மாற்றம் அதனேடொத்தேயிருக்கின்றதெனத் திருவுளங்கொண்டனர்.பேதைமையும்,வியவகாரத்திற்றேர்ச்சிக் குறைவுமுள்ள வோரதிகாரி வழக்கிற்பொய்த்துளானுடைய பொய்யுரையை மெய்யெனவும், அவ்வழக்கிற் சேர்ந்த மெய்யனுடைய மெய்ம் மொழியைப் பொய்யெனவுங்கொண்டு நீதியைத் தொடராத முடிவுசெய்ய, அதனைக்கண்டு சோராநிற்கு மம்மெய்யனைப்போற் பிங்களன் இன்னற்பட்டு, ஆ! ஆ! மாயையின்றிற னன்றுயிருக்கின்றது. அம்மாய மிரகுநாதருடைய செவியுறும்படி சீதையாரைப்போலவு மவருடைய தோழிகளைப்போலவுங் கிளக்கின்றதென்றனன். மாரீசன் இராமசந்திரரோ! பிங்களனுடைய வேடம்பூண்டு நிற்கின்ற விக்கள்வனுடைய மொழியைக்கேட்டீரோவென, இராமபத்திரர் காசிபரோ! இம்மாயாவியினுடைய மொழியைச் செவியிலேற்கலாமோ? என்றனர். சேய்மையினின்ற பிங்களன் சுவாமி ! நாதரோ ! நானு மாயாவி? சிறிதுபொழுது செல்லினெல்லாம்வெளியாகுமென்றனன். பின்னர் மாரீசன் மாயையைச் சிந்தித்தலும், பொருமுகவெழினியினுட் பாங்கியரிலொருத்தி ஜானகி! எங்கள்நாயகமே ! கேட்டருடி, நின்னையிராவணன் காதலிக்கின்றனென்று கேள்வியுற்றுயோவென, மாயாசீதை கண்ணில் நீர்பெருகவிட்டு, இராவணனென்னை வேட்பது தேவர்கட்குணவாக வமைத்தஅவியைப் புன்னுமலியொன்றுநயப்பதையொக்கும். அவ்விராவணனதிரப்புணாக்கிணங்கியெனது தந்தையாருடம்படுவரேல் நெடும்புனலிலாவது, பெருந்தீயிலாவது, நஞ்சை

யயின்றுவ துயிளாநீத்த றிண்ணமென்றனள். இது இராமசந்திர ரதுசெவிவயிற்சார்தலுமிச்சீதை நம்மையேவரிக்கின்றனளென்று திருவுளத்திற்பெருமகிழ்வுற்றனர். காசிபனை யழைத்துவருகின்றேனென்று சுவாமி பக்கலுரைத்து, விடைபெற்றுச்சென்ற கராளன் மீண்டுவந்தான். செடியினிற் பதிவுகொண்டுள்ள காசிபரக்கராளனைநோக்கி யுண்மைப் பிங்களனென்றெண்ணி, ஏ பிங்களா! வேட்டமாடுதற்பொருட்டுக் காட்டுச்குத்தனியேவந்த இராமபத்திரரைப் பார்த்தாயோவெனக் கராளனெண்ணி, ஆ! ஆ! இவனுண்மைக்காசிபனோ? அல்லது அக்காசிபனுடைய வுருப்பெற்ற நமதுமாரீசனோ? என்று ஐயமுற்று மாரீசனென்று தேறிப் பரிகாசத்தால், ஓ பெரியவரே! இராகவபிரானை நான்பார்க்கவில்லை. ஆனால் நீர்சொற்றவாறவனை யவ்வனம் விட்டு, நெடுஞ்சேணிற் கொண்டுவந்து விட்டேன். இத்துணைப்போது பாணித்து நும்மைக் காணாமையினால் விசுவாமித்திரனுடைய வாணையால் இலட்சுமணனும்மைக் கோறல்புரிந்திருப்பனென் றெணாது மனமடைந்தவலக்கணை யென்னென்றுரைப்பேனென்றனன். காசிபர் ஐயோ இவனார்? பிங்களனுடைய வேடத்தைத் தரித்திருக்கின்றவோரரக்கன் நம்மைத் தன்னைச் சேர்ந்தவனாய்ப் பாவித்து மொழிகின்றனனாகலால், நமதுருவத்தை நிசிசரரி லொருவன் தரித்திருத்தல்வேண்டும். எல்லாவற்றையுமறிதுமென்று கருதி, இதுபோழ்து இராமபிரானாரெவணிருக்கின்றாருனாயெனக் கராளன் ஐய! இராகவபிரான் சீதையைப்பார்த்துக்கொண்டாங்கிருக்கின்றனனென்றனன்.காசிபர்சீதையென்று நம்பிப்பார்த்துக்கொண் டிருக்கிறாரோவென்று வினவக் கராளன்மாயாசீதையை மெய்ச்சீதையென் றவ்விராமபிரான் தேறியிருப்பினுஞ் சம்பராசுரன்முதலியோரினு மாயைவல்லவருந் தாடகையினுடைய புதல்வருமாகிய நீர் செய்த மாயை யானறிவேனென்றனன். காசிபர் பயமுற்று அந்தோ! இவன் மாரீசனோடு திரிகின்ற ஓரிராக்கதனா யிருத்தல்வேண்டும். அம்மாரீசன் நம்முருத் தரித்துக்கொண்டு புள்ளுவஞ் செய்கின்றானெ

ன்றிவன் கிளவியே கிளக்கின்றது. இக்காலை நாமென்செய்குதும். நாம் மாரீசனல்லேமென்று பிங்கள வேடமுடைய விவ்வரக்கனறிவானானல், நம்மைக்கொல்லாதுவிடான். புலியின்கையிலகப்பட்ட கலைபோலானேமென்று சோர்ந்தனர். கராளன் மாரீசரோ! நான் தாடகையென்றதா லன்னைஞாபகங்கொண்டுடிடும்பையடைகின்றீரோ? இராமனுடையவலியைக் கருதியச்சுற்றுப் பாசாங்குபோடுகின்றீரோவென்று பரிகாசமாகவினவினன். காசிபரெழுந்திருந்து கைகூப்பி இராக்கதரோ! நுமக்குப் போற்றிபோற்றி. நானே மாரீசனல்லேன். கருணைசெய்தென்னை விடுவீர் கீர்த்தியடைவீரென்றிரத்தலுங் கராளன் ஓ! ஓ! இவன்காசிபப்பிராமணன். நாமாய்ந்துணராது மாரீசனென்றெண்ணி யெல்லாமொழிகளையுஞ் சொன்னேம். மாரீச னிதுகாறும் வராமையினல், இலட்சுமணனலடியுண்டு மாய்ந்தவனேயென்றெண்ணி யரந்தையுற்று, அவ்விலக்குமணனைக் கண்ணுற்ரு லிப்போதேகொலைபுரியலாம். நமது நட்டோனகிய மாரீசனை வீட்டுதற்கு மாருக இராமனுக்குப் பிரியனன இந்த வேதியனை விண்ணேற்றுவோமென்று காசிபனைப் பிடித்துத் தலையைத் திருகமுயன்றனன். அக்காசிபரோடி இராமா! இராமா! மாரீசனுக்குத் தோழனன இவ்வரக்கனென்னைக் கொல்வான் றுரத்துகின்றனன். காவாய் காவாயென்று இரகுநாதர் பக்கலணைந்தனர். கராளனுங் காசிபனை வெருட்டிச் சென்ருன். இராமபத்திரராங்கோலமிடுகின்றவர் காசிபரோவென, அம்முனிவேடந்தரித்த மாரீசன் இரகுநாதரோ! நான் நினது பக்கலிருக்கின்றேனே. என்னைத்தவிர வேறு காசிபருண்டோவென்றனன். அக்காலைப்பிங்களவேடங்கொண்ட கராளன்உண்மைக் காசிபனைப் பின்றள்ளி முன்னேடி இராகவபிரானே! காசிபனைப்போல வேடங்கொண்ட இவ்வரக்கன் என்னைக் கொல்லப்போதுகின்றனன். காத்தருளவேண்டுமென்ருன். இராமபத்திரர் மாரீசனைநோக்கா, ஓ காசிபரோ! நமது பிங்களன் வந்துவிட்டானென, மாரீசன் கராளன் வந்துவிட்டானென்

றுள்ளுக்குளுவந்து இராமசந்திரரே! ஓரரக்க னெனதுப டிவங்கொண்டு நமது பிங்களனைத் துரத்திவருகின்றனன் பா ருமென்முன். கராளன் தள்ளினமையாற் பின்றங்கி வந்தவு ண்மைக்காசிபர் இராகவா! காசிபன் நானே அவன்மாரீசன். மாயையாலெனது வேடங்கொண்டு, மாயாசீதை யுண்டாக்கி நின்னை மயங்கச் செய்கின்முனென்றனர். பிங்களவேடங் கொண்ட கராளன் தெய்வாதீனம். மாரீசன் காசிபனுடைய வேடங்கொண்டு சௌக்கியமாயிருக்கின்முனென் றிதயத்திற் போரவுகந்து, உண்மைப் பிங்களனைப் பார்த்து இவன் யாவ ன்? எனது வேடத்தைத் தரித்து நிற்கின்முனென் றுருத்து நோக்கலுங் காசிபர் வேடங்கொண்ட மாரீசன்பிங்களவேடங் கொண்டிராநின்ற கராளனைக் கண்ணுற்று, ஏ பிங்களா! நீ சி னங்கொள்ளற்க. ஓ ரரக்கன் நின்னைப்போல மாயையாலுரு வங்கொண்டு வந்திருக்கின்முனென்று நமது இரகுநாதர் முந் தியே யுணர்ந்தனரென்றனன். அவ்வேலை பிங்களன் காசிப னைநோக்க, ஐய! மாயை மாரீசன் நுமதுருக்கொண்டு என்னுடைய வேடத்தைத் தரித்திராநின்ற கராளன்முன் யானென்றெண்ணுபு முந்தவென்கட்போந்து கராளாவென்று கூவிப் பேசிப் பின்பு நானக்கராளனல்லேனென்றுணர்ந்து மு ன்சொல்லிய மொழியை மாற்றிப் பேசினன். மாயையில் வல்ல அவ்விரண்டுபெயருஞ் சுவாமியோடு குலாவுகின்றன ரென்முன். இட்சுவாகு குலசம்பூதர் ஆச்சரியம்! எவனே வோரரக்கன் நம்பிங்களனுடைய மேனிகொண்டு காசிபனை மாரீசனெனவும், பிங்களனைக் கராளனெனவும், சீதையை மாயாசீதையெனவுங் குழறுகின்றனன். அங்ஙனமாயினுங் காசிபருமிருவர். பிங்களருமிருவராயிருக்கின்முர்கள், மேனி கழ்வதைப் பார்ப்போமென்றெண்ணியருளினர். அப்போது மாரீசனும்,கராளனும் இராமசந்திரரே! எம்மிருவனைப்போல க் கள்ளப்படிங்கொண்டிராநின்ற இவ்விராக்கத ரிருவனையு நீரின்னேகொல்லவேண்டும். கொல்லாவிடின்மேலென்செய் வோ வென்றஞ்சுகின்ேமெனத் தாசரதியார் மாரீசனைப்

பாராக் காசிபரோ! நன்றுநன்று, இன்னேசொல்கின்றேனென க் கார்முகத்தை வணக்கி நாணேற்றிக் காசிபனையும், பிங்கள னையும் நோக்கி, அரக்கர்களே! என்னிடத்தேயே மாயஞ் செய்யாநின்ற நும்மிருவரையுங்கோறல்புரியாதுவிடேன். நீயி ரிருவிரும் யாவர்? எவணின்றுபோந்தீர்கள். யாதியற்றக் கா சிபனைப்போலவும்,பிங்களனைப்போலவும் படிவந் தரித்தீர்கள்? யான் பாணத்தை நுங்கண்மீதேவுமுன் உண்மையைமொழிமி னென்றனர். காசிபரும் பிங்களனும் வெருவி, இரகுராமா! பே ரருளாளா! பத்தவற்சலா! எங்களாராவமுதே! வினையாதி,மாரீ சனுடைய மாயை நன்குணராமே விபரீதம் விளைக்காதி, யா தையுமெண்ணித் துணிந்து செய்வதே கருமம். யாங்கள் நின் னபயமபயமென்றனர். இராமபத்திரர் அவ்விருவரு மரக் கரென்றெண்ணி, நாங்கொல்லத்தொடங்கினு மவர்பால் எமது ள்ளமிரங்குகின்றது.இவ்விருவரையு நமது நண்பரொன்று நாங் கொள்ளவு மனமிவரோடு பொருந்தவில்லை. காரணமென் னேவென்றிருந்தனர். மாரீசன் கராளனை நோக்கி ஏ பிங்க ளா! இராமபிரா னிவ்வரக்கரை யேனின்னங்கொலைபுரியா திருக்கின்றனரொன்றுரைத்து நடலை விஞ்சையைக் கண்ணி னன். உடனே விழிதோன்ற வழிவிட்டு முடிமுதலடிகாறு மூடிய வுத்தரியத்தளாகி, அலரியுமறியாத அந்தப்புர வா சிபோல வேடங்கொண் டோர்மடந்தை கண்கள் நீரைச்சொ ரிய, வாய் அந்தோ! அச்சோ! என்றரற்ற, கூந்தலவிழ்ந் துசோர, கைகளால் வயிறலைத்து மார்பிலெற்ற, கால்கள் தள் ளாட மாயா சிதைபால் விரைந்துவந்து ஜானகி! நங்கள் வாழ்வின்றோடு முடிந்தது. கெட்டோங் கெட்டோமென்ற னள்.பல்லவச் சேக்கையிலிருந்த மாயாசீதை யெழுந்திருந்து உற்றபெற்றியென்னையோ?சொல்லடீசொல்லடீயென்னலுந் து ன்பமிகுதியால் வாய்குழறி வார்த்தை சொல்லவுமொண்ணாத வள்போல விம்மி விம்மிப் பெருமூச்செறிந் தம்மா சீதை! எ ன்சொல்கேன். நின்னை மணம்புரிவான் வேட்கைபுரிந்திரு ந்த தசக்கிரீவன் நமதனையரால் நின்னைக் கொடுக்கிறதி

ல்லையென்று மறுக்கப்பட்டானென்று சொல்லி, மேல் யாதொன்றும் விளம்பாமற் பூமியில் வீழ்ந்து புரண்டு கண்ணீரால் நிலத்தை மெழுகி யேங்கினள். மாயாசீதையு மாயைத்தோழியருங்கலுழ்ந்துகொண்டு அம்மாயமாதைச்சூழ்ந்து நமக்கு நேர்ந்த வின்னலென்னடீ பன்னடீயென மாயமங்கையெழுந்தம்மா! மைதிலீ! அரக்கனுக்கு நாம் பெண்கொடுக்கிறதில்லையென்று நமது ஜனகமகாராஜர் சொல்லலும் இராவணன் சினந்து எனக்குப் பெண்கொடுக்கிறதில்லையென்ற நின்னை யின்னே கொலைபுரிகின்றேனென் றரிமாவெனப் பாய்ந்து ஜனகர் தலையைக் கிள்ளியெறிந்தான். நின்னையுந் தூக்கிக்கொண்டிலங்கை சேருகின்றேனென்று போதுகின்றானென்றேங்கினள். மாயாசீதை யதனைக்கேட்டு முகத்திலும், மார்பிலும், வயிற்றிலுங் கைளானெற்றி ஓ! என்றலைவிதியே! தந்தையைப் பிரித்ததுமன்றி யென்னையுமரக்கன்வயஞ் செய்வாயோ? என்செய்கேன். நீரில் வீழ்வேனோ? எரியினுட் பண்விழுவேனோ? என்று பலபடப்புலம்பிப் புறத்தோடினள். இட்சுவாகு குலசம்பூதர் பார்த்து, எ சீதை வருந்தாதை; கால்நோவ வோடாதை; முகம்வாட ஏங்காதை; இராக்கதருடைய வுயிர்ப்பலியுண்ணு மைந்தலைக் கட்செவிகளெனது வெந்நிடைத்தூங்காநின்ற ஆவமென்னும் புற்றிலுறைகின்றன: அவைகளிலொன்றை யேவுவேனேல் மூன்றுலகத்தையு மழிவுகாணும். ஜனகப்பெருங்காவலனைமுருக்கிய இராவணனை நான்கொன்று நரிக்கும் பாரிடங்களுக்கு மிரையாக்குகின்றேனென் றருளிச்செய்தனர். உண்மைக்காசிபரதனைக்கேட்டு, எ இராமபிரானே! பிரபத்திநிட்டரான ஜனகரிராவணனால் விளிந்தனரென நினைப்பது புலமையின்பாலதன்றென்றனர். கராளன் மாரீசா! இக்காசிபவந்தணனை யெவ்வாற்றினும் விரைவிற் காதுதல்புரிய வேண்டுமெனக் காதிலோத, மாரீசன் கராளா! அதுநிற்க. இவ்விராமனுடைய ஆக்கத்தைப் பார்த்தாயோ? அமரினேர்ந்துவந்த ஐராவதத்தைத் தூம்புடைக்கையைப் பற்றிக் கவணெனச் சுழற்றி யெற்

றிய தசக்கிரீவனைக் கொலைபுரிந்து விடுகின்றேனென்று கிளத்துகின்றனன். இவனைச் சவட்டயாராலாகும்? இராவணனுடையமாற்றத்தைக் கேட்டு நாங்கெட்டோம். இனிநா முய்வதரிதென்று மெல்லவோதினன். பிங்களன் காதுகொடுத்தம்மொழியைக் கேட்டு, இனி நுங்களுக்குட்யு நெறியுமுளதோ! நல்லது நல்லதென்றுலம்பினன். மாரீசன் இராகவா! அவ்வரக்கரிருவரையும் துணைந்து கொன்றருளுவாயென வுண்மைக்காசிபர் ஐயோ! இராமபிரான் நன்குசூழாதம்பென்னு நமனை நம்மிடத்தேவி னென்செய்குது மென்றுலைந்து, இராமசந்திரா! தண்ணருட்கடலே! நற்குணவைப்பே! தீங்குபுரியாதி. நான் காசிபப் பிராமணனென்றனர். ஜனகரிறந்தனரென்று வந்துமொழிந்த மாயமகளுடைய வஞ்ச மாற்றத்தைக் கேட்டுச்சதறிக்கொண்டு புறம்போந்த மாயாசீதை மாரீசனுலிந்தன்கணைக் கூட்டித் தீமூட்டிக் கல்லாற்பொதிந்து வைக்கப்பட்டுள்ள பேரெரியைக் கண்ணுற்று, இருளையீர்! எனது தந்தையிறந்தமையானும், ரகுநாதனைப் பதியாயடையாமையானு நான் கொண்டிராநின்ற வல்லலை, இவ்வங்கியில் நான் வீழ்ந்து சுடேனெனினவ்விரண்டுமென்னைச் சுடாதுநீங்காவென வீழ்ந்தனள். காசிபரும், பிங்களனும் ஓ! ஓ! மாரீசனுடைய மாயையெவ்வளவாக வியப்புச்செய்கின்றதென்றுன்னி, இராகவா! இப்போது நடக்கின்றவைகளெல்லாம், மாரீசனுடைய மாயமன்றி வேறில்லை. அதை நீ பின்னரறிதி. செய்வதையாய்ந்து தேறிப் புரிவாயென்றனர். அகாரவாச்சியராய இராமபத்திரர் சீதை யக்கினிப்பிரவேசஞ் செய்தகாலை நானுய்ந்துசெய்கின்றதென்னிருக்கின்றது? தனதுயிரை நீக்குங்காலத்திலு மறவாது அச்சீதை யென்னை நினைந்தது என்னெஞ்சைப்போழ்கின்றதேயென்றனர். கராளன் இராகவபிரானே! வேசிமகனை அவ்வரக்கன் மாரீசன் மாயையென் றடுத்தடுத்துக் குழறுகின்றானென்றனன். அவ்வேலை மாரீசன் மாயையைக் கருதலும்பேரங்கியை யண்மி நின்றமாயாசீதையைச் சூழ்ந்திருந்த இருளையர் ஏ ஜானகியே! நீ யுரைத்தவாறு செந்தீயில்வீழ்ந்தனை

யே நங்களை யஃதையர்களாய்விட்டுப் பிரிந்தனையே! அந்தோ! அச்சோ! இராமனைக் கூடாதொழிந்தனையே! ஆங்கு நினது தந்தையைக் கண்டனையோ! யாங்களுன்னைவிட்டிங்குத்தரியோம். வந்தோம் வந்தோமென் றனலில் வீழ்ந்தனர்கள். அக்காலையிராமசந்திரர் ஐயோ! சீதை உயிர் நீத்தமையினால், நமது மனோரதமென்னும் பெருமரனொசிந்து வீழ்ந்தது. எழில்களெல்லாம் தம்மெழிலை யொருங்கிழந்தன. புவியினுக்கணியழிந்தது. கண்கள் விழாத் தவிர்ந்தன. சகத்தை வெற்றிகொள்ளுமதன் மதனொடுங்கினனெனப் புலம்பி மறுக்கமுற்றனர். மாரீசனிவ்வேலை யிராமனுக்குப் பையுள் வளருமாறு புரியவேண்டியதே கருமமென்றுள்ளத்தினுட்கருதுற்று, இராகவபிரானைத் தழீஇக்கொடு ஐயோ! இராகவா! நின்காதலிபோய்விட்டாளே, ஜனககுலஞ்செய்த தவப்பயனால், யாகபூமியிற்றோன்றினவளே! இரதியினுஞ் சிறந்த எழின்மிக்காளே! ஈரேழுலகினு மிணையில்லாளே! எனது பிரியனாகிய இராமனிடத்ததிபிரீதியுடையாளே! பிரமனினது தலையிலிவ்வாறு பொறித்தானோ? உளத்தடங்காட்டேரன்புடைய நீ இறந்தனையென்று கேட்டும், நின்னைத்தொடராது நாங்கள் பனைபோலவாளா நிற்கின்றோமென்றேங்கிச் சோர்ந்தவனைப்போலப் பாவனை செய்தான். அவ்வேலை யிராமசந்திரர் நம்மிடத் தன்புற்ற சிதை துஞ்சினளென்று நமது நண்பராகிய காசிபரெஞ்ஞான்று மாறுவின்னலுறுகின்றனர். அன்னோ! நானின்னேயிறவேனெனி னிவ்விடும்பையை யெவ்வாறு தணப்பேன். வெற்பின்மீதிவர்ந்து குப்புற வீழ்வேனோ? ஆழ்நரலையி லிறங்குவேனோ? வாள்கொண்டெனது களத்தைத் துணிசெய்வேனோ? நஞ்சைப் பருகுவேனோ? தீவினையேன் யாது செய்வேனென்று புலம்பினர். 'கராளன் இராமா! நீ செய்யவேண்டிய தென்னென்று தாடகையையேனும், சுவாகுவையேனும் வினவுதியே லன்னவர்தக்கதுரைப்பரென்றுள்ளத்தினுட் சொல்லிக்கொண்டு மாரீசனைநோக்கா, ஏ காசிபரோ! சிதையிறந்தவின்னலால்இராமபத்திரன்ஏங்குகின்றனன்.

நாம் யாது செயற்பாற்றென, மாரீசன் கராளனை நோக்கி, ஏ பிங்களா! இரகுநாதன் செய்வதையே யாமுஞ் செய்வோமென்றனன். அவ்வேலை அலக்கணுழந்த இராகவபிரானார் அதைச் செவி சார்த்தியருளிச் சீதை வீழ்ந்ததழலிலேயே நானும் வீழ்கின்றேனென, மாரீசன் யான்புரிந்த இத்தனை முயற்சியு மதற்குத்தானேயென்று மனத்தினுளுவந்து, இரகுநாதா! சீதை நின்வயிற்கொண்டிருந்த பரிவுக்குயிரை நீப்பதுஞ் சாலாதாயினு மதனினூங்கியற்றத் தகுந்ததென்னிருக்கின்றது? நாமாவியைப் போக்காதிருப்போமாயி னிவ்விசார நம்மைவிட்டொழியாதென்றனன். பிங்களனும், காசிபரும் ஆச்சரிய மாச்சரியம், இவ்விராக்சதப் பைதல்களுடைய மாயை யெல்லையிகந்ததாயிருக்கின்றதே. நாமிருவேமும் நிசிசரரல்லேமென்றிரகுநாதர் நம்பும்படி செய்தாலன்றியுய்யு நெறி வேறிலது. இக்கொடியார்களோ ஐயனையுங் கோறல்புரிய முயல்கின்றனர். இவ்வமயத் தியாமென்செய்குது மென்றிருந்தனர். இராமபத்திர ரெனதுயிருக்குயிரான சீதையிறந்தபின்பு நாமெண்ணுவதியாதோ? கணவனிறத்தலு முடன்கட்டையேறுமே நிலத்தில் வீழ்ந்தழும் பேதையைப்போல நாமுமேங்குவது புலமைத்தோ? என முன்னு, முன்னியவாறு தீப்பிழம்பில் வீழ்ந்து துஞ்சுதுமெனத் தணலை மூடியிருந்த கல்லின்மேற் சரணகமலம் வைத்தருளினர். காசிபரும், பிங்களனும் அந்தோ! இராகவபிரானார் மாரீசனால் வஞ்சிக்கப்பட்டுத் தீப்பாயவுளுற்றுகின்றனரோ. இதைப் பகவான் விசுவாமித்திரறிவரோ லிவ்வாவத்தைத் தவிர்ப்பர். நாஞ்செயற்பாற்றென்னென் றேங்கினர்! மாரீசன் கராளா! எனதன்னையைக் கொன்ற க்ஷத்திரியப் பையனைக் கொன்றேன் கொன்றேனெனக் கராளன் புருவத்தை நெரித்து, இக்கூற்றுக் கூறுஞ் சமயமிஃதன்றென்று தலையைத் துளக்கி யுணர்த்தினான். அச்செவ்வியிற் காசிபர் ஏ இராமா! நினது காசிபர் கழறிய மாற்றஞ் செவியி னுழைதலில்லையா? அவனரக்கனென்பதை யினியேனு முணரவில்லையா? எனலும், நம்

மாருடை இரகுநாயகனையமுற்றுச் சிலையின்மேல் வைத்த பொன்னடியை யெடுத்து மீண்டருளினர். மாரீசன் கராளா! இராமன் மாய்கின்றானென்னுங் களிப்பு மிகுதியாலெனது தியபகுவாய் குழறிவழிந்தது. இராகவன் பாணிச்காமனம் மை முருக்கியேவிடுவான். இனி யென்செய்குதுமெனச் செவியிலோதக் கராளன் மாரீசா! இனி நொடிப்போதுமிவட்டரியாது கலையுருக்கொடு கடுகிப்பாறுதும். அங்ஙனமேயாயினுமாகுக. இன்னமுஞ் சற்றுப்பார்ப்போமென்றனன். தாசரதியா ரப்பாழ்ஞ்சிலையின்மேல் வைத்த சீர்பாதத்தினுடைய தூளியின்பரிசத்தால் அப்பெருங்கல் மறநீத்தூர்த்துவ சுவர்ணரேகைபெற்ற தண்ணங்கதிர்ப்பிறைபோலத் திருமட்குறியணிந்தமுகமும், திருச்சங்காழிக் குறிபொலியும் வேயுறழ்தோளும், துளவமணிவடமும், தாமரைக்கண்மணிக்கோவையும், அவைபொன்றனேடொன்று பின்னிப்புரளுந்தனமும், நுண்ணுசுப்பிற்புனைந்த மரவுரியும் பொலியப்பொலிவுடையவோர்மங்கையாய்த் தோன்றி, அந்நங்கை இராமபிரானுனே! ஜய ஜய இராமசந்திரனே! பல்லாண்டு பல்லாண்டு பல்லாண்டு, மங்களம் மங்களம் மங்களம் இரகுநாதனே! என்றனர். தொல்லைமூலப் பரஞ்சுடராகிய நந்தாசரதியார் இறந்தாரென்று களிகொண்டு கராளனை நோக்கி மாரீசன் சொன்ன வார்த்தையைக் காசிபரெடுத்துரைப்ப, அதனைக் கேட்டனலில் வீழாதுமீண்ட சுவாமி மீண்டியா ரிவள்? நமதன்னை கோசலைபோல விளிக்கின்றாளெனத் திருவுளங்கொண்டு நின்றருளினர். அம்மங்கையர்க்கரசி நெருங்கிவந்து, எனது பிரியளான கோசலைமதலாய்! எனது பெயர் அகலிகை. யான் சதானந்தனுடைய வன்னை. அவனுடைய பிதாவாற் சபிக்கப்பட்டெண்ணிறந்தகால மிக்கல்லாய்க் கிடந்தேன். நினதுபாததூளி கதுவியதனுற்புன்மை நீங்கி மேன்மைபெற்றேனென, இராமசந்திரர், பகவான் கௌதமமாமுனிவருடைய பன்னியிந்திரனைப் புணர்ந்தமையாற் சாபம்பெற்றுக் கல்லாய்க் கிடக்கின்றனளென்று கேள்வியுற்றோமே. அவ்வாயே யிவளென்றெண்ணி, அன்

ணய்! இராமன் போற்றிசெய்கின்றேனென்றனர். அகலிகை குழந்தாய்! இராமசந்திரா! நெடிதூழி வாழி. ஜானகி பிராட்டியை மணம்புரிவா யென்றனள். அவ்வேலை காசிபரும், பிங்களனும் விரைந்துவந்து சதானந்தருடைய அன்னையே! எங்களம்மையே! நமக்காரஞ் செய்கின்றோமெனக் கோதமன் காதலிகுழந்தைகாள்! எண்ணியவெண்ணியாங் கெய்துவீர்களென் றாசிகூறினள். இராமபத்திரர் அகலிகையை நோக்கித்தாயீர் இவ்விருவரையு மறிவீரோவென்ன, அவ்வகலிகை முன்னிகழ்ந்தவற்றை யெல்லாம் ஞான நோக்காலுணர்ந்து இராமபத்திரா! காசிபரும் பிங்களனுமிவ்விருவருமே. ஆங்கு நிற்கின்றவர்கள் மாரீசனுங்கராளனுமே. அவ்வரக்கர் நின்னைக் கொல்வான் இவ்விருவருடைய படிவங்கொண்டு மாயையாற் சிதையைப்படைத்துப் பலவித வினையஞ்சூழ்ந்தன ரென்றனள், மாரீசனுங்கராளனு மதனைக்கேட்டந்தோ! நாம் சூழ்ந்த சூழ்ச்சிக்கு முற்றுமுரணா யிவ்வேசி வந்தாளென நெஞ்சினுள்வைது, இனி யிவணிருப்போமேற் புவியிலிரோமெனவெருக்கொண்டு,முன்னே தாங் கருதியவாறு நவ்வியுருக்கொடு யாவர்கண்ணுங்கதுவலாகாவண்ணங் கடுகியோடினர்! அகலிகை இராமபிரானே! நோக்காய். அவ்வரக்கருழையுருக்கொடோடுகின்றனரென, இராகவபிரா னம்மானுருவத்தோரிருவரையுந் தொடர்ந்து ஓதுட்டர்களே! எங்கேகுகின்றீர்! நிற்பீர் நிற்பீரென் றுரப்பிக் கார்முகம் வாங்கி நாண் மாட்டிக் கோல் பூட்டிச்செவியளவு மிழுத்துவிட்டருளினர். அவ்வம்பாற் கராளனரற்றி விழுந்திறந்தான். மாரீசன் மாயையாற் கண்ணுக்குத் தோன்றாது கரந்து சென்றான். பின்னர்க்காசிபர் அகலிகையை நோக்காப் பகவத்கடாட்சம்; பண்டை யுருவுற்றென்னை, யோம்பவுற்றாயென்று துதித்தலும், அகலிகை காசிபா! இராமபாணத்தாற் கராள னேவுண்டுமாணுருத் தவிர்ந்துகாட்டுத் தீயாலெரிந்த நெடும்பனைமரம் போன்றுவிழுந்து கிடக்கின்றான்! மாரீசன் கரந்தோடிப்போயினான். இராமபிரான் மீண்டெழுந்தருளுவதைப் பாரா யென்னு

ங்காலே, காரொழிலி செம்முண்டகக் காடுபூத்து, அவற்றிலோர்மலர் நெடிய மூன்றாம்பிறையைத் தாங்கியதுபோலச் செங்கையிற் சிலையேந்தி,தாசரதியார்வந் தகலிகையைப் பணிந்தன்னையீர்! நுமதருளால் யானுய்ந்தனென். காசிபனையும், பிங்களனையு நன்குணர்ந்தனென், அயலானைக் கோறல்புரிந்தனெனென்றனர். கோதம முனிவருடைய இல்லாள் குழந்தாய்! இராமா! நின்பூவார்கழற்றுகளாற் பாவநீங்கிப் புனிதையானேன், நீ நீடூழிவாழ்க. நான் முற்றத்துறந்தமுனிவர்பாற் செல்கின்றேன்; விடைதந்தருள்வாயெனத் தாசரதியார் அங்ஙனமே போதுவீரன்னையீரென்று பொன்னடிவணங்க, அவ்வகலிகை சென்றனள். இராகவபிரானார் காசிபனையும், பிங்களனையு நோக்கியருளி நும்மிருவிரையு நோக்க நாணமுறுகின்றேனென் றருளிச்செய்ய, அவ்விருவரும் இராமபிரானுரே! தாயையுந் தம்பியையு நீர் சவட்டினமையினாற் சினங்கொண்டு மாரீசன் புணர்த்த மாயையின் வயமாயினீர். நீர் யாது செய்வீரென்றனர். இரகுநாதர் ஆமாம். மாயையின் திறமின்றுதா னெனக்குத் தெரியவந்தது. என்வயின் தீராக்கேண்மையுள்ள நீவிர் இங்ஙன நடந்தவற்றை யாருக்கு முணர்த்தலொண்ணாது. நானே சாலவுட்கடைகின்றேனென் றுரைத்தருளி,வேட்டையை வேட்டுவந்த நான் மாயையின் வயத்தனாய்க் காலநீட்டித்து விட்டேன். என்னைக் காணாது தந்தையார் தடுமாற்றங்கொள்வர், நாமின்னே செல்வோமென்று நடந்தருளி, ஓ! இப்போது நடுவுச்சியிற் றோன்றும் பரிதி யெத்திக்கிற் செல்வோமென ஆராய்கின்றவன் போலத் தோன்றுகின்றான். குயிற்பேடைகள் தமது களிச்சேவல்களினுடைய தீங்குரலைக் கேட்டுண்ணீர்நசையொழிந்திருக்கின்றன. முனிவர்களுடைய வேள்வித்தலை மீதோங்கி யெழும்புகைப் படலத்தைக் கண்ணுற்று, கார்முகிலென வெண்ணி யாடுமயில்களின தழகை நோக்கிப் புல்வாய்கள் புல்கறியாதிருக்கின்றனவென் றோதிக்கொண்டே வழிநடச்கும் வருத்தமின்றி மூவரும் போயினார்கள்.

மூன்றாமங்கம்—முற்றிற்று,

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

மாயிருவிசும்பு காக்குமன்னன்பணிப்பச் சித்திராங்கதனென்ற வோர் கந்தருவன்போந்தான்; போந்து, திசைக்காவலர் முதலெல்லாப் பண்ணவர்களும் வணக்கஞ் செய்யுங்காலே, அன்னோர்களுடைய மணியணி முடியழுந்தி மிகச் சேத்தலாற் செம்முளரிமலரைத் தவிர்த்துத் துப்போடுறவாடுகின்ற கழல்களையுடைய கடவுளர்வேந்தன் உலகமீரேழினுந்தனது செங்கோல் நடாத்தி வீற்றிருப்பக், காலன் தாடகையினதுயிரைக் கவர்வான் வலியீட்டிக்கொண்டு பாசத்தோடெதிருற்றுற் குழந்தாய்! வாராய் வாழ்நாணெடிதெய்துவாயென ஆசிகூறி நமனே! நினக்கு முந்தியிருந்த பல கூற்றுவர்களும் வந்தென்னைக் கண்ணுற்றுப் போதல் பண்டைய வழக்கம். நீ இளஞ்சேயாயினு மம்மரபுவழாதுணர்ந்து வந்தனை. நின்வரவு நல்வரவாகுக. நினதுபுரி சென்றினிது வாழ்தி. என்னையஞ்சாதியென்று விடைகொடுத் தனுப்புகின்ற திறலுடைய வத்தாடகையு மவளுடைய புதல்வர் சுபாகுவுங்கராளனுமிறந்தன ரென்றோதி ஆ! ஆ! என்று சிரித்து மீண்டுஞ் சோறலுற்றுன். ஊழிதிரியுங்காலையுலகை முடித்து நின்றுடலியற்றுநின்ற மதிமிலேசடையோன் முதலியோரைப் பரமான்மாவாகிய தமதகட்டிஞோர்புடையிற் கரந்துவைத்து விரிபுனலிலறிதுயின்மேவும் பரமராகிய தாசரதியார் கோறல்செய்து தமதம்பென்னு மணுக்கன் வயப்படுத்தி யென்முன்னனுப்பினர். நானப்பாவகாரியர் மூவரையுந் தீவாய் நரகினுட்சிறைப்படுத்துச் சேமித்திருக்கின்றேனென்பதைத் தங்கள் சித்தமுணரவெழுதிக்கொண்டேனென்று தென்புலக்கிழவன் விடுத்த வோலையைப் படிப்பவவ்விண்முழுதாளி கேட்டென்று முருதவவப்புற்றன்னோனைக்கூய், சித்திராங்கதா! காலனுக்குக்காலனாகிய இராவணனைச் சேர்ந்த சில்லோரை இரகுபுங்கவர்கொன்றருளினரென்பதைக் கருமேதியூர்தி வரைந்து விடுத்தவோலையாற் றெரிகின்றோம். நீ யின்னே யிலங்கையுற்றுத் தாடகைமுதலியோர்களிறத்தலைக்குறித்துத் தயக்கிரீவன் என்செய்கின்றனன்? புரியவேண்டிய நற்சன்மங்களைப் புரியாது ஐ

ம்புலன் சென்ற வழியில் நெஞ்சைச் செலவிட்டிறவாயில் நமனுற்றபோதின்ன லுழக்குமுதிர்ந்தவனைப்போ லோலமிடுகின்றனே? கற்றோர்கூடிய வவைக்களத்துமேம்பாடுறுகின்ற கற்றுணர்ந்தவனைக் கண்டச்சோ நாம்! இருமறையோடு முரணூநூலை நோக்காது வாழ்நாளை வீழ்நாளாக்கினேமே. இப்பிறவியைச் சுடவேண்டுமென்று துயருறு முழுமகனைப் போலப் பொருமுகின்றனே? கல்விபயிலானிடத்து மெய்ம்மொழிப் பாசுரப்பொருள் விரித்துரைத் தவனுணராமை கண்டுவாடுஞ் சீரியோனைப்போல வாடுகின்றனே? அறிந்து வருதியென, அவனும் இலங்கை செல்லுகின்றேனென் றுரைத்து நிருதனுருக்கொடு, முன்னே கண்டாங்குவாரா நின்றவள் யாவள்? அன்னுளுடைய ஒரு கொங்கையுணிபோலவும், மற்றொன்று பொருப்புப்போலவும், ஒருசெவி யெலிக்காதுபோலவும், மற்றொன்றியானையினதுபோலவு மிருக்கின்றன. முகமொட்டையினது போலிருக்கின்றமையாலோரரக்கியெனத் துணிகின்றேனென நின்றான். அவ்வரக்கி விரைவாய் வந்து சித்திராங்கதனைநோக்கி நீ யாவன்? கராளனோ? அல்லாவிடின் இராக்கதரிலெவனெனக் கடாவச் சித்திராங்கதன் இவளுக்கென்ன மறுமாற்றம் புகலலாமெனச் சூழ்ந்து ஓ! ஓ! இவளே யொருபெயர் பகர்ந்திருக்கின்றனளே. அவ்வாறே புகல்வாமெனக்கொண்டு அரக்கி! நான் கராளன்தானென்றனன். அவள் கந்தருவனை நோக்கா அரக்க! நீ உள்ளக்கிளர்ச்சியுடையானுய்க் காண்கின்றாய். நினது மனைவி கிருத்திரமுகியோ? இராமன் கொடுங்கணையினால் நீ யுயிர்நீத்தாயென்று வயிறலைத்துக் கலுழுமரக்கியர் நாப்பட் கூந்தலையவிழ்த்துப் புரளவிட்டு நின்னைக்கூய்க்கூய்ப் புலம்புகின்றனளெனச் சித்திராங்கதன், இறந்த கராளனுடைய வில்லாள்கதற வேண்டிய துசிதந்தானேயென நெஞ்சினுளெண்ணுற்று, அரக்கர் குலமாதே! உயிருடையானு யானிருப்பதுஞ் சினேனென்று கிருத்திரமுகிக்குச் சொல்லியவன் யாவனெனக்கடாவினன். அரக்கி கந்தருவனை நோக்கிக் கராளா! கேள்

மாரீசன் இலங்கைவந்து பிரகத்தன் முதலாய வமைச்சர்களை க் கண்ணுற்று நின்னோடு தனது தாயுந் தம்பியுமிராமன் வெ ங்கணையினா லுயிர்நீத்தனர்களென்று மொழிந்து, இன்னலால் மாதவம் புரியக் கோகர்ணக்ஷேத்திரத்துக்குப் போகின்றே னென்று போயினனெனச் சித்திராங்கதனதனைக்கேட்டு, அ ங்ஙனமாயின், மாரீசன் இராவணனைக்கண்டிலனோ?எனவினா வினன். அரக்கி, கராளா! தசக்கிரீவன் இலங்கையிலிலனாகலா ன். மண்டோதரியுள்ளம் புழுங்கி யென்னை விளித்து வித்யுஜி ஹ்வனுடைய மனைக்கணேகி யெனது கணவ ரெங்குள்ளா ரெ ன்றுணர்ந்து வருதியென்றேவினள். நானவ்வித்யுஜிஹ்வனு டைய இல்லமேயினேன். ஆங்கணவனில்லை. அவனதில்லாளா கிய மாயாவதி யோர்செய்திமொழிந்தனளெனக் கந்தருவன ஃதென்னையோவென்றனன். அரக்கி ஓ! கராளா! நனிம றைபொருளாயவதைப்புகலவஞ்சாநின்றேன். இங்குள்ளவவை க் களத்தாரிற் சனகரைச் சார்ந்தவர்யாவரோனுமுளரானுற்சொ ல்லுமின் சொல்லுமினென மொழிந்துதானே நகைபுரிந்து கொண்டு, கராளா! கேட்டி. சீதையை மணம்புரிவான் இராமனது திப்பியத்திருவுரு விராவணனும், விசுவாமித்திர னுடையவுரு வித்யுஜிஹ்வனும், இலக்குமணனுடைய வடிவு சாரணனும் பூண்டுகொண்டு ஜனகர்பாற்சென்றிருக்கின்றன ரென்று சாற்றினளெனக் கந்தருவன், ஜானகி இராகவனு டைய வடிவழகி லீடுபட்டுச் சாலவும் வேணவாவுற்றிருக்கின்ற னளென நன்கு தெரிந்திருப்ப, தலைபத்துளான் அச்சீதையை விரும்புவானேன்? இராவணனுக்கு மணநிறைவுபெறினும் பெறும். அவனே உயிர்மாயினுமாய்வனென்றனன். அரக் கி சித்திராங்கதனைநோக்கா, நீ கராளனா? அல்லனா? உண் மையைச்சொல்கசொல்கவென்று விரைந்து வினவக் கந்தரு ன் அரக்கி! நீயிவ்வளவாவலோடு கேட்பக் காரணம் யாது! நான் கராளனாயினும், வேறெவனாயினுமாக. நினக்கென்னெ ன்றனன். இராக்கதப்பெண் அதனைக்கேட்டு நீ கராளனே யாயின் நான் முந்திச்சென்று நீ சாகாதிருத்தலைக் கிருத்திரமு

கிக்குறைத்தாடையணிகளைப் பரிசில் பெறுவேனெனக் கழறினள். சித்திராங்கதன் பெண்ணே! அரக்கீ! காரணமின்றியே வரம்பிகந்த வவாவுமகிழ்வு நினக்கேனுண்டாயின. கராளனுயிரோடிருப்பினன்றோ நீ கிருத்திரமுகியினிடத்து நன்கொடைபெறலியலும், அக்காரளன தியாக்கையைப் பாகுபாடுசெய்துகொள்வதில் நரிகளுக்குங் கழுகுகளுக்கு முளதாய பூசல் வான்முகடண்மியதெனக் கேள்வியுற்றேனென்றனன். அரக்கியதனைக்கேளாக் கராளன் துஞ்சினனாயின் நீயாவன்? சொல்லென்று மோவாயைப் பற்றியிரந்தனள். சித்திராங்கதன் நான் விபீடணரென்ற வுத்தமனாச்சார்ந்த வோரரக்கனென, அரக்கி நன்று, இராவணனுடைய செயலை மண்டோதரிக்குச் சொல்வான் செல்கின்றேனென்றகன்றனள். சித்திராங்கதன் அவ்விராவணன் செய்கையை யானுஞ் சனகருக்குரைக்கின்றேனென்று நடந்தனன்.

பின்னர்ப் பிரபன்னராகிய ஜனகப்பெருமானு மவருடைய புரோகிதராகிய சதானந்தரும் வந்தனர்கள். ஜனகர் பகவான்சதாநந்தரோ! நமது குழந்தை சீதையாகிய மங்கையர்க்கரசியை இராவணன் நம்மை நேரோகேட்குமுன் இராமனுக்குக் கொடுத்துவிடவேண்டும். நம்மாற் பிரார்த்திக்கப்பட்டடம்பட்டிருக்கிற பகவான் விசுவாமித்திரமகருஷி சீதையை ஆடவர் பெண்மையை யவாவுந் தோளனாகிய இராமனுக்குத் திருமன்றல் செய்விப்பரோ? மாட்டாரோ? என்றவல்ல லென்னெஞ்சிற் கிடந்து வருத்துகின்றதெனக்கௌதமர் காதலர் அதைத் தம் செவியாரக்கேட்டு மிதிலாதிபரே! மாதவமென்னும் பேரங்கியினாற் றமதரசப்பிறப்பென்னு மாடகத்தை யுருக்கித் தலைமையொளியென்னும் பிரமவொளியைப்பெற்றவரும், வேறுலகம் படைப்ப முயன்றவருமாகிய பகவான் விசுவாமித்திர மாமுனிவருக் கிக்கலியாண முடிப்பதொரு பொருளாமோ? அவர் சீதாபிராட்டியின் திருமணத்தை நிரப்பின், பின் நமக்குத் தயக்கிரீவனால் தீராவிடும்பை நேருமோவெனக் கவலவேண்டா. அக்காதிகாதலரருளிய

பலப்பலவத்திரசத்திரங்களையுடைய இராமகோளரி யிராவண
னென்னுங் களிற்றினைக் கோறல் புரிந்தருளுமென்றனர். அ
வ்வேலை யினியென்செயற்பாற்றென்றகன்றிருந்த இராவண
னை வித்யுஜிஹ்வன் கண்ணுற்றரசரோ! நீர் இராமவேடத்தை
ப்பூணவேவேண்டும். நான் விசுவாமித்திரனைப்போலவும், சா
ரணன் இலட்சுமணனைப்போலவும் வடிவுகொள்கின்றோமென
த்தாமிருவருங் கொண்டனர். தசக்கிரீவன் வித்யுஜிஹ்வா!
சீதையின்பொருட்டு நமக்குச் சிற்றுணவாகிய மானிடக்கோ
லந்தரிக்கும்படி காலநேர்ந்திருக்கின்றதேயென்று வருந்தி, நம்
அரும்பெறலடிகளாகிய சருவ சுவாமியைப்போல வுருவங்
கொண்டான். வித்யுஜிஹ்வன் பரமாத்துமனுடைய வுருக்கொ
ண்ட துராத்துமனை நோக்கி, ஐயரோ! மக்கட்பிறப்புப்
பெண்ணுடுவாழக்காமுறுகின்றநீர் மாக்களுருச் சிறிதுபொ
ழுது பூணினேதம்யாது? அதைக்குறித்தடுத்தடுத்துவருந்
தல் வேண்டா. சித்திரத்திலலர்ந்த செந்தாமரையைப்பழிக்கு
ந்திருத்தாள்களும், மேருகிரிசெம்பொனு யிருக்கின்றமையி
னஃதொப்பாகாத் திருத்தோள்களும், வில்லையு மம்பையும்
பற்றியதிசையானைகளின் கரங்களை மானுந் திருக்கரங்களும்,
அருவிதூங்கும் வரையெனத்திகழு மாரவாரமுடையதிருமார்
பும், களங்கநீத்த சந்திரனெனவவிருந் திருமுகமும், செம்மு
ளரிமலரினிதழ்போலச் செவ்வரிபரந்து பெரியவாய்க் கரு
ணைசுரந்து மடைதிறந்தொழுகுந் திருக்கண்களும்விளங்க வி
ளங்குமும்மைச்சீதைகண்ணுறுவளேல் இராகவனென்றேயெ
ண்ணி நுமது மொய்ம்பினலங்கல் சூட்டுவதிலையமு முளதோ
வெனத் தசக்கிரீவன் வித்யுஜிஹ்வா! சீதை மாலைசூட்டாவி
டினும் நான் மானிடவேடந்தரித்ததற்கு வேறாதியம் வேண்
டா. சிறந்தபேரொழில்கொண்ட வவளது மேனியையென
திருபதுகண்ணார நோக்கப்பெறுவனேற் சாலுஞ்சாலுமென்ற
னன். சாரணன் ஏ இலங்காதிபதியீர்! சீதைநுங்கண்முகப்
பேபோதுவதிலையமிலது. இதுபோதிர்ண்டுநயனங்களாலேயே
பாரும். இலங்கைக்குக்கொண்டேகியபின் னிருபதுவிழிகளி

னுலுங் கண்ணுறலாமென்றனன். பின்ன ரம்மூவரும் போந்து பகவான்விசுவாமித்திரருடைய ஆச்சிரமமணுகலும், ஜீமூதகனென வபிதாநங்கொண்ட வாயில்காப்போனெருவன்விரைந்துசென்று தலைவரே! ஞானுதிபரே! மிதிலாநகரமன்னரே! பகவான் விசுவாமித்திரர் தசரத சக்கரவர்த்தியாருடைய வருஞ் செல்வக் காதலர் இராமலட்சுமணருடன் கடைவாயிலாரென, அரசமாதவர் செவிகுளிர்ப்பெய்தக்கேட்டுக் களிப்புற்றுச் சதானந்த முனிவரே! சக்கரவர்த்தி திருப்புதல்வர்களுடன் பகவான்விசுவாமித்திரமாமுனிவர் புறங்கடையெழுந்தருளியிருக்கின்றனரென்று வாயில்காவலாளன் செப்புகின்றான். அருள்செய்து நீரேகிக் கைந்நீர், அடிநீர், உண்ணீர் கொடுத்தழைத்து வாருமெனச் சதாநந்த மாமுனிவர் பொருக்கென வெழுந்துசென்றனர். பின்னர் ஜனகபூபதியார் ஓ! ஓ! மகாத்துமராகிய கோசிகருஞ் சக்கரவர்த்தி செல்வப் புதல்வர்களும் வந்திருக்கின்றனரென்பதைக்கேள்வியுற்று நமதுள்ளமோ குதுகலிக்காமே, வாள்போன்ற வாளைமீனன் மொத்துண்ட மூண்டகப்பூப்போலச் சாம்புகின்றதே. இஃதென்னை யென்னை யென்றுன்னி வீற்றிருந்தனர். எழுந்து சென்ற சதாநந்தர் விரைந்து சென்று கரவடவேடங் கொண்டிராநின்ற வம்மூவரையு நோக்கி நீந்தோரே! இராமலட்சுமணர்களே! வம்மின் நீவிர்போத வித்தலமெத்தவமியற்றியதோ வென்று குசலம் வினுய்த் தக்கவாறுபசரித் துடன்கொண்டு மிதிலையர்கோன் மாட்டணுகினர். ஜனகரிருக்கையினின்று விரைந்தெழுந்து வித்யுஜிஹ்வனை நோக்கி விசுவாமித்திர மகருஷியே! ஜனகன் போற்றி செய்கின்றேனென, வித்யுஜிஹ்வன் இராசருஷியே! நுமக்கு நலம்பெருகுக வென்றனன். இளைய பெருமானுடைய வேடங்கொண்ட சாரணன் பரமாத்துமனுடைய திருவுருக்கொண்ட துராத்துமனுச்குப் பின் மறைந்துகொண்டு இலங்கேசரே! உம்மை மணமகனுக வடையுஞ் சனகருக்கு க்ஷேமமில்லாம லென்னென்றனன். வித்யுஜிஹ்வன் உண்மையிராமனுகுமேல் ஜனகருக்கு நமக்காரஞ் செய்வானு

கலா லவனுருப்பெற்ற இராவணன் வந்தனஞ்செய்ய வேண்டியதென்றெண்ணுபு தசக்கிரீவனை நோக்கிச் சீதை தந்தையைச் சேவிப்பாயெனக் கண்ணாற் சொல்லலுந் தசக்கிரீவன் சாரணனுக்குப்பின் மறைந்து இந்திராதியராற் போற்றிசெய்யப்படுகின்ற நானிச்சனகனுக்கு வந்தனஞ் செய்வலோ வென்று மெல்லக்கூறினன். சாரணனதனைச் செவியேற்று வித்யுஜிஹ்வா! முயற்சி பயன்படு பாக்கறிந்து, நமது புரவலன் செருக்குவிட்டவனல்லன். இராமனைப்போல நடித்துக் காட்டானே லிவ்வேடங் கொண்டதினாற் பயன் பெறுவனோவென்றனன். வித்யுஜிஹ்வன் மீண்டுந் தயக்கிரீவனை நோக்கி நமக்காரஞ் செய்யென்று கண்ணாலுணர்த்தலு மிராவணன் சீதையை நான்காமித்த குற்றத்தினாற் றண்கதிரோன் வெரூஉக்கொள்ளாது தோற்றஞ்செய்கின்றனன். அநங்கன் எளியவனை வருத்தும் வலியவனைப்போல மிகைசெய்கின்றனன். நானோ தென்றலென்னுமுழுவைக்கோர் யாடானேன். நீயோ வஃது சாலாதென்று க்ஷத்திரியப் பைதலினுடைய வருத்தரிக்கச் செய்ததுமன்றி யெல்லாரும் அசிசெய்ய ஜனகன் காலிலும் விழச் செப்புகின்றாய். சீதையை யடையு முன்னரோ யான் பெறும் பெரும்பே றேழுபிறப்பிற்குமமையுமமையும். திக்குவெற்றி யியற்றிய தசக்கிரீவனுடைய வுணர்வு மிங்ஙனங் கெடுமோ? என்னுளத்துக் கினிய மங்கையர் புலவிபுரியுங்காலையினு மவரடியை வணங்கி யறியாத வெனதுமுடி யிம்மனிதனை வணங்குமோ வென்று முனிந்தனன். வித்யுஜிஹ்வன் இலங்காதிபதியாரே! சினங்கொள்ளாதிர். நீரிப்போது இராமனோ? இராவணனோ? தெரியச்சொல்லும். நுமதியற்கையுருவத் தோடிருப்பீரேல் திரிமூர்த்திகளையும் வணங்கவேண்டா. இராமனுடைய தோற்றங்கொண்டிருக்கின்ற நீர் யாரைவணங்கினுமென்ன? அங்ஙன நீர்வணங்குதலுமது பகைஞனாகிய இராகவனுடைய வுடலைக் கண்டவர் காலிற் போட்டொறுப்பதையு மொக்குமன்றோ? அதையே னுணரவில்லையென, இராவணன் வித்யுஜிஹ்வா! நினதறி வுலச்கைக்கொழுந்து

போலிருக்கின்றது. இப்போழ்து யான் கொண்டிராநின்றது இராமனுடைய மெய்யென்று சினந்து வாள்கொண்டு வெட்டுவனேல் வருந்துகின்றவன் யானோ? இராமனோ? என்றனன். சாரணன் சுவாமி! இலங்கேசரோ! வாதாடினவரவரறிவினளவாச் சொற்பல்கும். நீர் வணங்காமலிருப்பிரேற் சனகரையுறுவர். விரைவிற்றண்டஞ் செய்யப்படுமெனத் தயக்கிரீவன் இராசருஷியை நோக்கி ஆரியரே! இராமன் போற்றிசெய்கின்றேனென்முன். உடனேசாரணனெட்டுறுப்பு நிலந்தோய வீழ்ந்திறைஞ்சினன். சனகர் குழந்தைகாள்! நெடிது வாழ்மினென்றாசிகூறினர். பகவான் சதானந்தர் வித்யுஜ்ஜிஹ்வனைநோக்கி விசுவாமித்திர மாமுனிவரே! இவ்விரண்டிளஞ் சிறுவர்களு நிறவொற்றுமையின்றி மற்றயாவற்றினுமொத்திருக்கின்றனரோ. இராமன் யாவன்? இலட்சுமணன் யாவனென்றுவினவ, வித்யுஜ்ஜிஹ்வன் இவ்விருவரு மவ்விருவருமல்லரெனத் தன்னுணைகைத்துச் சதானந்தமாமுனிவரே! வேனில்வே ளருந்தவம்புரிந் தங்கம்பெற்றாற்போலவும், கரும்புயல் வில்லேந்தி மண்ணுற்றாற் போலவும் விளங்கு மிவ்வாண்டகை இராமன், மற்றவன் இலட்சுமணனென்றனன். இராவணன் சாரணனைக் கண்ணுற்றுச் சனகரின்னுஞ் சீதையைவரவழைக்காமலிருக்கின்றனரே யென்று மெல்ல வோதலும், சாரணன் "ஆக்கப்பொறுத்தவர் ஆறப்பொறலாகாதா?" சிறிது பொழுது வாய்விள்ளாதிருமினென்று மெல்லவுரைத்தான். சதானந்தர் ஆரியராகிய கோசிகமாமுனிவரே! தசரத சக்கரவர்த்தி யறுபதினாயிர மாண்டாண்டு தநயரைப் பெறாமல் வருந்தி பரிமகம்புரிந்து மூவுலகையு மோம்புந் திறலுள்ளமைந்தர்களை யீன்றாரெனக்கேட்டு மகிழ்ந்தோம். நன்மகனைப் பெறுவது பெறுகின்றவனுக்கு மாத்திரமன்று மன்னுயிர்க்கெல்லா மினிதென்னும் மொழி யிவ்விராமனாலிவ்வுலகினிலவுகின்றதென்றனர். இராவணன் சாரணா! நமது வித்யுஜ்ஜிஹ்வனைச் சதானந்தன் விசுவாமித்திரனே யென்றன் போடு விளிக்கின்முன். அக்கோசிகனோ தாடகைக்கிரையா

கியிருப்பன். நமது செய்வினை வெற்றியேயெனச் சாரணன் இலங்கேசரோ! வித்யுஜிஹ்வனை விச்வாமித்திர னென்றெல்லாரும் போற்றுவது சீதை கலியாணமாகு மளவதோ? அதற்குப் பின்னுமுளதோ? தவப்படிவங்கொண்டமையால் ஜனகர் முதலாயோர் போற்றிசெய்து பழிச்ச நல்ல மணியாசனத்தின் மிச்க பெருமிதமாய் வீற்றிருக்கின்றனனென்று மெல்லச்சொல்லி நகைபுரிந்தான். இராவணன் சாரணா! தசரதனுக்கு இராமன் முதலாகிய புதல்வர்கள் தோன்றினர்களெனக்கேட் டுள்ளமகிழ்ந்தோமென்று சதாநந்த னிப்போது சொல்லுகின்றனனே. நாஞ் சூழ்ந்தவாறு தாடகையா லிராமனிறந்தானென்று கேட்பனே லச்சதாநந்தன் சாலவல்லலுழப்ப னென்று பின்னு மறைகின்றான். சாரணா! கேண்மோ. எறிந்து போட்ட இராமனுடைய வேடத்தைத் தரித்தது நின்னுமன்று. வித்யுஜிஹ்வனுமன்று. விதியினுமன்று. பகவான் நாரதமாமுனிவரா லென முன்னுகின்றேன். முந்து நான் புரவலர்களோடு செருப்புரியும் வேலை யம்மகதிமுனிவ னென்வயினுற்றுக் குழந்தாய்! இராவணா! வேந்தர்களாகிய பிணங்களை யெறிந்து நினதுவாளை யேன் கூர்மழுங்கச் செய்கின்றனை! சமரமின்றி நினது தோள் தினவுறுமாயின் மேருவெற்போடுராய்ந்து தினவைத் தீர்ப்பாய். அங்ஙன்புரிகையில் கடவுளர்கட் குறையுளாகிய வப்பொலம்பொருப்பைத் துகளாயுதிர்த்துவிடாதி. அல்லது ஞாட்பேயியற்ற வேண்டின் மறலி முதலிய கடவுளர்களோடு பொருதியென்றனர். அவர் மொழியைக் கேட்டு நிலமன்னர்களாகிய தகர்களை யயிலா தொழிந்தேன். அப்போழ்தே தசரதனை யெருக்கல் புரிந்திருப்பேனேல் இராமனென்றொருவன் முளைப்பனோவென்று மறுகினன். சாரணனதனைக் கேளா விலங்காதிபரோ! தயரதனைச் சவட்டாமே விட்டோமென்று பருவரலுறுகின்றீர். வேந்தர் மரபை யொருங்கவிப்பான் விருதுமேற்கொண்ட பரசுராமனே யவனைக் கோறல்செய்யாது விட்டனனென, இராவணன் சாரணா! நன்கு ஞாபகப்படுத்தினை.

எனதெனுவனாகிய வம்மழுவாளியை யேவித் தசரத னுள்ளிட்டார்களைக் கொலைபுரிந்து விடுகின்றேனென்றனன். சாரணன் தசக்கிரீவரோ! சீதையை நீரோ திருமணம்புணர்வீர். வதுவை நடந்தபின்பு ஒருவனையும் விண்ணேற்றக் காரணமில்லையேயென, இராவணன் சாரணா! நீ யெஞ்ஞான்றுஞ் சுபமான வார்த்தையையே கிளக்கின்றனை. தாடகையால் அரசமாதவனிறந்தானோ வில்லையோவென வெனதுள்ளந் தெருமருகின்றதென்றனன். அவ்வேலை பகவான் சதாநந்தர் சனகனை நோக்குற்றுப் புரவலர் புங்கவரோ! நமது ஔரச புத்திரியாகிய ஊர்மிளையையு மிளையவனுக்கு மன்றன் முடிக்கலாமெனப் பகர்ந்தனர். வித்யுஜிஹ்வனங்கது செவிவயிற் சார்தலுஞ் சாரணா! இலட்சுமணனுடைய படிவத்தை நீ பூண்டதும், பயன்றராததாக விலது. தீயருட்டீயோனாகிய வரச வந்தணன் வீற்றுரு நான் வாளாதேகொண்டேனென மெல்ல மொழிதலுஞ் சாரணன் வித்யுஹ்வா! விசுவாமித்திரனுடைய மனையாட்டியையும், புதல்வர்களையும், மாணக்கர்களையும், ஆனிரையையு நீ யடைவாயல்லையோ? அவத்துக்கோவேடந்தரித்தாயென்றனன். வித்யுஜிஹ்வன் சாரணா! நரைத்த தலையும், திரைத்துத் தூங்குங் கொங்கையும், விற்போல வளைந்த வெரிநுமுள்ள இவளோ நின்னுரிமையென்று நீயே யசிபுரிவாயென்றனன். ஜனகர் பகவான் சதாநந்தரோ! எனது துணைவன் குலத்துவசன்புதல்வியர்களாகிய மாண்டவியையும், சுதகீர்த்தியையும் பரதனுக்கும், சத்துருக்கினனுக்கு முறையே வதுவையிழைக்குதுமெனப் பகர்ந்தனர். பகர்தலும், எட்டாப்பழத்தைப் பார்த்துக் கொட்டாவிவிடுகின்ற இராவணன் சாரணா! பரத சத்துருக்கினருடைய வேடம்போட் டின்ன மிராக்கத ரிருவரையுடன் கொடுவராமன் மோசம் போயினேம். உடன்கொணர்ந்திருப்பி னவ்விரண்டு பெண்களுங் கிடைப்பார்களே யென்றனன். சாரணன் இலங்கேசரோ! தசரதனைப் பெண்டு பிள்ளைகளோடு கூட்டி வர விசுவாமித்திரன் சாகேதஞ் சார்ந்திருக்கின்றனனென்று

யான் முந்தியே வித்யுஜ்ஜிஹ்வனுக்குக் கூறினேன். அவனத னைப்பற்றி யாதொரு விரகுஞ்செய்திலனென்றனன். சதானந் தர் வித்யுஜ்ஜிஹ்வனை நோக்கி விசுவாமித்திர மகாமுனிவரோ! த சரத சச்கரவர்த்தியார் அயோத்தியைவிட்டுப் புறம்போந்தன ரா? பரதசத்துருக்கினரை யழைத்துவருகின்றாரா? மொ ழிமினென, வித்யுஜ்ஜிஹ்வன் சதாநந்தரோ! சக்கரவர்த்தியார் தமது பெண்டிர் சிறுவரெல்லாருடனும், போதரலால் நெறிக்கணுங்காங்கிறுத்துத் தங்கிவருகின்றனர். யாங்கள் முந்தி வந்தோமென்றனன். ஜனகர் கைவளைக ளொலி க்கக் கவரிவீசிக்கொண்டு நின்ற மயிலன்னார்களி லோர் குயில ன்னாளை நோக்கி, அடிபெண்ணே! நீ சென்று, சீதையோடு மற்ற மூவரையுங் கொணர்தி; பகவான் விசுவாமித்திர மக ருஷியைச் சேவித்தல் வேண்டுமென்றனர். இராவணன் சா ரணு! நம்புடைத் தெய்வமிருக்கின்றது. இப்போது சீதை போதருவாள். இராமனுடைய படிவத்தைக்கொண்டவென் னைக் கடைக்கணித் துள்ளமகிழ்வு பூப்பளென்றனன். முன் னோரரச்கி யிராவணனுடைய செயலை மண்டோதரிக்குத்தெ ரிக்கச் செல்கின்றேனென, அவ்விராவணனுடைய செயலை ஜனகருக்குணர்த்த யானுஞ் செல்கின்றேனெனப் போந்த அக்கந்தருவன் வந்து ஜனகமகாராஜரோ! கேண்மின். இது போழ் துமதுபாங்கர் வீற்றிருக்கின்ற மூவரும் விசுவாமித்தி ரர் இராமலட்சுமணரல்லர். வித்யுஜ்ஜிஹ்வனும், இராவணனும், சாரணனு மம்மூவருடையவுருவைமாயையாற் றாங்கிக்கொண் டு, ஜானகியை மணம்புரிவான் வந்திருக்கின்றனர். விசுவா மித்திரர் இராமலட்சுமணருடன் பின்னர் வருகின்றனரென் றனன். இராவணன் வித்யுஜ்ஜிஹ்வனை நோக்கி யீதென்னவி றம்பூது? நமது செய்தியினுண்மையை வெளிப்படுத்தினவ ன் யாவனென, வித்யுஜ்ஜிஹ்வன் வெருவி, ஐயோ! நமது சூழ் ச்சியை யாருமறியார். நானிலங்கையைவிட் டேகுகையினு ள்ளக் கிளர்ச்சியினாலெனதில்லாட்குக் கூறினேன். அப்பே தையெவருக்குரைத்தனளோ? நமக்கிவ்வல்லிடிவிழுந்ததென்

றனன். கந்தருவன் மொழியைக் கேட்டவுடனே சதாநந்தர் இம்மொழி புகன்றவன் யாவனென் றுணர்ந்துவருவாயென வாங்கு நின்ற கஞ்சுகியை யேவலு மவன்புறம்போந்து வினு ய்த் தெருண்டு மீண்டுபோய்ச் சுவாமி பகவானே? ஓர் கந் தருவ வாடவன் முந்திக்கூறியவாறு மொழிந்து வானஞ்சென் றனென்றுங்குள்ளவர் புகன்றனரென்றனன். சதாநந்தருஞ் சனகருமதனைக் கேட்டுச் சிறிதையுற்றாராய்ந்துகொண்டிருக் கும் வேலை பகவான் விசுவாமித்திரர் சக்கரவர்த்தி திருக்குமா ரருடனெழுந்தருளுகின்றனரென் றொருவன் போந்துணர்த் தினன். சதாநந்தரம்மொழியைச் செவியேற்று வித்யுஜிஹ் வனை நோக்கி, நீவிர் மூவிரும் நிருதரெனவும், பின்னல் விசு வாமித்திரர் வருகின்றனரெனவுங் கந்தருவனேதினன். அவ் வாறே விசுவாமித்திர மகருஷி வருகின்றனரென் றிவ்வொற் றுணர்த்துகின்றனன். நீவிருண்மையையுரைமினென, வித்யுஜி ஹ்வன் ஓ! ஓ! தலையதிகாரிகையி லகப்பட்ட கள்ளன்போ லாயினேம். என்செய்வாமென்று மாழ்கி யொருவாறு தே றிச் சதாநந்தரோ! திருச்செவிசார்த்தியருளும். கந்தருவன் வானேகுங் கன்மவயத்தனுமயத்திற்றடுமாற்ற முற்றுச் சொல்லினன். போதருகின்றவர்களே நிசாசரர்கள். பின் னுலுண்மைமன்றம்படும். இராமனுக்கு நான் பல்படைகளை யீந்துளேனென, அரக்கர்களென்னை முனியா நின்றனர்க ளென்று கேட்டிருக்கின்றேன். எங்களுருப்பெற்றிவணடை கின்ற வவ்வரக்கரது கொடுங்கண்களில் யாங்கள் படுவோமே லெங்களெல்லோரையு மென்செய்வரோ? வெருவுகின்றேம். அவர்களை யுள்ளேகாவண்ணம் நீர் தடாதபட்சத்தில், அன் னோர்கள் அரக்கர்களென்று நீர்தெருளுங்காறும் யாங்க ளொருசா ரிருக்கின்றேமென வுரைத்துத் தம்மிலொருவரை யொருவர் பார்த்துப் பொந்திலுள்ள ஆந்தைபோல விழித்து மூவருமெழீஇ ஓ! ஓ! நாமகன்று செல்லுவோமேற்சனகரி டத்து நிகழுஞ் செய்தியையெவ்வாறுணர்வோம். கண்கட்டி விஞ்சையியற்றி யொருவருமறியாவண்ண நாமிவணிருத்தலே

நலமென்று துணிந்து புறத்திற் செல்பவர்போலச் சிறிதகன்று சென்று மாயையைக் கருதிப்பெயர்த்தும் வந்தொருவருந் தெருளாவண்ணஞ் சனகர்பக்கலிருந்தனர். அக்காலை மிதிலையராண்டகை சதாநந்தரை நோக்கி, ஐய! சீதைக்குக்கலியாணநேர்ந்ததென் றின்பவாரிதியிலழுந்திய நான் இப்போதரந்தைப்பரவையில் விழுந்திருக்கின்றேனென் றுள்ளமறுகினர். சதாநந்தர், ராஜமுனிவரோ! வருந்தாதிர். அவ்விசுவாமித்திரரும் வருக; மெய்யையும் பொய்யையு மாராய்வோமெனச் சீதை தந்தையார் சதாநந்தரோ! கந்தருவன்கூற்றுநிற்க; நங்கணின்றயலிற் சேறலுற்றவர்கள் இராக்கதர்களும், வருகின்றவர்களுண்மை விசுவாமித்திரராதியருமாயின், அவர்கள்வரவைக் கேட்டிவர்கள் வெருக்கொளவேண்டியதில்லையாகலான் வருகின்றவர்களே யரக்கர்களென் றெண்ணுகின்றே னென்றனர், கௌதமர்காதலர் எனதெண்ணமு மங்ஙனேயென்றனர். ஜனகர் பாங்கரிருந்த வித்யுஜ்ஜிஹ்வ னம்மாற்றங் கேட்டுப் புறனிற்சென்று மாயை தவிர்ந்து யாவர் கண்ணுக்கும் புலப்பட வந்து ஜனகரோ! இராமனுடைய வுருவையிராவணனும், இலச்சுமணனுடைய வடிவைச் சாரணனும், எனது மேனியை வித்யுஜ்ஜிஹ்வனும் பூண்டுவருகின்றனர். நானுகவெண்ணி வித்யுஜ்ஜிஹ்வனுடைய காலில்விழும். அவனை நன்குய்ப் பூசனைபுரியும். இராமனெனவும், இளையவனெனவுமெண்ணி, இராவணனுக்குஞ் சாரணனுக்கும் பெண்ணமுதன்னைக்கொடுமின். அப்பாலரக்கரென வுணர்ந்தழுங்கியேங்குமின். நுமது பெண்களை மணமுடித்துப் பிற்றைநீரழுமின். எனக்காகவேண்டியதென்? இராம லட்சுமணனைக் கொண்டுபோய்த் தசரதர்பால் விடுகின்றேன். ஆயினும், வருமவர் திறத்தை நீர் தெருளுங்காறு மாங்கிருக்கின்றே னென்றயலிற்சென்று கண்கட்டிவிஞ்சை செய்துவந்து, ஜனகர் பக்க லிராவணனோடுஞ் சாரணனோடு முறைந்தான். விசுவாமித்திரர் குழந்தை யிராமன் தாடகையையும், சுவாகுவையும், கராளனையுங் கொன்றமையானும், சீதையைத் திருமணம்புரி

யத் தொடங்கியிருக்கின்றமையானும், இராவணன் மிக்க சினந்தலைக்கொளீஇயிருப்பன்; அவனால் நீணெறியிடைத்தீங்கொன்று மின்றிவந்தெய்தினேமென் றுள்ளத்தினுளுவந்து இராகவா! இலட்சுமணா! ஜனகர் சாலப்பெரியவர். யாஜ்ஞவல்கியர்வயின் ஞானப்பெரும்பொருளீட்டினவர்; ஸ்ரீமந்நாராயணனே பரமனென்னு மிருமறைப்பொருளினுண்மையுணர்ந்த புனிதர்; அவர்பானீவிரிருவிரும் நனிவணக்கமாயிருத்தல் வேண்டுமென்றனர். சுமித்திரைகாதலர், பகவானே! காதிகாதலரோ! பெரியோராகிய ஜனகர் பெருவேள்விக் குழுதவுழுபடைமுனையிலிருந் தோர்பெண் ணிரத்தினந்தோன்றியிருக்கின்றதென்னும் வியப்புச்செய்தி கேள்வியுற்றேனெனக் கோசிகர் ஆமாம். உண்மைதானென்றனர். இராகவன், தேசிகரோ! வானவரானும், ஏனையோரானுங் குனிக்கக்கூடாத சிவனுடைய சராசனமொன்று ஜனகப்புரவலர்பாலுளதென்று கேள்வியுறுகின்றேனென, அம்மாமுனிவர் புன்னகைகொண்டு சடைமுடிதுளக்கி, அதுவுமெய்ம்மைதானென நவின்றுநடந்துவந்தனர். விசுவாமித்திரராதிய ரணித்து வந்துவிட்டார்களென்று வாயில் காப்போன் சொல்லக்கேட்ட சதாநந்தர் ஜனகரைநோக்கி நகையா, அந்த விசுவாமித்திரனாயுமழைத்துவருகின்றேனென்றெழுந்து சென் றவர்களை எதிர்கொண்டு நலங்களைக்கடாவி வம்மினென்றழைத்துவந்து, ஜனகர்பக்கன் மணியணைமிசையிருத்தி, ஜனகமகாராஜாவே! இவ்விருவருந்தாம் சக்கரவர்த்தி திருக்குமாரரென்றனர். மிதிலையர்கோன் அதைக்கேட்டுப், படிவத்தைப்பற்றிச் சக்கரவர்த்தி திருக்குமாரர்களென நமது சதாநந்தர் புகலுகின்றனரென்று, நெஞ்சினுட் கருதுற்று, விசுவாமித்திரமாமுனிவர்பா லணைந்து நிகழுநலங்களை வினவலுற்றிருந்தனர். சதாநந்தர் இவ்வேலைபோந்திருக்கின்ற மூவரும் அரக்கர்களேயாயினும், நாம் முகமனியம்புவோமெனமுன்னி யாவராலும் பணியப்படுபவராகிய விசுவாமித்திர மகாமுனிவரோ! இராமலட்சுமணருடன் பகவத்கடாட்சத்தாலிடர்ப்பாடின்றி வந்திரா? என்

றனர். ஜனகரும் சதாநந்தரது மொழிக்கிணங்க யாமுஞ் சொல்வோமெனக்கொடு காதிகாதலரே! சக்கரவர்த்தியார்க்கு நெடிதுகாலம் புதல்வர் தோன்றாமலிருந்து ரிஷிய சிருங்கமாமுனிவரால் யாகஞ்செய்வித்தபின்னர் மைந்தர்களுதித்தார்களென்று செவியாற் கேள்வியுற்று மகிழ்ந்தேன். நும்மால் அவர்களிலிருவரையின்று கண்ணுறக்கண்டு மகிழ்வுற்றேனென்றனர். இராவணன் வித்யுஜிஹ்வா? விசுவாமித்திரனோடு சனக னேன்வார்த்தையாடுகின்றனனென, வித்யுஜிஹ்வன் இலங்கேசரே! நம்மைநோக்கியமட்டில் குழறியாங்கவர்களிடத்துங் குழறுகின்றானென்றனன். பின்னர் விசுவாமித்திரர், ஜனகர்பெருமானுரே! கேண்மின். யாங்கண்மூவரும்வரா நிற்கையின் வட்டையில் தாடகை கண் கனற்புலிங்கம் வீச, முரண்டெதிர்த்துவந்தாள். அவளையொரேயம்பாற் குழந்தையிராமன் கொன்றானெனலும், சனகர் சதானந்தனைநோக்கி ஆயிரங்கடகளிற்றின் திறல்சான்ற தாடகையை இச்சிறுகுழந்தை கொன்றனனென்று கூறினல், நாம் பரிவுமிக்குப் பெண்கொடுப்போம்; தூக்கிக்கொண்டிலங்கைக் கேகலாமெனப் பொய்ம்மைமொழி கிளக்கின்றனன். இவன் வித்யுஜிஹ்வனே. முந்திவந்தவரோ விசுவாமித்திரரென்று மெல்லக்கழறினர். சதானந்தரம்மாற்றத்தைக் கேட்டு, வேந்தரேறே! அங்ஙனமே துணிவுகோடறகுதியன்று; முற்றுங்கேட்டுணர்குதுமென்றனர். சாரணனதனைக்கேட்டு இவ்வேசிமகன் சதாநந்தன் முதற்றொட் டிராமன்பக்கலே சார்ந்து, பேசிக்கொண்டுவருகின்றானென்றான். விசுவாமித்திரர், ஜனகரே! இன்னங்கேண்மின்; மாரீசன் சுவாகுதொடக்கமாயோர் தாடகை கொலையுண்ட சொல் செவியிடைச்சார்தலுந் துனைந்து வந்தார்கள். அம்மாரீசனையன்றி மற்றையோரைக் குழந்தை விண்ணேற்றினனென்றனர். சதானந்தர், மன்னர் தலைவரே! இவர்களைப்பற்றி நுமதெண்ணமென்னையோ? என, மிதிலையர்பெருமானுர் கண்ணுதலினுடைய வில்லை முன்னிட்டிராமரிருவர்களிற் றாசரதியாவனென்று தெருள்வோமென்ற

னர். சதானந்தரம்மாற்றங்கேட்டு, நாணத்தோடு முறுவலி த்து ஐய! சைவதனுவை வளைக்கின்றவன் உண்மையிராம னு? கடுக்கையங்கண்ணியானோடு கைலைப்பொருப்பை யோர் சுண்டுவிரலா லொரு சிறிதயர்வுமின்றி யேந்திப் பந்துவிளை யாடல்புரிந்த இராவணனுக்குத் திரியம்பகக் குனிசிலை குனி ப்பத் திறலிலையெனலாமோ? வளைக்கவல்லவன் யாவனோ? அவனே இராமனது திருவுருக்கொண்ட இராவணன். சைவ தனுவை வாங்குகின்றவனுக்குச் சீதையைக் கொடுக்கின்றே னென்று நீர் பண்டைஞான்றே சூளுறவு செய்திருக்கின்றீர் இம்மொழி யியம்புவீராயின், நாம் இராக்கதருக்கே பெண் கொடுக்கவேண்டு மென்றனர். ஜனகரதனைக்கேட்டு, பகவா ன் சதானந்தரே! முன்னோரெல்லை பரமசிவனெனக் கரு ளிச்செய்த மாற்றத்தையிதுபோழ்து நுமக்கு மொழிகின்ற னென் கேட்டருளீர். இப்பிநாகத்தைச் சித்தர்கள், சாரணர் கள், கந்தருவர்கள், இராக்கதர்கள், யட்சர்கள், இந்திராதி தேவர்களொருவரும் வளைக்கமாட்டார்கள். பின் வளைப்பவன் யாவனெனின், இனித் தொண்டரேஞ் செய்யும்வணக்கத்தி னல் தன்னந்தனியனுகியவொருவன் திருவவதரித்தருளுவன். அப்பெருந்தகையின்னனெனவும், இன்ன தன்மையனென வும், இன்ன திருநாமனெனவும், இன்ன திருவுருவனென வுஞ் சாற்றல் எமக்குமரிது. நாமகள் கொழுநனுக்கு மரிதெ ன்றனராகலாற் றநுவை வளைக்கின்றவன் சங்கரன் சாற்றிய வொருவனே யாவனென்றனர். சதானந்த ரம்மொழியைச் செவியுற்று மகிழ்ந்து, அங்ஙனமாயினங்ஙனமேபுரியலாமெ. ன்றேகினர். ஞாங்கர் நின்ற இராவணன்கண் சேப்பமிசை படபடவென்றுதுடிப்ப நெட்டுயிர்ப் பெறிந்து, வித்யுஜிஹ் வா! என்னையஞ்சிச் செங்கதிரவன் வெய்யகதிர்களை விரிக்கின் றானிலன். அனலன் சுடுகின்றானிலன். அநிலன் ஓங்கி வீசுகின்றானிலன். வருணன் எல்லையிகந்த பெருமாரி, மாரியி ன்மைசெய்வானிலன். தேவர் செயலிவ்வாறிருப்ப, இவ்வரசர் குலவிளஞ்சிறுவன் எனக்காருயிரன்னோர்களைக் கோறல்புரிந்

து, யான் காதலிக்கும் பெண்மணியையுந் தான் வேட்கவஞ் சாது வந்திருக்கின்றனன். உலகமும்மையும் யான் கோ லோச்சுதன்மை நன்று நன்று. குழந்தைகளுக்கும், கல்லா தவனுக்கும், சாதுக்களுறவுசெய்யாதவனுக்கும், அஞ்சாமை யும், பேதைமையுமேநெஞ்சிற்குடிகொண்டிருக்கும்; கொடுவி டப்பாந்தலை விரைந்துசென்று வாலைப்பற்று மிளஞ்சேயை யொத்தவன்தானே யிராமனென்றனன். வித்யுஜிஹ்வன் சு வாமி இலங்கேசரோ! தாய்முலைப்பான்மணம் வாய்மணக் கும் இராமனை யோர்பொருளாயெண்ணிச் சினங்கொள்ளன் மின். மேனிகழ்வதைக் காண்குறுவோமென்றனன். ஜன கர் சதானந்தமகாமுனிவரோ! இவ்விருதிறத்தாரின் மெய்ம் மையர் யாவரெனவிரைந்துணரவேண்டுமென்றனர். விசுவாமி த்திரர், ஜனகருஞ் சதானந்தரு மிடையீடின்றிக்கிளந்துகொ ள்வதைச் சிறிது சிறிது செவியுற்று ஓ!ஓ! அரக்கர்கள் நம்மிற் படிவந்தாங்கி, நமக்குமுந்தி வந்திருக்கின்றனர். இவரிருவ ருமுண்மைதெருளாமே திண்டாடுகின்றனரென்பதை யுணர் ந்து, சனகரோ! சதானந்தரோ! நும்மிருவிருடைய கருத்தி லையுறலைக் கரவாதெமக்குணர்த்தவேண்டும்; எம்மை நீயிர றியவில்லையெனறு நன்குவிளங்குகின்றதென்றனர். மிதிலா நகரமன்னர் சதானந்தரை நோக்கிச் சொன்மினென்று கண் ணினுலேவ, அச்சதானந்தர் விசுவாமித்திர மகாமுனிவரோ! கேண்மின். மற்றெல்லாநிற்க. எம்பாலுள்ள சைவதனுசை வளைக்குங் குமரன் யாவனோ? அவனுக்கு யாம் பெண்கொடுக் கின்றனமென்றனர். காதிகாதலரதனைச் செவியேற்றுச் சதா நந்தரோ? நுங்களுடைய பெண் நங்களுக்கு வேண்டா. நீவிர் கொண்டிருச்குமையுறவை நீத்தல் செய்வதே யிவ்வேலை சா ல்வதாயிருக்கின்றது. சிவன் கைச்சிலையைப் பொருக்கெ னக் கொணர்மினெனச் சதாநந்தர் நன்றென்று புறம்போந்த னர். இராவணன், சைவதனுசை யிவ்வரசப்பைதல் குனிப்பவ ல்லனோ? நக்கன் வீற்றிராநின்ற கைலைவெற்பைச் சிறுகந்துகம் போலவெடுத்தாடியவெனக்கு மப்பண்ணவனுடைய கைவில்

வளைப்பவொல்லுவதன்று. புத்தேளிர்களெல்லாரு மொன்று கூடி முயலினுந் தூக்கிநிறுத்தவுங்கூடாது. சதானந்தன் வில்லைக் கொணர்ந்தவுடன் சனகனம்மை விளித்தால் நாஞ்செய்கின்றதென்? வித்யுஜிஹ்வா! நுங்கள் குழறலைக் கேட்டன்றோ? இராமவேடந்தரித்தது. அதுதானூதியமென்றோர்தூணத்தின் முட்டிக்கொண்டு, சீதா! நின்தந்தையினால் நீ கெட்டாய். இப்பிநாகத்தை வளைப்பவர் எஞ்ஞான்று மெங்குமிலர். நினக்கு மணமுமில்லை. ஜனகர் தாமருமையாயின்றெடுத்த ஊர்மிளையினுடைய மன்றற்செய்தியைப்பற்றி யிச்சூழுைத்தாரோ? நிலனிற்றோன்றிய நீ கேடெய்தினன்றோ னுக் கிழவென்னோ? சானகீ! கட்டழகையும், இளமையையும் படைத்தியாதுசெய்வாய்? என்னை நீமாலை புனையாவிடின் நீ பிறந்தும் பிறவாதவளேயென்றனன். சாரணன் ஆமாம். அஃதுண்மையே, ஐயமில்லையென்றனன். அவ்வேலை சதானந்தர் வந்து அரசரோறே! தியம்பகம் வந்துவிட்டதென, இராசவிருடியார்பகவான் விசுவாமித்திரருடைய திருமுகத்தை நோக்கினர். அக்காதி காதலர் தமதருகிற்சிங்கவேறென வீற்றிருந்த புருடோத்தமனை நோக்க, எல்லாம் வல்ல ஆண்டகையா ரவணெழுந்துநிவந்து பொன்னுகமுநாகமுநாண நடந்து,அறுபதினுயிர ரிடையிடைத்தண்டு மடுத்துக் காவிவந்தபிநாகமென்னும் பொலநாகத்தை யிடது திருக்கரத்தா லெடுத்து நாணை வலது திருக்கையிற்கொண்டு, இடது சீர்பாதத்தைக்கோதண்டத்தினடுவிலூன்றி வாங்கலுந் தாசரதியினுடையபேராற்றலுக்கு நோனுது, அச்சைவதனுசிருதுணியாய் முறிந்தது. அப்போது அண்டகோளம் விண்டாற்போலக் கம்பலையெழுந்தது. இந்திரன்முதலிய விமையவரொல்லாரு நமக்குப் புகலிடம் யாதென்று நாடாநின்றனர். புாரதி கணவன்தனது தேவி வெருவலுற்றோடுவளென்று வாயைப் பொத்திக்கொண்டனன். ஐம்முகன் தன்னையு மீர்த்துக்கொண்டு பார்ப்பதியோடுவளென்று தனதிடப்பாகத்தை யாப்புறப்பற்றிக்கொண்டனன். பின்னர்ச் சதானந்தர், ஜனகரோ! சக்க

ரவர்த்தி திருக்குமாரனுடைய வளவிலாற்றல் யாருக்குண்டு. உமையாள்கொழுநன் கூறியதாய் நீர் சொல்லிய மாற்றமே யுண்மை. இவர்களே யுண்மையிராமாதியரென்றினி விள ம்பவும் வேண்டுமோவென்றனர். இராசமுனிவர் பெருங்க ளிப்பரவையின் மூழ்கிக் கல்விக்கரையுற்ற கௌசிகரோ! போ ற்றி. காதிகுலதிலகரோ! போற்றி. தமியேன்பொருட்டு இரா மபத்திரனைக் கொணர்ந்துதவுதல் செய்த நுமக்குப் போற்றி போற்றியென்று சதானந்தருக்குத் தமது கருத்தை முகத் தாற் பகர்ந்தனர். அச்சதாநந்தரக்குறிப்பை யுணர்ந்து பகவான் விசுவாமித்திர மகாமுனிவரோ! இராமபிரானுக்குச் சீதை யையும், இளையவனுக்கு ஊர்மிளையையும், பரதனுச்கு மாண் டவியையும், சத்துருக்கினனுக்குச் சுதகீர்த்தியையுந் திருமண முடிப்பச் சனகர் குறிக்கின்றனர். அடிகளுடைய திருவுள மெங்ஙனமோவெனக் காதிகாதலர் சதானந்தரோ! ஜனகப் பெரும்புரவலருடைய கருத்தோடென்று நானியைந்தவனே யென்றனர். ஜனகர் பெருமகிழ்வின் கண்ணீரிடையுருது வா ராநிற்பக் குழந்தாய்! இராமா! வாராய். இந்நிலவுலகையணி செய்வான்றிருவவதரித்த இராமசந்திரா! வாராய். சீதை புரிந்த பெருநோன்பின் பயனுருவாகிய இரகுநாதா! வாரா யென்று தமக்குப் பிறையணிசடையானீந்ததை யெண்ணி யெண்ணி முதுமறைகிளக்கு மூவாவறனுக்கு முதற்றுணையா கிய தாசரதியாரை நோக்கி நோக்கி யுருகி யுருகி நாத்தழுதழுப் பவேத்தித் தழுவிக்கொண்டனர். உள்ளுவாருள்ளத் துவட் டெழுசெழுந்தேறலாகிய இராமபத்திரர் அச்சனகருக்குக் கும்பிடுசெய்து, விசுவாமித்திரர்பால் வீற்றிருந்தனர். கண்க ட்டிவித்தை செய்தொளிந்துகொண்டுறைந்த நாணிலியாகிய பத்துத் தலையன் வித்யுஜ்ஜிஹ்வா! இனி யாமென்செயற்பா லது? அரசர்குலக்குழந்தை வில்லைக்கண்டு வெருவராதெ ழுந்தமாத்திரையில் யானே சீதைமேலோகைதவிர்ந்தேன். நான் பரமசிவனுக்குச் சிறந்த தொண்டனேனல்லேனே? வழிபாடுபுரிதற்குத் தகுதியாகிய அப்பிரானுடைய பிராகத்தை

யொசித்தவனை யுயிரோடுழல விடுவேனே. எவ்வாற்றானுயினு மன்னோனைக் கோறல்புரிந்து, பெண்மணியாகிய சீதையைக் கவர்கின்றேனென, வித்யுஜ்ஜிஹ்வன் காமினியிவணிறையிரு ப்போமேல் சுவாகுவையும், கராளனையும், தாடகையையும் வீட்டிய அம்பு நம்மூவரையுந் தருவுமெனத் துண்ணென வெரீஇ இலங்கேசரோ! மூவுலகையும் பொதுவறவோம்பு நு மக்கியலாததென்னிருக்கின்றது? நாங்கடுகி யிலங்கைசேற லுற்று, மாலியவான், பிரகத்தன், மகோதரன்முதலக்கமா யவமைச்சரோடாய்ந்து தக்கதுசெய்குதுமென்றுரைப்ப, தயக் கிரீவனம்மாற்றத்துக் கிணங்கி நன்றென்று புறம்போந்து வித் யுஜ்ஜிஹ்வனோடும், சாரணனோடும் பொய்ப்படிவமாறிப் புட்பக மீதிவர்ந்து சென்றனன். பின்னர் எல்லாவண்டங்களையுமன்னு யிர்களையு மீன்றுமின்னுங்குமரித்தன்மைமாறிலரென்று விண் ணவர்முனிவர்பழிச்சாநின்ற சானகியார், ஊர்மிளை, மாண்டவி, சுதகீர்த்தி நால்வருந் தங்கள் சிலதியரோடுடனுறைந்திருந்தனர் கள். அத்தோழியர்களிலொருத்தி நம்மன்னையாராகிய சானகி பிராட்டியாரை நோக்கி, மைதிலியாரோ? நுமது நெஞ்சினுளெ ண்ணி யாங்கு நிறைவேறிற்றன்றோ? இராமபிரானுரோ நுமது கொழுநர், இன்று நாளையிலவரையணுகலாகுமென, மிதிலை நாடியார் நாணமுற்றுத் தலையை வணக்கி நில்லேனநோக்குற்றுத் தோழி! நீயுஞ் சிலவதியைப்போலவே யெனது தங்கையரை விட்டென்னையே யசதியாடுகின்றாய்; அப்பாற் போடியெ ன்று, தாமரைப்பூவாலடித்தருளினர். ஊர்மிளை, அக்கை சீ தையாரோ! எங்களை யொருமாது நகையாடலியற்ற யாங்கள் ஒதிமத்தூவியாலமைத்த மெல்லணையைத் தவிர்த்திளந்தளிர்ச் சேக்கையிற் கண்படைகொள்கின்றேமோ? முண்டகமலரைச் சந்தனத்தேய்வையிற் றோய்த்து, ஒற்றிக்கொள்கின்றேமோ? தாமரைநாளங்களால் வளையஞ்செய்து தரிக்கின்றேமோ? கணவனோடு கூடல்செய்வதுபோலக் கனாக்காண்கின்றேமோ? எதிரில் நின்றவர் மறைந்துவிட்டாரோ இகுளையீர்! அன்னோரை விளித்து வம்மினென்கின்றேமோ? சொல்லாய். கைவளை

களையுங் கலைகளையுஞ் சோரவிடுகின்றேமோ? படம் வரைந்துபார்த் தப்படத்தோ டேதேனுங்கிளக்கின்றேமோ? அவ்வுருவைத் தழுவிக்கொள்கின்றேமோ? மெல்லியதென்காலவீசினல், தென்றற்புலியே! தென்றற்புலியே! இரைதேடுதியோ? என்னைக் கொல்லாய் கொல்லா யென்கின்றேமோ? உடுபதிதோற்றஞ்செயின், இந்துவே! பாலின்பரவையில் நீ பெண்ணோடு பிறக்கவில்லையோவென்கின்றேமோ? அன்றில் கூவின், ஐயோ! அது அன்றிலன்று. என் றீவினையென்கின்றேமோ? கருங்கடலுங் காயாம்பூவு நீலோற்பலமும் பானலு நீலக்கல்லு மவருடைய நிறமென்கின்றேமோ? சொல்லாய். திசைக்களிற்றினுடைய நடையே யவர்திருநடையென்கின்றேமோ? மணிவெற்பேயவருடைய மார்பமென்கின்றேமோ? திரண்டதூணமே யவர் திருக்கரமென்கின்றேமோ? முளரிமாமலரோ யவரது வதனமென்கின்றேமோ? சொல்லாயென்ருள். மைதிலியாரதனைத் திருச்செவியுற்று நஞ்செயலைத் தங்கை நன்ருயுணர்ந்திருக்கின்றனளெனக்கொடு ஊர்மிளாய்! தோழிகளைப்போல நீயுமென்னைப் பரிகாசஞ் செய்யலாமோ? அதுவுமெனது தீவினைதானெனத் தோழியரிலொருத்தி, ஆமாம். நாயகனை யின்னங் கூடாதிருக்கின்றது தீவினையென்பது நமது திருவுளமென. யானன்குணர்வேனென்றனள். ஜானகிபிராட்டியா ரினிப்பேசுதுமேல் நமது செய்தியே நனிவிளையுமென்று முன்னினுந் தலையை வணக்கி வாளாவிருந்தனர். பகவான் விசுவாமித்திரமுனிச்கரசர் பக்கல் வீற்றிருந்த இரகுநாதர் எழினியினுட் பேசிக்கொள்ளுகின்றவர்கள் நமது காதலியாகிய சீதையு மவளுடையதங்கைமாருமாகவிருத்தல்வேண்டும். எல்லாநலங்களையுஞ்செய்த பகவான் விசுவாமித்திரர் கலியாணமுகூர்த்தத்தை யின்னந்துணிவு செய்யாம லிருக்கின்றனரென்றுன்னி, ஓ! ஓ! மின்னல்கள் சூழ்ந்திருக்கு மின்னரசென்னத் தங்கையரோடு தோழியர் தற்சூழநிற்குமவள்தான் சீதை. மலர்க்கணைவேளுங்குற்றேவல் புரிந்தொழுகுந் தகுதியுடையவிவளை நாமகள்காதலன்

படைக்குந் தரமுடையானுயின் இவளைக்கடுப்பப் பற்பலமாதர்களைச் சிருட்டிப்பனல்லனே?தனிமுதலாகிய நாராயணனுடைய திருத்தாட்புனலாங் கங்கையென்னுங் கடவுள்யாறு புவியிற் போந்தபின்,மாண்பிழந்த ஆறுகளையொத்து,மற்றை மங்கையரெல்லாருமிச்சீதையென்னு நங்கை தோன்றியபின் பொலிவிழந்தார்கள் போலும். கலைமகள் மலைமகண்முதலியவர்களுடைய முகமென்னு முழுமதிகளுக்கு மேனியாலிவள் பகல்போல விளங்குகின்றுளென்னின், இவளுடைவாண்முகத்தையவ்வுடுபதி நிகர்க்குமெனலாமோ? அவளோடு நம்மைத் தெய்வமெப்போது கூட்டுவிக்குமோவென்றிருந்தனர். பின்னை மாண்டவி அக்கை சீதா! நமது தந்தையார் விளித்தாரென அவ்விகுளை கூப்பிடுகின்றுளே யெனச் சானகியார் சைவதனுசையொசித்த புருடோத்தமர் ஆங்கிருக்குங்காலை நான்போதநாணுறுகின்றேனென்றுமாண்டவியினுடைய புறத்துமறைந்துகொண்டு, "ஆசைவெட்கமறியாது" என்பதிவரிடத்து நிகழ்வதென்பதுபோல,முக்கணனுக்கும், எண்கண்ணனுக்கும், ஆயிரங்கணனுக்கும் அவரவரியற்றிய தவத்தினளவு பதமளித்தகடைக்கணேக்கால் தாசரதியாரை நோக்கிக்கொண்டு,இராமபிரானே! நமது காதலியார் வருகின்றுரென் றூாப்பதுபோலச் சிலம்பு சிலம்ப,மெல்லநடவாவிடின் கொங்கைகளைத் தாங்காது நுசுப்பொசியும். எச்சரிக்கை எச்சரிக்கை யென்பனபோல ஐம்பாலைமொய்த்த சுரும்பரெழுந்தோலமிட நடந்தருளினர். உருக்கிய தங்கம்போலங்சமுடைய இளையபெருமாளை ஊர்மிளை கண்ணுற்று இவர்தாநமதுநாயகர். இவரைநாம் பார்த்தவுடன்மன்மதன் நம்மைப் பார்க்கின்றுனென்பது நமது மேனியிலுண்டான பசலையே கிளக்கின்றதென நாணமுற்று, மிதிலைநாடியார்புறத்து மறைந்தனள். சுமித்திரைகான்முளை ஊர்மிளையை நோக்கியருளி,ஐயோ இவள் யாவள்? கண்ணென்னும் வலையைவீசி நமது நெஞ்சமென்னுமானைக்கவர்ந்தனள். அவளை நாங்கண்ணுறுவமேல் இன்னம் யாது செய்வளோவென்று நோக்குறுதிருந்தனர். அவ்வேலைமிதிலையர்கோன் குழந்தைகா

ள்! போதருமின். பகவான் விசுவாமித்திரரைச் சென்னிநிலந் தோயப் போற்றி செய்ம்மினென, அந்நால்வரும் வந்து வந்தனஞ்செய்தனர்கள். காதிகாதலர் நீவிர் நற்கணவரையடைந்து நீங்காதசெல்வநிறைந்துபதியை யடைதுகவென் றுசிகூறலும சீதாபிராட்டியார்முதல் நால்வருஞ் சிறிதகன் றயலின்ம றைந்து நாணி நின்றனர்கள். பகவான் விசுவாமித்திரர் அரசமாதவரோ! யான் யாகமியற்றுகின்றேன். நீர் கலியாணஞ்செய்யத் தொடங்குமெனச் சனகர் மகிழ்ந்து நன்றுநன்றென்னும்வேலைப் பகவான் சதானந்தருடைய மாணுக்கனுய தேவவிரதன் விரைந்துவந்து, மிதிலையர்பெருமானே! சக்கரவர்த்தியார் சாருகின்றனர். பௌவமேழுமேலெழீஇ முழங்கி வருகின்றனபோல வவருடையபெரும்படை வருகின்றதென்றனன். ஜனகரஃதுணர்ந்து, விசுவாமித்திரமகாமுனிவரோ! சதாநந்தமாமுனிவரோ! சக்கரவர்த்தியார் போதருகின்றாராம். நாமெல்லாரு மெதிர்கொள்வோமெனக் காதிகாதலர் அரசகேண்மோ. சக்கரவர்த்தியாருடைய மனைவியர்களையெதிர் கொள்வானுமது மனைவியு முமது சகோதரருடைய வில்லாளும் வரவேண்டுமென்றனர். வேந்துமுனிவர் தேவவிரதா! நீயந்தப்புரஞ்சென்றெல்லாரையு மழைத்துவாவென, அங்ஙனமே யுடன்கொடுவந்தான். வந்தவர்களோடு ஜனகர்முதலாயோருஞ் சக்கரவர்த்தியாரை யெதிர்கொண் டழைத்துக் காதிகாதலருடைய ஆச்சிரமம்போந்தார்கள். ஆங்கிராமபிரான் இலட்சுமணன் பரதன் சத்துருக்கிநன் நால்வருக்குஞ் சீதாபிராட்டி, ஊர்மிளை, மாண்டவி, சுதகீர்த்தி நால்வரையு முறையேதந்து திருமணவிழாநடந்தது. யாவருங்கோசிகமுனிவருடைய வாச்சிரமத்தில் நின்று தத்தமுறைவிடஞ்சேர்ந்தார்கள். பின்னர் இராமபிரான் பிதிர்வாக்கிய பரிபாலனஞ்செய்யும்பொருட்டுத் தமது தேவியுடனும், தம்பியுடனும் அயோத்திமாநகரைவிட்டுப் புறப்பட்டுப்போந்து,தேவர்நாளுமாடுங் கோதாவிரிக்கொழுங்கரையில்பஞ்சவடியிலெழுந்தருளியிருந்தனர்.

நாலாமங்கம் முற்றிற்று.

ஸ்ரீராமதாசர்கள் திருவடிகளேசரணம்.

## ரு - ஆ ம ங் க ம்.

கொடுமையென்னுங் கொடிபடரக் கொழுகொம்பாகிய விராதன் போந்தான். போதரலும், தசரத சக்கரவர்த்தியாருடைய புதல்வனாகிய இராமன் நிசாசரரெல்லாரையு வீட்டுவேனென்று கங்கணம் பூண்டானென்று, ஜனஸ்தானத்துத் தலைவனாகியகரன் கேட்டுச் சினந்து, அத்தாசரதியைத்துணைந்து வதஞ்செய்துவருதியென, அங்ஙனமேவந்தேனென்று மொழிந்து பின்னர்த் தருக்கோடு முறுவலித்து, அரக்கருட் பெரியவன் இராவணன், அவனுக்குப் பெரியவன் கரன். அவனுக்குப் பெரியவன் இலவணன், அவனுக்குப் பெரியவன் நான். எனக்குப் பெரியவன் என்னையன்றி வேறொருவனுமிலன். எனது நட்பாளனான கரனுடைய நெஞ்சு நிறைவின்பொருட்டு, வின்னாணடங்காரஞ்செய்வதனாலேயேநிசிசரர்கட்குச்சாலவச்சங்கொடாநின்ற இராமனை நிலத்திராமைசெய்யவேண்டிய கடமை யெனக்கே. அவ்விராமபத்திரன் எங்குளன் ? காண்குறுவோமென்று, மாயையினொருருவினுருக்கொடு பன்னசாலையின் மருங்கெய்தி யாங்குக்காணுமே, கார்முகத்தையுங் கணையையுமேந்தி நான்குதிசையையும் விண்ணையு நோக்கிக்கொண்டு வாயி லோர்சந்தனத்தருவின்கீழ் நின்ற சுமித்திரை சீயத்தைக் கண்டு, நடுங்கி ஓ! மேருவெற்பெனவும், நரமடங்கலெனவு மூக்கத்தோடு நிற்கின்றான். இவனுக்கு மேவலருமுளரோ ? உளராகியிவ்வேவலா னெதிருற்றால், வலிப்பிணியாளனைப்போ லுதைத்துக்கொண் டுயிர்துறப்பரேயன்றி மற்றென்செய்வரென்றோதிச் சிறிதகன் றோர்மலையின்சென்னியைச் சார்ந்து ஆங்குப் பூத்துத் தழைந்த வோர் மகிழமரத்தினடியிற் பளிக்குப் பாறையின்மீது வீற்றிருந்த பிரானையும் பிராட்டியையு நோக்குற்றுக் கார்முகிலு மின்னலுமோவெனவையுற்றுச் சிறிதண்மியல்லரல்லர். தாசரதியுஞ் சானகியும் விலங்கலின்வளங்களைப் நோக்காநின்றனரென்றுநோக்குற்று, ஓ! ஓ! இவ்விருவருடைய பேரெழிலை யென்சொல்கேன்.

கொலைபுரிவான் றுணிந்தவெனதுள்ளமு மிவனைக்கண்டிளகு
கின்றதே. இவ்விராமனுஞ் சீதையுந் தோன்றினமையால்
வீரமுமோர்வீரம்பெற்றது; அழகுமோ ரழகுபெற்றதெனலாம்.
இன்னோர்களை நோக்கிநோக்கிவிழிகள் புதுக்களி கொள்கின்ற
னவாயினும், நமது மரபினருள்ளமுவக்கும்பொருட் டிவ்விரா
மனைக் கொல்லவேண்டும். நேர்நின்று போர்பொருதுகாதுத
ற்கெளியனல்லன். நா மவ்விராமபத்திரனைப்போலப் படிவங்
கொண்டு, சீதை தனிப்படுங்காலை யவள்பாற்சென்று, வனத்
தினெழிலைக் காட்டுவதுபோலச் சிறிது சேய்மையிற் கொடு
போய்த் தோளிற் பொறுத்துக்கொண்டு செல்வோமேற் றசர
தி ஜானகியைக் காணப் பெறுமலுள்ளங்கவன்றுவிடுப்பன். அ
வன்றுஞ்சினமைகண் டிளையவனுந் தரியான். அதுபோழ்து
கரன் கருத்துமுற்றும். நாமுஞ்சீதையோடின்பநுகர்ந்து வா
ழலாமெனத் தன்னுண்மையுணர்வை மேற்கொடு சூழ்ந்துபொ
ருக்கெனப்பறந்து, பொருப்பைநீங்கிவந்து குயிலுருவந் தவிர்
ந்து சுற்றுநோக்கி யிங்கட்சடாயுவைக் காணோம். அவன் த
னது தமையன் சம்பாதியை யிறைஞ்சுவான் சென்றிருப்ப
னென்றுகொண்டு, ஓ! ஓ! ஆங்குப்போதருகின்றவள்யாவள்?
இலங்காபுரியினின்று வருகின்றசூர்ப்பநகைபோலத் தோன்று
கின்றனள். இராவணனுடைய பெருநலத்தையவளைவினவுவோ
மென் றோர்தருவின்கீழ் நின்றான். சுழல்பசுங்கட் கழுதுகட்
கெல்லாமீன்ற நற்றாயாகிய சூர்ப்பநகை வந்தாள். வந்து;
ஆ! ஆ! நாம்மயிலின்வடிவுபெற்று இராமனையுஞ் சீதையை
யும் நனிதவவுயர்ந்த வடுக்கலின்கொடுமுடியிற் காண்டல் செ
ய்தோமே. அவ்விருவரைப்போ லெழிலுடையார் திரிலோக
த்திலுமுளரோ? சீதாராமரை யிரதியு மன்மதனும் பார்ப்ப
ரேல் தங்களைத் தாங்களே யெள்ளுவரோ? பிறரைக் காண
வெட்குவரோ? அல்லது அன்னவர்களைப்போலக் கட்டழகு
பெறத்தவஞ்செய்வரோ? சானகியினுடைய பேரெழிலைக்
கண்டன்றே நமது தமையன் அவளைத் தூக்கிக்கொணரும்ப
டி நம்மையிரந்து கேட்டனன். இராமன் வடிவழகி லீடுபட்டு,

மீண்டும்பெயராத கண்ணையு நெஞ்சையும் விட்டு, நாமாத்திரஞ் சென்று செய்வதெவன்! சீதைபோல்கின்ற திருவுருக்கொண் டிராமபத்திரனைக் கிட்டிவனத்தினூடழைத்துக் கொடுபோய் முயங்கிக் களிப்போமென்று விலகிச் சென்றனள். பெருமரப்பராரையின் சார் நின்ற விராதன் அடிசூர்ப்பநகை! க்ஷேமமாவென, ஆ, விராதனே! க்ஷேமந்தானென்றனள், விராதன சூர்ப்பநகாய்! நமது மன்னர்பிரான் க்ஷேமமாவென, அரக்கி தெருமரலின்றியிருப்பின் க்ஷேமந்தானென்றனள். விராதன் மூவுலகத் தலைவனுக்கு மறுக்கம் யாதென, இராவணனுக் கிளையாள் விராதா! தயரதன் புதல்வன் அரக்கர் மரபை வேரறுக்கின்றனெனெனச் சூளுறவு செய்தானென இலங்கேசன் கேள்வியுற்று மந்திரிகளோடாராய்ந்து இராசவனைச் சவட்டுதலியற்றுமாறு கரனுக்கு விளம்ப அகம்பனை விடுத்தனனென்றனள். விராதன் இராவணனுடைய வாளையை நிரப்பும் பொருட்டன்றோ? கரன் நம்மைக்கூய் முகமனுரைத்திராமனைக்கோறியென்றானென்று கருதுற்றுச் சூர்ப்பநகா யின்னம் செய்தி வேறுளதேற் சொல்லென, இராவணன்தங்கை விராதா! ஓர் வியப்புச்செய்தி பகர்கின்றேன் கேள். மிதிலாதேசத் திறைவராகிய ஜனகரென்றொருவருளரெனலும், விராதன் ஓ! ஓ! நமக்கு முந்தியே சீதையையிராவணன் அவாவுற்றிருக்கின்றனன்போலும். பின்னு மிவண்மொழிவதைக் கேட்போமெனக் கருதி, அடி பெண்ணே! சனகரை நானறிவேன்; மேல்சொல்லென்றான். அப்பெண் பேய்விராதா! சானகி தாசரதியையே நாயகனாக வரிக்கின்றனளென், இலங்கேசன்கேள்வியுற் றவ்விராமனைப்போல வுருத்தாங்கி, சனகர்பாற்சென்றான். அவ்வேலை இராகவனும் விசுவாமித்திரனுட னவட்போதந்தான். ஜனகரிருவரையும் நோக்கி யையுறவுகொண்டு சைவதனுசைக் குனிக்குமாற்ற லுடையானே, சீதை மணமகனென்றனர். அவ்விராகவனக் கார்முகத்தைவணக்கியகைத்துச் சானகியைமணந்தான். இராவணன் ஈத்துவக்குமின்பமறியானையிரந்த வறிஞனைப்போலப்

புலர்ந்து மீண்டிலங்கைபுகுந் தமைச்சராகிய மாலியவான், மகோதரன்முதலாயோருடனுராய்ந்து, பூசனைக்குரிய சைவக் கார்முகத்தை யிராமனெசித்தானென்று சினந்தலைக்கொளீஇ த் தன்னண்பனுகிய பரசுராமனுக்குக் கூறினுன். அம்ம ழுவாளி செவியேற்றுமூவரணெரித்த சிவசாபமோ ரரசர்மரபு ச்சேயினுன் முறிந்ததாவென்று வெகுண்டானெனலும், விரா தன், அடி சூர்ப்பநகை பரசுராமன் க்ஷத்திரியரைக் கொல்வதி லுள்ளக்கிளர்ச்சியுடையா னுகலாற் றசக்கிரீவனவனைத் தூண் டினுன்போலுமென்றனன். சூர்ப்பநகை விராதா! இன்னங் கேட்டி, காதிகாதலனுடைய பன்னசாலையிலிருந்து தயரத னுதியர் அயோத்திக் கேகுமிடைவழியில் அப்பரசுராமன் புகுந்து இராமனைமறித்துக்கொண்டு, வைணவதனுசைவா ங்கென்றுவிண்ணேறெனவுரப்பியீந்தனன். கோசலைமைந்தன க்கார்முகத்தை வாங்கிவணக்கிக் கணைதொடுத்துப் பரசுராமா! இவ்வம்பு பிழைப்பதன்று; இலக்கம் யாதென, உலகமும் மையுமாடல்கொண்ட கார்த்தவீரியார்ச்சுனனைக் கொலையிய ற்றிய வம்மழுவாளி கைகால்கள் விதிர்விதிர்த்து இராமபத் திரா! நினது பகழிக்குக்குறி யெனுதுதவத்தைத் தந்தேனெ ன்று சரணஞ்செய்து பாறினுன்; இலங்காதிபதியதனைக் கே ள்வியுற்று மன்னர்குலக் கூற்றுவனுகிய பரசுராமன் தயரத ராமனுக்குப் பிறக்கிட்டோடினுனே. அவன்மூத்தமையானு யிர்மேற்பற்றுடையானு யோடினுன்போலும். நன்றுநன்று விடுவேனேவென்று மயனையு மாரீசனையும் வித்யுஜ்ஜிஹ்வனை யுங் கூய்ப் பெரியமாயாவிகளாகிய நீவிர் மூவருமின்னே அயோத்திசென்று, மந்தரை, கைகேசி, தசரதனுகிய அம்மூ வர்கண்ணும்புக்கு, இராமன்பான் முனிவுபெறச்செய்து வெ ங்கான்மேவப்புரிந்து மீளுமினென, அம்மூவரும் விமலையுற் று அவ்வாறே புரிந்தனர். கூனியுங் கைகேசியுந் தசரதனு மிராக்கத ஆவேசங்கொண்டு மாறியவுள்ளத்தராயினர். பின் பு கூனி சூழ்ச்சிக்குட்பட்ட கைகேசியினது நெடுமொழிக்கு ட் சிமிழ்ப்புண்ட தசரதன் தன் னரும்பெருங்காதலனையீரே

ழ்யாண்டுப்புறவத்தூடுறைந்துவருதியென்று பணித்தனன். இராகவனுந் தந்தைசொற் றலைமேற்கொண்டு, தையலுடனுந் தம்பியுடனுந் தேவர் பராயிறைஞ்சுஞ் சித்திரகூடஞ்சார்ந்து, சில்பகலிருந்தனன். பின்னர் இராக்கதவாவேசநீங்கித் தயரதன் பெறலரும்புதல்வனைப் பிரிவாற்றாமையினால் விண்ணேறினன். இராமன் தந்தை துஞ்சினமையைத் தன்னைமீட்டுங்கொடுபோகப்போந்த பரதன்மொழியக் கேட்டு நீர்க்கடனாற்றிப் பரதா! ஈரேழாண்டுகானுறையப்பணித்தயான் நாட்டிலுறையேனெனலும், தாளிணையைப்பற்றிய அப்பரதனுக்கு மராடிகளைக் கொடுத்தருளித் தண்டகாரணியமுற் றாங்கிரந்த முனிவர்கட்கு அரக்கரைவேரறுத்தும்மைப்புரக்கின்றேனென் றபயமருளியிவணிருக்கின்றனனென்றனள். விராதனதைக்கேட்டுச் சூர்ப்பநகை நம்வேந்த னியற்றுவதெல்லா முறைவழுவே. தன்னகரத்தின்பநுகர்ச்சியிற்கிடந்த இராமனடவியி லுறைவானிங்நடலையேன் செய்தான்? வஞ்சமும் பொய்யும் விரவாதசெய்கையவன்பாலுளதோ? நல்லது, நீயெங்ஙனம் வந்தனையெனச் சூர்ப்பநகை சானகியைக் கவர்ந்துபோதரும்படி யிராவணனாற் பணிக்கப்பட்டுவந்தேனென்றனள். விராத னம்மொழியைச் செவியேற்றங்ஙனமா? சீதையை விராதனன்றோ கரந்தெடுப்ப முயல்கின்றனனென நெஞ்சினு ணகைபுரிந்து, சூர்ப்பநகை கேட்டீ. அச்செயனின்னான்முற்றாதெனச் சூர்ப்பநகை யதற்கோ நான் வந்தேன்; இராமனோடு முய்ங்க வன்றோவென்று விண்ணையண்ணாந்து நோக்கிப் புன்முறுவல்செய்து ஆமாம், சீதையைக் கவர்தலெனதாற்றலுக் கியல்வதன்று, இலங்கை சாருகின்றேனென்றாள். விராதன் நாமுயன்ற காரியத்துக்கிப்பெண்கழுதையா லேற்பட்ட விடையூறிடையூறுற்றதென வுளத்தினுளுவந்து ஓ சூர்ப்பநகை காலம்வாளாபாணிக்கின்றது. இலங்கை சாரலாமென்றனன். சூர்ப்பநகை ஓ விராத! நீ யாவதுகருதியிவணுற்றாயென, விராதன் அடி பெண்ணே! இராமனைக்கோறல்செய்வான் கரனதுவேண்டுகோளாற் போந்தேனென்றனன். சூர்ப்பநகை யாங்கது

கேட்டு ஆ! இப்பாவி நமதுயிரினுஞ்சிறந்த நாயகனை யுயிர்கவர்வான் வந்திருக்கின்றனன். அச்சோ! நமதெண்ணம் பயன்பாடுற்றிலதென்றனுங்கி விராதா! இராகவனை நீகொல்குதியோ? என வினயினள். விராதன் சானகியை யபகரிப்ப முயன்றிருக்கின்ற நாம் வாளாபொய்ம்மை கூறுவானேனெனக் கொடு சூர்ப்பநகை! இராமனைச் சவட்டுதல்செய்யவெனக் கொல்லாதென்று கரனுக்கு விளம்ப நானும்போகின்றேனென்றான். சூர்ப்பநகை இக்குணுங்கனிவணின் றெழியினிராமனேடுகூடும் விரகுபுரியலியையுமெனக் கருதி விராதா! நாஞ்செல்லுது மென்றனள், விராதன் நன்றென்றவளோடேகலுற்றான். பின்னர் விண்டொட நிவந்த வெற்பின்குவட்டில்வீற்றிருந்த எம்பெருமானர் எம்பெருமாட்டியாரைநோக்கி அன்னமே! நின்னைக்காதலித்துப் பண்டைஞான்று பகவான் விசுவாமித்திரர் பகர்ந்தவாறெல்லாம் புரிந்தேன். மாயாசீதைபெருந்தழலிற் புகுதலும் யானுமப்பேரனலிற் குப்புறத்துணிந்தேன். மேருவெற்போடொத்தசைவதனுசை முறித்தேன். நின்னைப் பெறுபாக்கியானியற்றிய முயற்சியெல்லாவற்றையுமிதுபோது கருதாநின்றேன். கருங்குயில்களின தினிய தீங்குரலைக்கேட்டு மறுகுகின்ற வெனதுசெவி குளிர்ப்பெய்தும்வண்ணம் நீசின்மொழிமொழிதியெனப் பிராட்டியார்திருமுகங்கோட்டிப் புன்னகைகொண் டொன்றுமுரையாதிருந்தனர். நம்மாளுடை வள்ளலார் மாசிகந்தமுழுமதி முகத்தாய்! எற்பிரிவாற்றமையினுற்றந்தையா ருயிர்நீத்த வின்னலையும், அன்னையைப் பிரிந்த விடும்பையையும், பரதனென்னுற் சடைதாங்கித்தவஞ்செய்தலானெஞ்சிற் குடிபுக்கவலக்கணையு நின் முகனைநோக்கியன்றோ தணிகின்றேன். நீ பவளவள்ளம்போன்ற வாய்திறவாயேல் நானென் செய்குவேனெனத் திருவுளங் கலங்கிக் கூறியருளுதலும், பேரருட்படிவமாகிய வெம்பெருமாட்டியார் பொருக்கெனவெழுந்தருளித் தழுவிக்கொடு எம்முடையாரே! வருந்தற்க. தமியனேனைத் திருமணம்புரியத் தாம் திருவிளையாட்டாகச் செய்தருளிய வற்புதச் செயல்களை யுன்

ணியுன்னி யிறும்பூதெய்தி வேறேதேனுந் தோன்றுதிருந் தேனெனக் கொஞ்சிக் கிளந்தருளினர். தாரகப்பரமர் ஜானகியாரைத் திருமார்புறத் தழுவி முத்தந்தந்து திருமுகத்தை மறைத்த கார்க் குழலையொதுக்கிக் கன்னத்தோடு கன்னஞ்சேர்த்துத் தமது மடியின்மீ தெழுந்தருளச் செய்து தேன்மொழி! மகரயாழ்போல வறுகால்களிசைமிழற்றுகின்றன. சிகாவளங்களகவாநின்றன. நின்மொழிபோலக் கிள்ளைகள் பேசுகின்றன நோக்காய். வானநாடியர்போந்து பெரியவப்பளிக்குப்றையைத் தெளிநீர்க்குளனெனக் கருதுபு புனல்குடைவான் சென் றுதகத்தைக் காணுதுட்கி மோவாயிற்கைகொடுத்துமீள்கின்றனர் காணுயென்றருளிச்செய்தனர். மிதிலைநாடியார் சுவாமி! வெயிலியங்காவண்ணம் பல்வகை மரனடர்ந்தும், நானுவிதப் பூங்கொடிகண்மல்கியும், மலர்ப்புதர்கள் கழுமியும் முண்டகப்பூம்பொய்கைகண் முற்றும் பொலிகின்ற விவ்வனத்தைத் தாம் போரவுகந்தருளுகின்றீர் போலுமென்றனர். அகாரவாச்சியர் பெண்ணமுதே! அணிமிக்க பூங்காவையவாவாதாருமுளரோ? நினது சாயலைப்பெற்ற மஞ்ஞையையும், நடையைப்பெற்ற வெகினத்தையும் தடங்கொங்கையை யொத்த மத்தகத்தையுடைய களிற்றையும், மருங்குலை நிகர்த்த பூங்கொடியையும், வதனத்தைமானும் வனசத்தையுங் கொண்டு விளங்குதலால் நின்னை வேட்பதுபோலவே யிவ்வனத்தையும் வேட்கின்றேனென மொழிந்தருளினர். மைதிலியாரத் திருமொழியைத் திருச்செவிகுளிரவேற்று நமது நாதர் வேறு திருவுளங்கொண்டு நா முண்மகிழுமாறு மாற்றம் பகர்ந்தருளுகின்றனர். நாம் வேறு மொழி புகல்வோமெனத் திருவுளத்தெண்ணியருளி இறைவரோ! வெருவரத்தக்கவாயும், வட்டவடிவினவாயுமுள்ள விழிகளையுடைய பரந்த முகத்தையும், இராக்கதிர்போல விளர்த்தமேனியையுங்கொண் டாண்டு விளையாடுகின்ற அவைகளென்னை? உடுபதித் தோற்றங்கண்ட பாற்கடலின் வெண்டிரைகள்போல வெளுத்து நீண்ட வாலதியுடையனவாய் விளையாடுகின்ற இவைகளென்னை?

எனலும், சாட்குணப்பரமர் துடியிடை! அவைகள் சியக்குருளைகள். இவைகள் கவரிமான்களென்றனர். மிதிலைநாடியார் எம்முடையீர்! மரக்கொம்பர்களில் தேனிறால்க ளினியவா யிருக்கின்றனவென, இராகவபிரானுர் ஜனகர்குலக்கொடியே! நினதிதழ்த்தேனினுமத்தேறலினிதாமோ? நினது கொவ்வை யதரத்தமுதைப் பருக விப்போதவாவுகின்றேனென்றனர். சானகியார் அம்மொழியைச் செவியுற்று நாணமுற்று நந் நாயகர் கலவியை விரும்பி மெல்லமெல்ல இனியன கழறுகின்றனர். நாம் மறுமாற்றமொன்றும் புகலாதிருப்போமெனத் தலையை வணக்கியிருந்தனர். இரகுநாதர் நமதுமொழியைக்கேட்டுச் சீதையின்பமுற்றுக் கச்சின்பூட்டுநெகிழத்தடிக்கின்றனள். கடைக்கண்ணுல் நம்மை நோக்குகின்றனள். தனது தலையை வணக்கி நமதுள்ளத்தை வணக்குகின்றனள், நாமின்னமற்றென்றைப் புகல்வோமென்று திருவுளத்துக்கொடு சீதை! நின்தாள்நிலனினடக்கின்றமையால் வையமகள் பூரித்துப் புளகெழுந்தாளெனப் பசும்புல் வளர்ந்திருக்கின்றனவென்றனர். விதேகைநாடியார் ஆ! ஆ! திருமன்றல் நிகழ்வதற்குமுன் சொப்பனத்தில் நம்மோடு கொஞ்சிக்குலாவி யுரையாடியதுபோலவே யிப்போது மிவர்பேசுகின்றனரென்று திருவுளங்கொண்டு, எல்லாம் வல்லீர்! கோதாவிரியி னிருகொழுங்கரையின்பாற் பூத்துள்ள முளரிமலர்களிலுறையாநின்ற வோதிமப்பறவைக ளொன்றனோடொன்று கூடுவதையும், குறிப்பொலிசெய்வதையும் பாருமென, இரகுநாயகர் ஆமாம். அவ்வஞ்சங்களுடைய குரலொலி நினது காற்சிலம்பினொலியையும், நுண்ணுசுப்பின் தகட்டணியிற் குஞ்சம்போலத்தூங்குஞ் சதங்கையினோசையையு மொத்திருக்கின்றதென்றருளினர். அகலகில்லேனிறையுமென்றுறையும் அருட்படிவவன்னையார் அக்கிளவியைக்கேட்டுங் கேளாதவர்போலச் சுவாமீ! தேவர் வனஞ்செல்லச்சக்கரவர்த்தியார்பக்கல் விடைபெற்றுவந்தகாலைத் தொடர்ந்த தமியேனை முனிந்தருளினீரே. உம்மைப் பிரியின், பரவைநீரைநீத்த மீன்போலவா

வேனல்லேனோ? யான். கானங்களில் அரக்கருழல்வர். அத னைக்கருத்தின்மறவாதுவைத்துச் சென்றுவருதியென்று தங்க ளம்மனையார் தமியேனுக்கு வற்புறுத்தியிருப்பவுஞ் சைவச்சி லைமுறித்ததேவருடைய தோள்வலியைக்கருதியன்றோ! அரக் கருறையு மிப்பழுவத்தில் வெருவுறாது விளையாடுகின்றேனெ ன்றனர். அவ்வேலை இராகவபிரானார் செய்மையிற் பாராவி டையிற் புலியதளையுடுத்துக்கையின்கண் மூவிலைவேலைப்பற்றி வெற்பகத்திப்பொதும்பரிற்செல்பவன்யாவன்! ஓரரக்கன்போ லாம். இளையவன் கண்ணுக்குப் புலப்படவில்லான்போலும். சீ தா!நீ நோக்காயெனப்பணித்தருளச் சானகியார் இறையவரே! அது மலையகத்திவனமன்று; கோங்காரண்ணியம்,அதனூடொ ரு பெண்ணல்லளோ செல்கின்றாளென்றனர். அரகோதண்ட கண்டகர் பெண்ணருங்கலமே! நீ யெங்ஙனேபார்த்தாய். இ வ்வகத்தியடவியையன்றோ யான்காட்டினேனெனத்திருக்கர த்திற் சுட்டியருள,எம்மை யாளுடைய நாயகியார் திருக்கண் சார்த்தி ஆமாமென்று தாநோக்கிய கோங்குவனத்தையுங் காட்டினார். தேவதேவர்தலைவ ரதைக்கண்ணுற் றிரண்டு மதிப்பிளவுகளைப்பதித்த முழைஞ்சையொத்த பேழ்வாயை யும், செம்புண்ணைப்போலச் சேந்தழன்றெரியும் விழியையும் செந்தீயையொத்த செவ்வோதியையும், பருத்து நீண்டு நா லுஞ் சுரைக்காயையொத்த முலைகளையுமுடைய வப்பெண் பேய் யாவளெனவெண்ணுங்காலை, கரீரமரச் செறிவினு ளுழைந்த விராதன் இரகுநாதருடைய திருப்படிவந்தாங்கி க்கொடு நின்றான். தாசரதியா ரவனைக் கண்ணுற்றருளி ஜா னகி! என்னைப்போல வந்நிசிசரன் உருவந்தரித்து நின்றான் நோக்காயென, மைதிலியார் சுவாமீ!நறுஞாழற்காவினுட் புக் க அவ்வரக்கியு மென்னைப்போ லுருக்கொண்டு நிற்கின்றாள் பார்த்தருளுமென்றனர். புருடோத்தமர் கண்டருளி நம்மிருவ ருடைய வுருவங்களை யவ்விருவருங்கொள்ள வேதுவென்ன வெனப் பிராட்டியார் எல்லாமுணரவல்லீரோ! செய்குன்று போலப் பொலிகின்ற அச்சிகரத்தின்மேலிவர்ந்தன்றோரிருவ

ரது செயலையுங் கண்ணுறுவோமென, இராமபத்திரர் ஜானகி! அதன்மேலேறுவாயேல் நின தனிச்சப்போதினுமெல்லிய பாதங்கன்றும். ஓர் காவதவழிவரைச் சுற்றிலு நன்ருய்த் தெரிகின்றது; இவணிருந்தே கண்ணுறுவோமென்றருளிச் செய்தனர். அக்காலைச் சுமித்திரை திருமதலையார் சுற்றுநோக்கி, அந்தோ! யாம்நோக்கிய வப்போழ்தே மூவிலைவேல் கரங்கொண்டுள்ள நிருதனை முருக்காது தாழ்த்தமையால் நம்மைக்கண்ணுற் றச்சுற்ருேடிப்போய்விட்டான்; நன்றுநன்று, அவனை நேடுவோமெனச் சிறிதகன்றுவேடம்பூண்டிருந்த விராதனைக்கண்டு தனது தமையனெனக்கருதுற்று, அவ்வரக்கர் குலத்துளான் நம்மைக் கண்ணுறீஇக் கரந்தவனல்லன். கொடுமரத்தையுங் கூர்ங்கோலையுங்கொண் டவனைத் தேடாநின்ற நம தச்சனைக்காணலுற்று, அச்சம்பூண்டோடிவிட்டானெனத் திருவுளங்கொண்டு பிரானும் பிராட்டியாரும் விலங்கலின்மே லன்ருேவிருந்தனர். மிதிலை நாடியாளைத் தனியேவிட்டண்ணன்மாத்திர மிங்குவருவாரோவென்றுவளையைப்பார்த் தாங்கிருவரையுநோக்கி வாழி ஜானகி, வாழி இராகவனென்று சேவித்து, இஃதென்னை? இறும்பூதுடைத்து. யாவனோ வொருதுராத்துமன் பரமாத்துமனுடைய திருவுருப்பெற் றிவண்வந்திருக்கின்ருன். கொடிகளடர்ந்த விம்மாங்கன் றினுழைக்கரந்திருந் திங்ஙனே நிகழ்வதைக் காண்குறுவே மென்றிருந்தனர். அருளே திருவுருவாகிய நங்களன்னையாரது வடிவுபோல வடிவுபெற்ற சூர்ப்பநகை ஞாழற் காவைநீத்துப் புறம்போந்து விராதனைக் காணலுற்றுத் தாசரதி வேட்டைமேல் வேட்கையினுற்றன்னுயிரன்ன சீதையைவிட்டுத்தனியேயீங்கணுலவுகின்றனன். "காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்" என்றபடி, நமதுள்ளம் அவனதுள்ளத்தோடு கைகோப்ப விதுவேநல்லற்றமெனவெண்ணித் தனது மருங்கெனத்துவளும் பூங்கொடியில் மலர்கொய்வாள்போலப் பாவனைசெய்து நின்றனள். விராத னவளைநோக்குற் றலர்மேனசையாற் சீதை யிராமனைவிட்டுப் பிரிந்து தனியே போந்திருக்கி

ன்றனள். தேடிப்போனமருந்து காலிற் றட்டுப்பட்டதுபோல நங் கண்முகப்பேபோதந்தாள். ஓ! ஓ! மேனியினெளிப் பிழம்பினுற் செம்பொன்னின் மயமான இவளதுறுப்புகளைப் பார்க்கவொண்ணுமே கண்கள் வழுக்குறுகின்றன. வாலுகப் பரப்புக்குக்கீழா விரிதலையி னிளந்தண்டுகளைத் தலைகீழா நாட்டினுற்போல விவளுடைய குறங்குகள் விளங்குகின்றன. அமிழ்தநிறை பொன்னங்குடங்களை யவாவிக் கரியசிற்றெறும் பணியாக வூர்வதுபோலத் தடங்கொங்கைகளும், மயிரொழுக் கும்பொலிகின்றன. இராமன் போதருமுன்னரே இவளைக் கவர்ந்து செல்லவேண்டுமெனவுன்னி யருகே யண்மிச் சனகர் குலக்கொடியே! நினது திருமேனியினெளியைப் போல நிறமுறீஇ மலராநிற்குஞ் சண்பகவலரை விரும்புவாயேல் நினது விழைச்சின்றிறத்துத் தொண்டனேனுகிய யான் கொய்து தருகின்றேன், நீ கைவருந்தலெனச் சூர்ப்பநகை, இராமன் நம்மைச் சீதையென்றேதேறி மாற்றம் பகர்கின்றனன். அவனுடைய மிடற்றினின் றெழுகின்ற வினிய தீங்கிளவிக ளமுதைச் செவிகுளிரப்பெய்தாற்போ லின்புவிளைக்கின்றன. கணையுங்கார்முகமுங் கரத்திலுடையானென்று சிறிதுமஞ்சாது தூக்கிக்கொண்டு போகவேண்டுமென்று கருதுற்று நாயகரோ! பித்தியினறுமலரி லெனக்குவிருப்பந்தான். ஆங்குச்சேய்மையிற் றோன்றுகின்ற வுய்யானத்தில் நறுந்துணர்கள் பூத்திருக்கின்றனபோற்றோன்றுகின்றன; ஆங்கட் சென்று கொய்வோமென வினிதுமிழற்றினள். விராதன் ஓ! ஓ! இச்சீதை நட்புக்குறிப்போடு நாயகரேயென விளித்தவமுதமொழியைக் கேட்டு நமதுள்ளமென்னு மரிணங்காமனென்னும் வேட்டுவன்கையி லகப்பட்டது. சானகிதானே நம்மைச் சேய்மையிற்கொண்டுபோகமுயல்வது நாஞ்செய்த வறப்பயனெனக் கருதி மைதிலீ! அக்கொழுமலர்க்காவின்கணேகுவோம், வருதியென்றழைத்துச் சென்றான். தேமாவின் சிறுகன்றின்பாற்பதிவிருந்த இளையபெருமாள், காதில் மணிக்குழையசைய, வாரினுளடங்காமே கொங்

கைகுலுங்க, அக்கொம்மையைப் பொறுக்காது நுண்ணுசுப்பு நுணங்க, சிறு காலாற் பொன்னங்கோடிகம் விலக,வாண் முகத்திற்றரளத்தையொத்து வியர்வரும்ப நடந்த சூர்ப்பநகையை நோக்கியடுக்கலையுங்காணுப் பத்தராவியராகிய நமதையைப்போலவும், நம்மன்னையாரைப்போலவு மோரரக்கனு மரக்கியு முருக்கொண்டுபோகின்றார். நாஞ் சிறிது சேய்மைப்பின்றொடர்ந்து நோக்குவோமென வெழுந்து சென்றருளினர். அவ்வேலைப்பொருப்பின்குவட்டி னெழுந்தருளியிருந்த ஜானகிபிராட்டியார், சுவாமீ! நம்மிருவரையொக்க வுருப்பெற்றுச் செல்லாநின்ற அரக்கனையு மரக்கியையு நாமெனக்கருதியோ தேவர் திருத்தம்பியார் தொடர்ந்துசெல்லுகின்றனரெனக் கடாவியருளத் தாசரதியார் சீதா! இலட்சுமணன், அரக்கனரக்கியென் றுணர்ந்தேமெல்லென ஆங்கவர் கட்புலனுக்கு மறைந்து தோன்றுவண்ணஞ் செல்கின்றானெனச் செப்பியருளினர். பின்னர் விராதன், இம்மைதிலியினுடைய பொல நூபுரவொலியும், மருங்குலிற் பூண்ட வாடகத்தகட்டணியிற் றூங்குமௌவலின்சிறுமுகையனைய சதங்கையோசையு நமக்குப் பெருவேட்கையைத்தருகின்றன. அவளுடையபுடைபரந்தெழுந்தண்ணாந்துவிம்மிய விருபெருங் குயங்களினெருக்கி னுழைவுற்ற நமது விழிகளை வாங்கக்கூடவில்லை ; நல்லது. இனிக் காலநீட்டியாமலிப்பெண்ணரசைக்கொண் டேகவேண்டுமெனக் கொடு, சுந்தரீ? நாஞ்சேணின்வந்துவிட்டோம் ; எனது பூங்கரந்தொடினுஞ் சிவந்து காட்டு நினது சீறடி வருந்த விலையோ ? எவட்செல்கின்றனை ? நினது நோக்கமென்னையோவெனச் சூர்ப்பநகை யொருவரும் வழங்குதலில்லாவாங்கட்சென் றுமதுகண்ணாடியன்ன கடிமார்பைப் புல்லவேண்டுமென்பதே யெனது கருத்தென்றுள்ளத்தினுட்சிரித்துத் தனது கருத்து முற்றுப்பெறுமெனப் பெருமகிழ்வுபூத்து என்னுசை நாயகரே! அப்பூந்தோட்டத்துக் கனித்தாய்வந்துவிட்டோமென நடந்தனள். விராதன், ஆயிரமாண்குயிலினுடைய கூவலினு மோர்பெண்கழுதையினுடைய கத்தல்

காதுக்கினிமைசெய்யுமென்பர். இவளோ பதினுயிரம் பெ ண்குயிலினு மினிதாய்ப் பேசுகின்றனள்; கற்பகவல்லிபோ ல நுடங்குகின்றனள். நம்மை நோக்காலும், புன்முறுவலாலு ம்,மஞ்ஞையன்ன சாயலாலும், அன்னமன்னநடையாலு மய க்குகின்றனள். நன்றுநன்றென்று, சானகீ ! நீ சொற்றபூங் காவையெய்திவிட்டோம், சம்பகப்போது சாலப்பூத்திருக்கி ன்றன; கொய்வோமென்றனன். தொடர்ந்துசென்றருளிய இ ளையகோளரியார் இந்நிருதன் தாசரதியாரதுருக்கொண்டு அந் நிருதியைப்பூமிஜாவெனத்தேறிக் கவருவான்முயல்கின்றனன் மேனிகழ்வதைநோக்குவோமென வாளாவிருந்தனர். சூர்ப்பந கை விராதனைநோக்கி யௌதாவிக்கினியாரே! இவ்வடவிய ரக்கர் குழுவுக்குறைவிடனுயிருக்கின்றது. நிருதரைவேரறக் கோறல் புரிவேனெனச் சூள் நீர்பூண்டிருக்கின்றமையின், நானச்சமொருசிறிதுமின்றி யுலாவுகின்றேனென விராதன், இராக்கதப்பூண்டின்றிச் செய்கின்றேனென்று வஞ்சினமறை ந்தவன் நானல்லேன். அச்சபதஞ்செய்த இராமனுடையவு யிர்த்துணையாகிய நின்னைக் களவுபுரிகின்றவனுனென்று நெஞ் சினுணைத்துப் பெண்மணியே! நான் மேற்கொண்ட நோ ன்பிலேயப்பாடுமுளதோ? சாது சனத்தை நலியுங் கரன்முத லாகிய நிருதர்குலத்தை யாசறக்களையேனுவென்றனன். இ ளையநம்பிகள் அதனைத் திருச்செவிசார்த்தியருளி யிருவருந் த னிமுதல்வராகிய தாசரதியைப்போலவுஞ் சானகிபிராட்டியா ைப்போலவு நன்கு வார்த்தையாடாநின்றனரெனப் பெரு வியப்பெய்தி, நமதத்தனையு மவர்தேவியாரையும் ஓரரக்க னு மோரரக்கியுங்கண்ணுற்றுக் காமுற் ெருருவனையொருவரி ன்னுென வுணராவண்ண மவ்விருவரைப்போலப் படிவங்கொ ண்டுவந்து,இவ ளவனையிரகுநாதனென்றே துணிந்து பெரிதுங் களிக்கின்ருள்.அவனு மவளைமைதிலியாளென்றே கொண்டு சா லவுவக்கின்ருன்; இனி இன்னோரிருவருடைய செயலையு நோ க்குறுவோமென்று குறிப்புற்றிருந்தருளினர். கரனை யானு யிர்மாய்க்குந் திறலில்லேனோவெனத் தருக்கோடு பெருமித

மா யுரைத்த விராதனது மொழியைக்கேட்ட சூர்ப்பநகை, அன்னே! இவர் கரனைக் காதுவரே னமதுமுன்னவனிரா வணனை நொய்திற் கோறல்புரிவரென விதிர்ப்புற்று, எனதுயிர்க்காதலரே! இராவணனுக்கு மேம்பட்ட வலியுடைய கரனை யெங்ஙனங்கொலையியற்ற வல்லீரென விராதன்,மாதரசி! பரசுராமனை முதுமறையந்தணனெனமுன்னி யுயிர்கவராது விடுத்தவெனக்குக் கரனை விண்ணேற்ற லோர்பொருளாமோவென்றனன். சூர்ப்பநகை ஆமாம், அது யான் கண்கூடாகத்தெருண்டதுதானே யென்றுரைத்து, அச்சோ! சீதையைப்போலுருவங்கொண்டும் இராமரின்ன நமது கரத்தைப் பற்றினரில்லை. பணைத்தெழுந்த பயோதரத்தை நெருங்கப்பிடிக்கலுற்றாரில்லை. இதழைவாலெயிற்றாலதுக்கிப்பருகினரில்லை; முத்தங்கொடுத்தாரில்லை, அங்கங்களோடங்கங்க ளொன்றத்த ழுவினரில்லையென்று வருந்திச் சினையால் நனையைப்பறிப்பவள்போலக் கலிங்கத்தினுடைய நீவிதளர்ந் துந்திச்சுழி புலப்படக் கச்சு மேலேறிக் குயங்களின் கீழ்ப்பாதிதோன்ற முலைகளைப்பொதிந்து பரந்திருந்த வுத்தரியஞ் சுருக்குண் டந்தணருடைய மார்புநூல்போலக் கிடக்க, இருகால்விரல்களை நிலனிலூன்றிக் கழுத்தையுயர்த்தி முகத்தையண்ணாந்து, இடக்கரத்தால் மரக்கொம்பரைப்பற்றி வாங்கி, நறுமலர்கொய்வாள்போலப் பாவனைசெய்தாள். விராதன், மயிலே! குயிலே! அன்னமே! சொன்னமே! எனதுகண்ணே! ஜனகர்பெண்ணே வருந்தாதி. நீ வயிறெக்கிப் பூப் பறிப்பதினால்வாரின் விளிம்பழுந்தி நகிலமுகம்வாடுகின்றனவே. நினதிருகரங்களுமிருகன்னத்திலு மழுந்தியிருத்தலால் வியர்வுண்டாகிப் பத்திரரேகை யழிகின்றனவேயெனச் சூர்ப்பநகை யதனைக்கேட்டு இவ்விராமன் றனதுமொழியினாற் றன்னோடு விழைச்சுப்புரிய நம்மை யேவுகின்றனன்போலாமென்று மனத்தினுளுவந்து கிளையைவிட் டம்மாற்றத்தைக்கேட்டதனால் நாணமுற்றவள்போல முகங்கோட்டிச் சிறிது சினத்தோடு கடைக்கணித்து மலர்களைக் கொய்தலைவிரும்பி நானுழப்பதை நீர் நோனாதிராயிற்பறி

த்துத் தாரீரென்றனள். விராதன் மைதிலீ! நினதேவலைப்புரி வதன்றி யெனக்குறுதிப்பொருள் வேறுமுளதோ. இவ்வடவி யிலுள்ள வலர்களையெல்லா மின்னே கொய்கின்றேனென்று மண்டினான். சூர்ப்பநகை விராதனைநோக்கி, எனதன்பரோ! கேண்மின். அந்நறுந்தார்களெல்லா மெனக்கு வேண்டா. உயர்ந்த இச்சண்பகத்தருவி னனிதவநிவந்த நீள்சினைகளினலர்ந்துள்ளபோதுகளை யெனது தோளின்மே லிவர்ந்துகொண்டு பறித்துத் தம்மினென, விராதன் சீதை நம்மேலேறின், தூக்கிக்கொண்டோட லெளிதென்றெண்ணிச் சானகீ! என்மீது நீயேறி நினக்குவேண்டு மலர்களைப்பறிப்பாயென்று குனிந்தனன். சூர்ப்பநகை இராமனைத்தூக்கிச் செல்லுதற்கு நல்ல விரகுகிடைத்ததென்றுவந்து பிராணநாயகரோ! தங்கள் மேலேறுவதினேதம் யாதெனநுவன் றுடல்வளைந்துநின்ற வவ்விராதனுடைய வெரிநிடைத் தன்கரங்களையூன்றித் தாவி யெருத்தினிடை யல்குலைப்பொருத்தி யருத்தியோடிருத்தலும் விராதன் நிமிர்ந்து தனதிருமொய்ம்புகளிற் றூங்காநின்றவவளுடைய கவான்களைக் கைகளாற் சிக்கெனப்பற்றிக்கொண்டு கடிமலர்களைக் காட்டுவான்போலச் சிறிதுபோ துலாவிமேற் செல்வான் முயறலுஞ் சூர்ப்பநகையு மலர்கொய்பவள்போலச் சற்றுப் பாவனையியற்றி விராதனைத் தன்னுடை யூருவினிடை யிடுக்கிக்கொண் டேகுவானுஞற்றினள். அன்னவிருவோருடைய முயற்சியுமொன்றனையொன் றெருங்கொத்திருந்த தன்மையினு ல்திவிளாவாயெழும்பினர். சூர்ப்பநகை தன்னையிடுக்கிக்கொண்டு மேற்செல்கின்றனளென்பதை விராதனோராது, அவ்விராதன் தன்னைப் பொறுத்தேகுகின்றனனென்பதைச் சூர்ப்பநகை யோராது தாமுதலிற் கருதிய வெண்ணம்போலவே கவர்ந்தேகுகின்றேமென விருவருங்களித்து விண்ணினெறியிற் றனைந்துபடர்குற்றனர். அவ்வேலைத் தென்கடல்சார்ந்து அத்தனுகிய சம்பாதியை வழிபாடுசெய்திறைஞ்சி மீண்ட ஜடாயு விராதனையுஞ் சூர்ப்பநகையையுங் காணலுற்று, ஆ! ஆ! இஃதென்னை! வியப்புடைத்தெனக் க

ருதி யாரடா நீ யெனது குழந்தை யிராமபிரானுடைய பொருநுக்கொண்டெனது மருகியை, கற்பினருங்கலத்தை, மங்கையர்க்கரசியைச் சுமவாநின்று செல்கின்றாய்; நில்லடா நில்லடாவென் றுருமெனவுரப்பினர். விராதன் ஓ! ஓ! இதென்ன? இடுக்க ணமக்கு நேர்ந்ததே. இப்போது மிகை செய்குதுமே லிச்சேவல்வன்கழுகுதுண்டத்தானம் மைத் துண்டங்காணுமென வச்சுற்றுச் சூர்ப்பநகையோடு படிமிசை யிழிந்தனன். சூர்ப்பநகை ஆ! ஆ! சீதையைக் கண்ணுற்ற வொருவன் அவளை முயங்கக்காமுற்று இராமனதுருக் கொண்டு, இராமனைக்கண்டு அவளை யணையவாசைகொண்டு சீதையினுடைய படிவங்கொண்ட நம்மைக் கண்ணுறீஇ யுண்மைச் சீதையெனவே யேற்றுச் சென்று, ஜடாயுவை நோக்குற்றுத் துண்ணென வச்சங்கொண்டான்போலும். மெய்ம்மையைத் தெருளுவோமெனக் கருதி நீ யாவன்? பொய்யுரையாதி, மெய்யுரையென, விராதன் ஓ! ஓ! இவள் சீதையல்லள். அப்பூவின் மெல்லிய சீதையாயி னம்மையும் பொறுத்து மாக நெறியிடை யேகவல்லளோ? அதனை முந்தியே யோராது தவிர்ந்தோமெனப் பீழை யெய்தி, இலங்கைக்குப் போகின்றேனெனச் சூர்ப்பநகை யிராமனைப் புல்லக்கருதிச் சீதைகோலமணிந்து, இராமவேடமேற்கொண்ட நம்பால் வந்திருப்பினுமிருக்கலாமென வெண்ணி நீ யாவள்? சூர்ப்பநகை போவெனக் கடாயினன். அச்சூர்ப்பநகை நீ விராதனோவென வினவ, அந்நிருதன் அன்னே! சுரைக்காய்போலத் தூங்குந் தோன்முலையையோ தூக்கிச் சுமந்து தொலைத்தோம். இன்று வைகறையில் யார்முகனில் விழித்தோம். விரைந்து பாறவேண்டுமென நெஞ்சுட்கொண்டனன். அக்காலை மறைவுற்றிருந்த விளைய பெருமாள் புன்சுமலியினுங் கடைப்பட்ட விராதனுஞ் சூர்ப்பநகையுமோ அவ்விருவருமென வண்மிப்போந்து விராதா! சுவாவே! பரமாத்துமனுடைய படிவத்தையொருவடா! துராத்துமனே! எனவகடுகுழப்ப மெய்தவரைபுரை நெஞ்சிற்குத்தலும், விராதன் அரிதரிதென்

று தனதுலம்பொருதோளிற்பொறுத்த சூர்ப்பநகையினுடைய பின்னலைப்பற்றிச் சென்னியை வணக்கிப் பிடரிலோர்கையும், ஊருவினூடோர்கையுங் கொடுத்துத் தூக்கித் தரையில் விட்டெற்றித் தனதியற்கைவடிவுகொண்டு கழுமுளருங்கைக்கொண்டு, அடே! சுமித்திரை புத்திரா! நீயென்னைவிட்டகலாயேல் யான் நின்னைக்கொடுமறலியின் பேழ்வாயிற் புகுத்தாதுவிடேனென்னும் வேலைப் பெரியவுடையார் குழந்தை இளையகோவே! விண்ணவர்க்கிடரிழைக்கும் விராதனையுஞ் சூர்ப்பநகையையும் விடாதை. அன்றே ரிருவருயிரையும் நீ வாங்குதியேற் கூற்றுவனின்னைப் பராவுவானென்றணித்து வந்தனர். மலைமேல் வீற்றிருந்த தேவதேவர்க்குத் தேவன் ஜானகீ பறவைவேந்தாகிய நமது பெரியார் வந்து, தகைத்தலுநிருதனு நிருதியும் வானிற்சேறலொழிந்து நிலத்துப் போந்து, நமதுருத்தவிர்ந்து தமதியற்கை யுருவத்தாராய் நிற்கின்றனர். இளையவன் விரைந்தவட்சென்று நிற்குந்திறத்தை நோக்குங்கால் அவர்களைக் கோறல்புரிந்தேவிடுவன். நமது சிற்றப்பருடைய வலகையுந் தம்பியினுடைய வலகையுநோக்குற்றுங்கவர்கள் வெருவுறுகின்றார்கள் பாராயென வருளிச்செய்தனர். மறுத்தும், இராகவன் ஜானகீ! அவ்வரக்கன் இலட்சுமணனுயிரையுண்ணுதியென்று கூரியகைக்கழுமுளை யெறிந்தான். அம்முக்கவட்டுப்படையை நமதிளையவ ேனுருவிசிகத்தினற் கண்டங்கண்டு, அவனதுவரைபுரையாகத்து விண்ணேறு வீழ்ந்தெனவோருதையுதைத்து, நிலனிற்றள்ளிப் பனைபோன்ற அவனது திணிதோள்களைத் துமித்துக் காதுதல்புரிந் தாங்கணுள்ள பெருங்குழியிற் பாதத்தாலுருட்டி யுய்த்துக் கொடிசெடிதழை முதலியவற்றாற் பொதிகின்றான் காணுயெனத்திருவாய்மலர்ந்தருளினர். பின்னர்ச்சூர்ப்பநகை அடேவிராதா! கரன்பணித்தமொழியைத் தலைமிசைக்கொடு வெற்றியுமெழிலு மொருசேரமிக்க இராமனைக்கொல்லவந்த நீ மான்குருளையினுற் புடையுண்டவயப்புலிபோல இலட்சுமணனுலடிபட்டாயே சீதையை விரும்பி இராமனுருக்கொண்ட

நீயப்பெண்ணரசி சீதையாங்குப் பொருப்பின்மே விராமனே டிருப்பதை நோக்காம லென்னைக்கிட்டிச்சுமந்து கெட்டாய். நானு நின்னை யிராமனென்றெண்ணுபுகெட்டேன். இராவ ணனு லேவப்பட்டுவந்த நான் சீதையைக் கவர்ந்துபோகாது வெறுங்கையொடேகுவனேலவ்விராவணனென்னை முனியும். எனக்கு நன்குமதிப்புந் தணக்கும், என்செய்கேன். நினக்கழு வேனே? எனக்கழுவேனே? என வாய்வெரீஇ யரற்றினுள். ஜடாயு குழந்தாய்! இலட்சுமணு! சூர்ப்பநகை புகன்றமாற்றங் கேட்டிலையோ? அவ்வரக்கி கைகடவாமுன், விராதனுக்கு நெ றித்துணையாச்செல்ல விடுத்தியெனச் சுமித்திராபுத்திரர் பெ ண்ணெனத் திருவுளமிரங்கிக் கார்முகத்தைவளைக்காது சுரிகை கைக்கொண்டனர். கிரிமேலெழுந்தருளியிருந்த இராமபத்திரர் மைதிலீ! இளையவன் அந்நிருதியினது செவ்வோதியைப்பற் றிப்பேழைபோன்ற பேரகட்டிலுதைத்துச் சுளகுபோன்ற செ வியையு மூக்கையுந் தோற்றுருத்தியெனத் தூங்காநின்ற மற் றையவிரண்டையுந் தடிந்துவிட்டான்பராய்.செங்குருதிபெய்யு முகிலென,அந்நிருதியாகத்திலெற்றிஅயனே,அரனே,குகனே யெனுமாற்றலமைந்த கரனே!மனித்தனை,அவன் மறனை, உர னைக்காணவாராயோ?தார்த்தானையோடார்த்தானைக்கிறையை யுந்தி, இகல்புரிந்தவலாரியைச் செருவிடை வலிதொலைத்துச் சிறையில்வைத்தவனே! பிதர்மகன் வேண்ட அன்னேனைவி டுத்தவனே! யான்பட்ட பழியைப் பாராயோ? மும்மையுல கெங்கு நினது தனிக்கோலூறின்றிச் செல்லாநிற்க, மனிச ன் தலையெடுத்துச் சிலையெடுத்துத் திரிவனேற் குறைவன்றே! கையிற்றழலெடுத்தானுடைய மலையெடுத்தபெருமலையே! எ ன்னைக் காணப்போதராயோவென் றேலமிட்டோடுகின்று ள் பாராயென்றுரைத்தருளித் தெனுது பரவைசென்று போத ந்த நம் பெரியவுடையாரைப் போற்றிசெயல்வேண்டும், இளை யவனைத்தழுவிக்கொளல்வேண்டும், போதுவாயெனப் பிராட் டியாரையுடன்கொண்டு விலங்கலைவிட்டு நிலனுற்றனர். இளை யபெருமாள் கழுகுக் கரசைநோக்கிப் பெரியவுடையாரோ! இர

நூநாதர் உயர்ந்தோங்குசிலம்பினின்று போதருகின்றனர். யாமுமெதிர்கொடு செல்லுதுமெனப் பெரியவுடையார் குழந்தாய்! வாராயென வெதிர்வந்தனர், இரகுநாயகர் எம்பெருமாட்டியாரை நோக்கி அன்னமே! எனது கரத்தைப்பற்றிக்கொள். இப்பயம்பைத் தாண்டிவருவாய். அந்நெருஞ்சின்முள்ளிற் சீறடியை வையாதி, அந்நீரொழுக்கு நின்மெல்லியகாலையிழுக்கும், இங்கேவாவெனத் திருவதனத்தைக் கடாட்சித்தருளிப் பெண்ணமுதே! நின்னுய்யசிறடியில் வெம்பரலுறுத்துவதினுன் மம்மருறுகின்ருய். முழுமதி வட்டத்தி லசும்புறு மமுதம்போல நின்வாண்முகத்தில் குறுவியர்வரும்புகின்றது. விசுபுபோழநிவந்த இம்மரத்தின் கொழுநிழலில் சிறிதுபோது தங்கியிருக்குதுமெனப் பிராட்டியார் குழந்தை யிலட்சுமணனை நாங்கடிதுசென்று நோக்கவேண்டுமென்று நாயகனைத் தொடர்ந்து நடந்தாச்சிரமம்வந்தருளினுர். ஆங்கணண்ணிய பெரியவுடையாரைக்காண்டல்செய்து, ஜானகீவல்லபர் பெரியாரே! இராமனிறைஞ்சாநின்றேனெனப் பறவைப்பெருமான் குழந்தாய்! நெடிதூழிவாழியவென்று மங்களாசாசனஞ்செய்தனர். சீதாபிராட்டியாரும் பெரியீர்!வணக்கமெனப் புள்ளரசர் மருகியே! நன்மகப்பேறுபெறுதியென்ருசிகூறினர். சுமித்திராபுத்திரர் வந்துபூமகளாரோடு புருடோத்தமனை வணங்க, நம்முத்தமரவ்விலக்குமணனைத்திருமார்புறத் தழீஇக்கொடு குழந்தாய்! இற்றைஞான்று நல்லவெற்றிகொண்டனை. இனிமேற் செறுநர் நேரின் யான்கோறல்புரிகின்றேனென்றருளிச்செய்தனர். இளையபெருமாள் எம்மையாளுடை நம்பியாரோ! இன்று நமக்கு வெற்றியுற்றபெற்றி சிற்றப்பனுராலென்றுரைத்தனர். பெரியவுடையார் இராமா! குழந்தையிலட்சுமணனுடைய வலியை நீ யெங்ஙனின்றுகண்டனை என,. எம்பெருமான் தந்தையீர்! யானுஞ் சீதையும் அடுக்கலின் மீமிசைநின்று நிகழ்ந்தவற்றை யெல்லாங் கண்ணுற்ருேமென வுரைத்தருளினர். பூவினைவெறுத்துச் சனகருடைய பொன்மனை புகுந்தருளிய பெரியபிராட்டியா ரவ்வரக்கனு மரக்கியு மின்னுரெனத் தமியேனுக்குத் தெரிதலில

ரென, பறவையேந்தலார் நோக்குற்றுப் பெண்ணினருங்கல மே! அவ்வரக்கனீங்கணுள்ள ஜனத்தானத்துறைபவன். அவனை விராதனென்பர். அரக்கி பதினாலாயிர மகாரதிகருக் கரசனாகிய கரனுக்கும், இருபதுகரனுக்குஞ் செல்வத்தங்கை. அன்னாளுக்குச் சூர்ப்பநகையென நாமமென்று விளம்பி, இராமா! கரன்சூர்ப்பநகையினுடைய மூக்கையும், முலையையும், காதையுங் கண்டு சினந்து நின்னோடு போர்பொர வோர் முகூர்த்த காலத்தில் வருவனென்றனர். அரகோதண்ட கண்டக ரம்மொழியைக் கேட்டருளிப் புன்முறுவல்பூத்து நான் வேண்டுவதுவேறென்னையெனப் பெரியவுடையார் மகிழ்ந்து குழந்தாய்! யானச்சிமயத்தின்மேற்சென்றுடலயர்வு போக்கிக்கொண்டு போதருவேனெனப் போயினர். பொருமுகவெழினியினுட்பகவான் யாழ் முனிவர் தோன்றி, பங்கமடைந்த அங்கமுடைய தங்கையைக்கண்டு ரேன்மிக்க கரன்வெகுண்டு இராமபிரானோ டமர்புரிவான். பெருந்தானைகளோடு புகுகின்றனன். ஞாட்பினைநோக்க வெம்மைப்போல வேட்கையுற்றீர்க ளெல்லீருமெம்மோடு வரலாமென்றனர். இளையபெருமாள் பெருமானை நோக்கி அத்த! பகவான் நாரதமாமுனிவருடையகிளவி கரன் சமரஞ்செய்யவருகின்றனனென்பதைக்கிளத்துகின்றது. நாமயர்ந்திருத்தலொண்ணாதென ஆளுடைய நாயகனார் நன்றுநன்று. குழந்தாய்! நீ சிதையைச்சோர்வின்றிப்பாதுகாவென்றனர். சுமித்திரை திருப்புதல்வர் சுவாமி! நன்றென்றிருந்தனர். திரையினுட் படைவீரர்களே! இட்சுவாகு குலத்திற்றோன்றினவனும், முனிவேடத்தைத் தரித்தவனும், பாரியோடுந் தம்பியொடும் போந்திருக்கின்றவனுமாகிய இராமனையெல்லீரும்படைகளோடு வளைத்துக்கொண்மின். கொன்மினென் றோரோசை பிறந்தது. இரகுநாத ரப்பூசலைத் திருச்செவியுற்றுக் கரனே வந்து மாற்றம் பகர்கின்றானென்று கவயர்தரித்து, ஆவந்தாங்கி, கார்முகமேந்தி, கரனே! நினதியானைபரிதேர் காலாளாகிய படைகளோடு நின்னையின்னே முருக்கல்செய்து குணாமுகனாளி சம்பு கழுகுமுதலானவற்றிற்குங் கால

னுக்கும் நல்விருந்தமைக்கின்றேனென் றுங்காரஞ்செய்து பாணங்களாற் பதினாலாயிர மகாரதிகர்களையும், கரனையும், அவன்தம்பியரையுந்துமித்தருளினர். இராக்கதரது செருக கழிந்ததென்று கடவுளர்கள் முனிவர்களெல்லாருமுளங்களித்துத் துந்துபிதுவைத்துப் பூமாரி பெய்து நம்மையனா வாழ்த்தினர்.

ஐந்தாம் அங்கம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளே சரணம்.

---

## அந்தர்நாடிகை.

பரமபாகவ தோத்தமராகிய விபீஷணனுழ்வானது திருப்புதல்வியாகிய மருக்குழலியனலைவந்தனள். வந்து முன்னே கண்ணுற்று நம்தர்தையாருடை வமைச்சனுகிய சம்பாதியாங்கு வருகின்றனன் போலுமென நின்றனள். நிசிசரகுலனி லுதித்த சம்பாதியாண்டு நிற்கின்றவள்அனலையோவென்றண்மைக்கணைய்திக் குழந்தை அனலை ! இவண் நீயேன் சார்ந்தனையென விபீஷணருடைய வருஞ்செல்வப்புதல்வி நான் வித்யுஜிஹ்வனுடைய மனைக்கணேகி வருகின்றேனென்றனள், சம்பாதி மாதே ! ஆங்கு நீ செல்லக் காரணமென்னையென, அனலை அமைச்சரோ ! கேளீர். இலங்காதிபதி தங்கையாகிய சூர்ப்பநகை தசரத புத்திரனுகிய இலக்குமணனுல் மூக்கறையாகி வித்யுஜிஹ்வனது மாடமேயினளென்றனள். சம்பாதி நகைத்து அனலை! சூர்ப்பநகை நினக்கத்தை யல்லளோவென அவள் அமாத்தியரோ! அத்தை செய்தியை முற்றுங்கேண்மின் உறுப்பிழந்து போந்த சூர்ப்பநகையை வித்யுஜிஹ்வன் மனையாட்டி மாயாவதி நோக்கி நினது மூக்கெங்கே? காதெங்கேயென,தயக்கிரீவன் தங்கை தக்க மறுமாற்றஞ் சாற்ருது இராமனுடைய வடிவழகைப் புகழ்ந்து பெரிதுபன்னினள். மாயாவதி கேள்வியுற் றிவ்வளவெழின்மிக்க வாடவனு முளனோ?

அவனுருப்பொறித்த படத்தைக்கண்ணுறவேண்டுமென வென க்குச்சொல்லியனுப்பினாளெனச் சம்பாதி, மங்கையே! இராம படம் நின்வயினேதெனவினவினன். அரக்கர் குலக்கொடிசம் பாதியே!கேட்டி சீதைதனக்குத் திருமன்றலாகுமுன்இராமன துகட்டழகைக்கருதிப் படமொன்று பொறித்தனள், அப்படத் தை வித்யுஜிஹ்வன் குடிலம்புரிந்து கொணர்ந்து தன்னில்லாள் கரமீந்தனன். அவள்வயின் யான் பெற்று இராவணனு லெடுக் கப்பட்டு இலங்காபுரியிற் சிறையிலுள்ள சானகிக் கப்படத் தைக்காட்டிச் சோர்வகற்றிக்கொண்டிருந்தேன். அம்மாயா வதி யச்சட்டகத்தைப் பார்க்க வேட்கையுற்றமையாற் கொடு போய்த் தந்துவருகின்றேனென்றனள். சம்பாதி, இராவணன் சீதையைக்களவுசெய்வான் மானுருவமெடுத்தமாயம்வல்ல மா ரீசன்மாய்ந்தான்! தாடகை முதலாயோர் முந்தியே யுலந்தார். அரக்கர் மரபுக்கின்னமென்ன கேடுநேருமோ வென்றனன். அனலைபெரியோரே! அதுநிற்க. மிதிலையர்கோனங்கை யெப் போது மிராமபடத்தை நோக்குற்றுக் கண்ணீர் மல்கிக்கலுழ்ந் து சிம்சுபா மரனடியி னேழுதிங்கள் கழியவைகுகின்றனள். இராமபடமின்மையினலினி யென்னுறுவளோவென்றனள். சம்பாதி கேட்டுமங்காய்! இராகவன் வாலியை வீட்டுதல் செ ய்தானென்று மாலியவான் முதலியோர் கேட்டு வெருவந்து சானகியைக் கொண்டுபோய்த் தாசரதியினிடத்தில் விடுத்துப் சரண்புகுவதே பயன் தருசெயலென்று கடைப்பிடிக்கின்றன ரென, அனலை பெரியீர்! மாலியவான் முதலாயோருடைய வெண்ணமீதாயின், பெருந் தீவினையாளனது தீயகருத்தென் னென்று கடாவினள். சம்பாதிநங்காய்! சீதையைக்கொணர் ந்த பின்னர் இராவணனை நோக்குற்றவர்யார்? எப்பொழ்து ம த்தசக்கிரீவன் பவனன் கொணர்ந்து வேய்கின்ற பல்லவச்சே க்கையிற் படுத்துப் புரளுகின்றான். வருணனீகின்ற முண்ட கமலர்களால் அலங்கறுெடுத்துச் சூடுகின்றான். கொடுந்தழல் விடப்பாந்தள் நீங்குற்ற புற்றுப்போல நெஞ்சு பாழாம்படி சீ தையினிடத்தேயே கருத்தைச் செலவிடுத்து, எனைத்தாயினும்

எனையொன்றனையும் கருதாதிருக்கின்முன். கச்சளங்கழுமிய தன்னெஞ்சுபோல விருண்டுள்ள சிற்றறைவிட்டுப் புறம்போந்தா திருக்கின்முன். மந்திரியர் முதலாகிய நண்பர்களோ டொரு சிறிதும் வாய்விள்ளாதிருக்கின்முன். அமைச்சர்கள் இராவணனை நோக்கவும் பேசவு மற்றம் பெருது வருந்தி யவனைவெளிப்படுத்துவா னோர்சூழ்ச்சிபுரிந்து, மழைக்கோளைக்கூடத் தாசரதி ஜானகி பிராட்டியை நேடத் தொடங்க ளெட்டு வாலியைவீட்டலீருய் ஓர்நாடகம் புனைந்துளாமி னெனச் செப்பலும், அவ்வுசன னிரதமொன்பஃது நிரம்பப்புனைந்த நாடகமியற்றி யுலகமும்மைக்கும் வேந்தே! எங்கள் பெருந்தகாய்! இலங்கை வாழ்மணியே! பிரயன் வேண்டுகோளால் வானவர் மன்னவனைத் தொடர்ப்பிணிப்பை நெகிழ்த்துவிட்டவள்ளலே! நீயுவகை தூங்கும்படி யோர்நாடகம் புதுவதுபுனைந்துளேன். அதைப் பார்த்தருடியென வேண்டுகின்ற நினது சுக்கிராசாரியென்று கையொப்பமிட்டுப் பத்திரிகை வரைந்து செலவிடுத்தனன், இராவண னவ்வோலையைப் புலமகனெருவன் வாசிப்பக்கேட்டு நாடக நோக்கவிரும்பினன். நடநவி லச்கடவுண்மகளிர்களையுங் கண்ணுளர்களையுங் கொணர்வான் நிறுது தந்தையாணையைத் தலைமேற்பொறுத்து நான் செல்கின்றேனென விளம்பினன். அனலை பெரியவரே! இராமபடத்தைப் பாராவிடிற் சீதை சாலமறுகுவள்; அவளையழைத்துவந்து இராமசரித்திரமாகிய விந்நாடகத்தை நோக்குவித்துச் சிறிதின்னலாற்றலாமெனக் கருதுகின்றேனென்றனள். சம்பாதி யம்மொழி செவியிடைச்சார்தலும் மானே! இராவணனது சமுசத்தில் சீதையையும் விளித்து வரலாமா? அப்பெண்மணிதான் வருவாளா? அவ்விராவணன் ஞெடக்கமாய மாயவரக்கருணராவகை நீவிரிருவிருமிருந்து நாடகநோக்க விரகொன்றுளதேற் கழறென, அனலை சம்பாதி! சம்பாதித்துளேன். பூண்டவர்களை நிருதர்கொடுவிழிக்குப் புலப்படுத்தாதமணிகுயிற்றிய கங்கணங்களிரண்டென்வயினிருக்கின்றனவென மெல்லப் பகர்ந்தனள். சம்பாதி அவ்விரண்டு

கங்கணங்களையும்யான்முந்தையே யறிவேன். பண்டைஞான்று பகவான்விசுவாமித்திரர் மங்கையர்க்கரசியாகிய சீதைக்குக்கொடுத்தனர். கரவடசாரணன் முனிவடிவங்கொண்டு பொய்யுரைத்து, அக்கடகங்களைச் சீதைபாற்பெற்று, இராவணன் வயிற்கொணர்ந்தான்; அவன் சாரணனைநோக்கிக் கங்கணங்களைநீ கைக்கொண்டிருத்தலால், நின்னுருத்தோன்றலிலது நெடிதுசேணிலெறியெனக்கடிந்தான். சாரணனெறியாது புட்பகத்தினோர்புறனிற் பொதிந்துவைத்தான். பின்னை வித்யுஜிஹ்வனவற்றைக் கைக்கொண்டு முன்னோர்நாள் என்னோடு நகையாடி விளையாட்டயர்ந்தான். அக்கங்கணங்கள் நினதுகைப்படக்காரணமென்னையென, அனலை, அமைச்சரோ! அவ்வித்யுஜிஹ்வன் தன்னில்லாண்மாயாவதிகையி லீந்தான். அவள் நட்புடைமையினெனக்குத் தந்தாளென்றனள். சம்பாதி பெண்ணே! ஆயின், நீவிிருவிரும் வந்து நாடகம் பார்க்கலாம்; யான்சென்று வயிரியர்களைக் கொணர்கின்றேனென்று சேறலுற்றான். அனலை யானும் போய்ச்சீதையையுடன்கொண்டு நடம்பயிலிடனுக்குப் போதருகின்றேனென்று சென்றனள். பின்னர் இராவணன் மகா பார்சுவனென்னு மமைச்சனோடரங்கமேபோதந்து, அரியணைமிசையணைந்து மகா பார்சுவா! இச்செவ்வியினுடகவாட்டை நோக்கவேண்டுமென் றுமாத்தியளென்னைநெருக்குகின்றார்கள் என்னையென, மகா பார்சுவன், இலங்கேசரோ! சீதையைக் கருதிக்கருதிக் காமவெப்புநோயுழக்கின்ற நும்மைக் களிப்பிக்கும்பொருட்டேயன்றி வேறன்றென்றான். தயக்கிரீவன் நல்லது நாடகர்நடமுயற்சியியற்றலாமென, அண்மையினுறைந்த மகாபார்சுவன் கண்ணாற் குறிப்பித்தனன். உடனே நிருத்தர்கள் அணுகிவந்து தண்ணுமையினோடு தாளத்தைச் சிறிதுகொட்டிக் கைகூப்பித் தலைவணக்கிக் கும்பிட்டகன்று நின்றனர். அக்கூத்தர்களிலொருவன் ஓ! ஐங்கணைக்கிழவனனவன் கூடியவர்களுக்கின்பத்தையும், பிரிந்தவர்களுக்குப் பையுளையும் புரியாநின்றனன். ஈரேழுலகத்தினு மவனைவென்றிகொள்வா ரொருவருமிலர். அ

வன் கொற்றத்தினின்று குதித்துய்ந்தவருமிலர். அவ்வேளை யநங்கனுயியற்றிய உருத்திர மூர்த்தியு மவன்செயலுக்காற் ருனுகியோர்மங்கையைமெய்யினும், மற்ருேர் மங்கையைச் சென்னியினுஞ் சுமக்கின்றனனென்றனன். பின்பு முழந்தாள்வரையுந் தாழ்ந்தகுப்பாயமும், தலையிற்றலைச்சாத்தும், கையின் வேத்திரக்கோலுங்கொண்டு, கட்டியங்காரன்போந்தான். வந்த கட்டியங்காரன் மாரிகாலம் பெயர்ந்தமையால், கலாவமஞ்ஞைகள் விண்மீக் கொண்மூவைக் காணாது மெலிந்துயங்கி மரன்செறிபழுவத்துழல்கின்றனவென்றனன். இராவணன் ஆம், இராமனைக் காணுமற்சீதையு மம்மஞ்ஞைகளை மானப் புலர்கின்ருளென்றனன். திரையினுள் ஓ இலட்சுமணு!சீதையை ஆச்சிரமத்திற்காணேன் என்செய்கேனென்னுஞ் சொல் பிறத்தலுமெதிர்நின்ற கட்டியங்காரன் இலங்கேசா! புஞ்சிகஸ்தலையென்ற கடவுண்மகள் இராமனைப்போலவும், கிருதாசியென்பவள் இலக்குமணனைப் போலவும் படிவங்கொண் டிவ்வாடரங்கின்கண் வருகின்றனரெனப் பகர்ந்தனன். இராவணன் மகா பார்சுவா ! இந்நாடகத்தினுடைய தொடக்கஞ் சாலநன்ருயிருக்கின்றது. நாம் கவர்ந்துகொணர்ந்த சீதையைப்பிரிந்த இராமனென்செய்கின்ருன் பார்ப்போமென நுவன்றனன். இராவணன் முன் கூத்து நிகழ்கின்றதென்று அனலைகூறக் கேட்ட ஜானகியார் அனலை பிரியை! கேளாய். இரகுநாயகர் தந்தைசொற் றலைமேற் கொடுகொடுங்கானத்துக் கேகும் வேலைப் பின்ருெடர்ந்த தமியேனைத் தாம் வருங்காறுந் தமது தாய்க்குந் தந்தைக்குங்குற்றேவல்புரிந்துகொண் டிருத்தியென்று மறித்தனர். அப்புருடசிரேட்டரைப் பேதைமையினுல் நான்சுளித்து, அவருறையுமுறையுளே அயோத்திமாநகரமெனப் பிரியாதடவிவந்தேன். இராமபிரானுக்குத் தகுதியாயுள்ள வென்னைவேட்பது புத்தேளிர்க்கமைத்தவவியை இழிந்தவை காமுற்றுக் கௌவுங்குணுங்கரது புன்சிறுஞமலி யவாவியதுபோலாகுமென வோராது பாபி யிராவணன் தீமையியற்றினன். அரகோதண்டகண்ட

க ரென்னைநாடாது சாதுசனகண்டகனுயானை வீட்டாது சாகேதஞ்சார்ந்தருளார். திவ்வியமங்கள விக்கிரகவிசிட்டராகிய அவ்விராமபிரானைச் சேவித்தறிண்ணமென்னுங் களியாலின்னுமுயிர்தாங்கியிருக்கின்றேன். நாடகமவருடைய திருக்கதையாயிருத்தலாலும், வேடவுருவாயாவ தவர்திருமேனியை நோக்கலாமென்னும் விருப்பாலும் பொருநராட்டுநோக்க வேட்கின்றனென். அவ்வரங்குவயிற்புகவு மஞ்சாநின்றேனென்றனர் அனலை மைதிலியாரோ! அஞ்சவேண்டா நுமக்குப் பகவான் விசுவாமித்திரமகாமுனிவ ரீந்த கங்கணமிரண்டுமென்பாலிருக்கின்றன. அவற்றை யாமிருவேமும்பூண்டு செல்லுதுமென்றனள். ஜானகியார் அரக்கனென்றுணராதெனக்குளதாய வுவகையினுற் சாரணனுக் கற்றைஞான்று நான் கொடுத்த பொற்றகங்கணங்களிற்றைநாள் நன்குதவுகின்றனவென் றருளிச்செய்தனர். பின்னரவ்விருவருங் கடகந் தரித்துக்கொண்ட ரங்கசாலைமேயினர். மிதிலைநாடியார் அனலாய்! பத்துத் தலைகட்செவியொன்று படம்விரித்திருக்கின்றதுபோலாங்குறைகின்ற இராவணனை யஞ்சுகின்றேனென, அனலை அன்னமே! நாம் பூண்ட கங்கண நம்மை யரக்கர்கட்புலனுக்குக் காட்டமாட்டாதே. அதனுடைய செயலை யறிந்திருந்து மேன்வெருவுகின்றனிர்? நீ ரோர் கங்கணத்தைத் தரித்திருத்தலால், நீரெனக்குத் தோன்றலிராதலால் நுமதுகையைப் பற்றிக்கொண்டேயிருக்கின்றனெனென்றனள். பிராட்டியார் அனலாய்! கடகங்களால் நிசிசரருடைய கட்பொறிக்குமட்டும் நாந் தோன்றலில்லோம். நடனம்புரிகிற கடவுண்மகளிர் நம்மைச் காண்பர்களே, யாதுபுரிவோமென, அனலை தேவமாதர் நோக்குறினேதமென்ன? அவர்களொருவருக்கும் புலப்படுத்தார்களென்றனள். பின்னர் அனலையும், ஈமதன்னையாருஞ் சிறிதணித்துப் போந்து அரங்கிஞேர்புறத்திருந்தனர். உடனே புஞ்சிகஸ்தலையும், கிருதாசியுந் தாசரதியாரெனவும், இளையபெருமாளெனவுந் திருவுருக்கொண் டவைக்களனிற் ரேன்றலுற்றனர். வந்த அத்தாசரதி இலட்சுமணு! என்னைப்பிரிந்து

தனித்துச் சீதை சிறுவனாயாயினும் நோனுளே. அவளைக் கண்ணுருமையா லெனுதுநெஞ்சு பீழையுறுகின்றதெனா, இரா வணன்சாலமெலிக, புலர்கவென்றனன்.ஜானகியார் கண்ணரு விவாரவுயிருமுடம்புமபோல வாழ்ந்திருந்தோம்;பாவியரக்கன் பிரித்தான்,என்செய்கோவென்றனர்.இலட்சுமணன்அத்தரோ! திருவுளம் வருந்தன்மின். களிமஞ்ஞைகளகவாநின்ற வவ்வ டுக்கலின்முகட்டிற் பொழுதுபோக்க மிதிலைநாடியார் போ யிருப்பினுமிருக்கலாம். ஆங்குச் சென்று பார்ப்போமென, இராவணன் சீதையை நான் கவர்ந்துவந்ததை இலட்சுமண னுணரான்போலுமென்று நகைத்தான். ஜானகியார் அச்சோ குழந்தாய் இலட்சுமணு! இலங்கையிலுள்ளவென்னை விலங்க லிலேயோ துருவச்சேறலுறுகின்ருயென்றனர். இராமபத்தி ரர் இளையவனே! சீதையென்னை நீத்துத் தனித் தாங்கணெல் லாஞ் செல்லாளென மிதிலையர்கோன் றிருப்புதல்விபார் எம்மு டையார் கூறுவதுண்மையே. அவளாயின்றி மலர்தழைகளுலி யணிசெய்யுங் கடிபொழிலுக்கு மேகமாட்டேனென்றனர்.சுமி த்திைகான்முளைநாதரோ ! தேவியார் தங்களுடைய சீர்பாதங் களை வழிபாடியற்றிப் பூசனைபுரியும்பொருட்டு நறுமலர்கொ ய்ய வப்புன்னைகப்பொதும்பருட் புகுந்திருக்கலாமென்றனன். இராகவன் குழந்தாய்! அப்பூங்காவை நேடி வருவாயென இளையவன்போயினன். இராவணன் சீதை புன்னைகவனத்தி லில்லை; நறுஞ்செயலைவனத் துறைகின்ருளென்றனன். சீதை யார் அனலையைநோக்கிப் பெண்ணே! நாயகரோடுபிரியாது டனுறையுங்காலை யப்புன்னைகப்பொதும்பருக்கோர்பொழுது சென்றிருந்தேன். குழந்தை அதனையுளங்கொண்டு சுவாமியி னிடத்தில் விண்ணப்பஞ்செய்தவ்வுய்யானத்தின்கணேகுகின் ருனென்றனர். இராமபத்திரன் சானகீ ? எங்குற்ருய் ? வா ராய்வாராய் நீ வளர்த்த பசுங்கிள்ளை நின்னைக் காணுமை யாற் றுயர்ந்து, தலையைவணக்கிக்கொண்டங்குமிங்கும் பார்த்துச் சீதை! சீதை! மைதிலீ! மைதிலீ! என்ருேவாது கூவுகின்றதெ ன்றனன். மிதிலைநாடியார்கையை நெரித்துக்கொண்டு, அன

லே! சுவாமி யுரைக்கின்றபடியே யிருக்கலாம். யான் வளர்த்த சுபந்தியென்னுங் கிள்ளை யென்னைக் காணுது தரியாது; உயிர்விடுமெனவுயங்கினர். இராமசந்திரன் அரிதரிது நஞ்சீதை நல்லபல்லவங்களைக் கொய்து நாடோறுமக்கரிமாச் சிறுகுருளையினுடைய கையிற்றரும் பயிற்சியினுற் காளமேகனென்னுமக்குஞ்சரக்கன்று சீதையை நாடிப் பன்னசாலையைச் சுற்றிச் சுற்றிவருகின்றதென, இராவணன்சீதை நமது சருத்துக்கிணங்கியொழுகுவளேல் அவளுக்கு விளையாட்டயர நம்வயிற் பிணருடற்றுடியடி நால்வாயிளங்கன்றுக ளுண்டோவென்று நகைத்தனன். ஜானகியாரவ்யானைக்கன்றினை நோக்கிக் காளமேகா! நானிங்கேயென்று மற்றவை பகருமுன் அனலை மைதிலியாரே! யாம் நாடகத்தையன்றே நோக்குகின்றேம். காளமேகனென்ற கடகரிக்கன்றுபோல வேடமன்றே வந்துளது. அதை விளிக்கின்றீரோயென்னென்றனள். இரகுநாதன் ஓ அப்பெடைமயில் ஆச்சிரமத்தினுட் சேறலையும், புறம்போந்து சிறுவரை நின்று பெயர்த்து மகத்திற் புகலையும், வெள்ளிடைவந்து தோட்டமொன்று கோலியுலாவுதலையுங் கருதின், எனதாருயிரை நாடுகின்றதுபோலக் காண்கின்றதென்றனன். மைதிலியார் அச்சோ அச்சோ! அனலை! இரகுநாதருக்கு யானமுதூட்டுவதற்கு முந்திப் பாபி யென்னைக் கரவுசெய்தான் சுவாமியற்றைப்போ துண்டாரோ வில்லையோவெனப் பேரின்னலுற்றுச் சோர்ந்தனர். அனலை சரங்களாற் றங்கி யுத்தரியத்தால்விசிறிச் சோகமாற்றினள். ஜனகர்குலவமுதமெழுந்து, அனலை! எகுமுயிரை யிரகுநாயகர் வருவர் வருவரெனவெத்தனை நாள் தகைந்துகொண் டிருப்பேனென்றனர். தாசரதி எனதாருயிராகிய பூமிஜா! புனல்குடைந்து பீடத்திலிருந்து கூந்தலை விரித்துப் புலர்த்துங்காலை யவ்வோதியை மேகமென்றெண்ணி வனத்திலுள்ள தோகைகள் தோகையைவிரித்தாடாநிற்குமென, இராவணன் ஆமாம். சீதையினுடைய அளகத்தினழகைக் கண்டு, அம்மஞ்ஞைகள்போலவே யெனது நெஞ்சமுங் கூத்தாடுகின்றதென்றனன். இராகவன் ஐயோ!

எனதுயிருக்குயிராகிய பெண்கனியை யெப்போது காண்பேனென்று கண்மூடிச் சோர்ந்தனன். இராவணனதனைக் கண்டு களித்து இராமனிப்போது சோர்ந்தபடியே யுயிர்மாய்ந்தால், இராகவன் துஞ்சினன்; இனி நமக்கு நாயகன் இராவணனென்றுகொள்ளு மைதிலியினுடைய வேயுறழ்தோளிற் றுயிலலாமென்றனன். மிதிலையர் கோனன்னம், அனலை! என்னை யெண்ணி யிறைவரயர்ந்திருக்கின்றனர்; யானென்செய்கேனெனக் கலுழ்ந்தனர். அனலை கலுழாதிரென்று தேற்றினள். புன்னாகச்சோலையினு ளேகிய இளையபெருமாள்வந்து அத்தரோ! அத்தரோ! என்னைப்பாரும், ஒருமொழி களத்துமினென்று சைத்தியோபசாரஞ்செய்து சோர்வையகற்றலுந் தசக்கிரீவன் இலட்சுமணனண்மி யுபசாரம்புரிந்திராமனைத் தேற்றினனென்று சாலவருந்தினன். சீதாபிராட்டியார் பகவத்கடாட்சத்தால்நாயக ருயிருய்ந்தனரென்று களித்தனர். சுவாமி இலட்சுமணா! புன்னாகக் காவில் பெண்ணாயகத்தைத் தேடினாயோவென வினவ, இளையவன் ஐயோ! தேவியாரில்லென்றெங்ஙனுங்கூறுவேமென்று வருந்தி, அண்ணல்காள்! புன்னாகச் கடிபொழிலிலு மலர்களலர்ந்த கான்யாற்றிலுங் கட்டுமாமரத் துடவையிலு மணற் குன்றிலுந் தேடினேனெனத் தாசரதி இளையவனே! ஆங்கெல்லாம் நீ சீதையைக்காணவில்லை போலாமென் றுள்ளமறுகி நெட்டுயிர்ப்பு வீங்கிப் பேரின்னல் பெருகித் தீப்போலத் தெறுகின்றதே. நெஞ்சோ வலி குறைந்தொசிகின்றதே யென்செய்கேனென்றனன். நாலேந்துகையன் செய்யக்கடவது வேறென்னை? நற்குண நற்செய்கையுடைய நங்கையைப் பிரிந்தவன் செய்தற்குரியதையுந் தசக்கிரீவ னுவப்பதையுஞ் செய்தி செய்தி. ஓ! இராமா!அவை யாவையோவெனின் நீ யின்னே யுயிர்நீப்பதே தகுதியென்றனன். ஜானகியார் அனலையை நோக்கி மாதே! பலவிடங்களிற் றேடியுங் காணேனென் றிளையவன் விளம்பக் கேள்வியுற்ற சுவாமி யென்னுற்றனரோவென்று வருந்துகின்றேனென, அனலை துடியிடையீர் நுமது நாதருக் கேதமு முண்

டோ? அவ்வாபற்றி நீர்வேறென்று நினையாதிர் மேனிகழும் அவருடைய செய்கையனைத்து மிந்நாடகத்தினாற் றெரிதுமெனத் தேற்றினள். சுமித்திரைகான்முளை தனதத்தனை நோக்கி அண்ணலே! ஊக்கம் விடற்க. ஏனையிடங்களிலும் பிராட்டியாரைத்துருவுவோ மென்றனன். இராமபத்திரன் தனக்குமுன்னே நின்ற வோர் வகுளத்தருவை நோக்கி வீசுகின்றதென்றலாலலர்ந்தவுடுப்போலுமலர்களையுதிர்த்து, அத்தென்றற்குக் கடிமணமளித்துப் பொலிகின்ற மகிழமரமே! சீதைக்கு மெனக்குமுள்ள நேயத்துக்குச் சான்று நீயல்லையோ? அன்னளெவணேகினள்? அவளை நீநோக்கினையோ? அவள் நின்னோடேதேனுங்கூறினளா? சொல்லுதியென்றனன். இராவணன் சினந்து புலவுநாறும் விடக்கினூங்கு நறுமணம் வீசகில்லாமே யாவற்றினுங் கடைப்பட்ட மகிழமரமே! சீதையினுடைய செயலைச் சொல்வாயே லிருதுணியாய் நின்னைத்துமித்து விடுவே னென்றுடைவாளை யுருவினன். மகாபார்சுவன் ஓ! ஓ! சீதையை யிழந்து இராமனும்,அவண்மேலாசையுற்றுஇராவணனும்பித்துச் சீற்றங்கொண்டன ரொன்றெண்ணுபு, இலங்கேசரோ! இம்மரமுற்றறியுமோரறிவுயிரன்றே? அதற்குற்றுணர் வல்லாவேனைப் புலன்களுண்டோ? அதுபேசுமோ? அன்றியுந் தாசரதி சானகியைப் பிரிந்தமையால் துயர்ந்து செய்ததை யெல்லாங்காட்டுகின்ற நாடகமன்றே? ஈங்கணிகழ்கின்றதென்றனன். இராவணன் மகாபார்சுவா! ஆமாம். சீதையைக்கருதிக்கருதி நெஞ்சுதடுமாற்ற முற்றேனுகலினாடகமென்றோராது விட்பியின்மேற்சீற்றங்கொண்டே னென்றனன். இராமசந்திரன் ஓ! ஓ! என்னிரப்புரை கேட்டு மிம்மரமொன்றும் புகலாமே வாளாவிருக்கின்றது. நன்று நன்றென் றோர்விலங்கலை நோக்கி வெற்பே! சீதையை நீ கண்டனையோ? கழறுதி கழறுவிடின் ஒரே வெங்கணையினால் நின்னைத்துகளாக்குவேனென்றனன். தசக்கிரீவன் குலிசப்படையை மானுமெனது கையாற் புடைக்கும் புடையை நன்குணர்ந்தவப்பருப்பதம் இராமனுக்குப்பகருமே யென்றனன். இராகவன் அந்தோ!

திகிரிநுடங்காமலிருக்கின்றது. அவ்வாயினருவியைக் கேட்போமென வருவியே! சீதையினுடைய திருமுகமன்ன சரோருகத்தையும், திருநயன மன்னகுவளையையும், நகிலன்ன சக்கரவாகத்தையும், இடையை நிகர்த்த வல்லியையுங் கொண்டு வெற்பின் மடிமேலிருக்கின்றனையே, எப்போதுமெனது மடிமேலிருந்தபெண்ணிற்றிலகம் யாண்டையுற்றாள் உரையாயென்றுரைத்திமையாது நோக்கி நின்று ஆ! ஆ! இவ்வருவியுயிரில்பொருளானதாலொன்றும் மொழியவில்லையென்றனன். பிராட்டியார் அச்சோ! கொடியதீவினையெல்லாந் திரண்டோருருப்பெற்றாற்போல வினிதிருக்கின்ற அவ்விராவணனால் நான் கரவுசெய்யப்பட்டேனென்றெனது நாயகருக்குச் சொல்லுநரிலரானலவரெவ்வண மறிவரென்றழுதரற்றினர். அனலைநோக்கிச் சானகியாரே! நாடகத்தின் முடிவைக்காண்குறுவோமெனத்தேற்றினள். இலட்சுமணன் கொழுந்தியாருடைய பிரிவாலண்ணனருள்ள மறுக்கமுற்றிருக்கின்றன ரென்றனுங்கிக் கைகூப்பி அத்தரோ! திருவுளங்கலங்கன்மின். தேவியார் நல்ல பசும்புற்களைத்திற்றி வளர்த்தமான்பேடுகளெல்லாம் அவாசியை நோக்கி நம்மையும் கண்ணுநீஇ விழியிணை மழைவாரநின்றன. அதனையொருகாலாராயின் தெனுதுவயிற்றேடுமி னென்று நமக்குக் கிளப்பதுபோலக் காண்கின்றதென்றனன், இராவணன் இப்பிணைகள் கழறுமா? நொடியளவையிற்கொன்றுதின்னுகின்றேனென்று முனிந்தான். மகாபார்சுவன் வேந்தர்சியமே! இதுநாடகமென முந்தையே மொழிந்தேனேயெனத் தயக்கிரீவன் ஆமாம், பொச்சாந்தேனென்றிருந்தனன். எம்பெருமாட்டியார் கண்ணினின்றாலியுகுத்துநவ்விகளே! நீயிர்தாமெனக்கு முற்படுபிள்ளைகள், எனது பெற்றியை நாயகருக்கு நன்குகழறுமினென்றனர். இராமன் இளையவனே! ஆனல் கூற்றுவன்றிசையை நேடுவோமென்றுரைத்துநடந்து குழந்தாய்! நான் கொய்து வந்து சீதையினுடைய வளகக்கானிற் சூட்டிய சாதிமலரலங்கல் தேனோடும் வண்டோடும் கிடக்கின்றது பாராயென, இளையபெருமாள்

சுவாமீ! பிராட்டியாரைப்படிற்முெழுக்கப் பேதையொருவன் கவர்ந்து செல்லுகையிற் பூங்குழலினின்றித்தார் வழுவிக் கிடக்கின்றதாய்த் தோன்றுகின்ற தென்றனன். மைதிலியார் இளையவன் வல்லன். எனதுமைந்தன் வல்லன். என்னை யொருவன் கொண்டு தென்றிசை மேயின னென்றுணர்ந் தனனே. எனதப்பன் வல்லனென்று சிறி துவந்தனர். இராக வன் சிவேதைநோக்கிச் சென்று இளையானே! ஆங்குயிர் நீத்து க்கிடக்கின்றவன் யாவன்? கையிற்கசைகொண்டிருத்தலாற் றேர்வலவனென வுன்னுகின்றேன்; யாவனிரதமாங்குத் தக ர்ந்து கிடக்கின்றதே? அவ்விரதத்திற் பூட்டிய வேசரிகளும் கழுதுகளும் இறந்து கிடக்கின்றன; முடிகளும், தோள்வலயங் களும், அரதநவாரங்களுஞ் சிதைந்து கிடக்கின்றன, விற்கள் சிறுதுணிகளாகிக் கிடக்கின்றன. தூணம்போலுருண்டு திரண்டு நீண்டகரங்கள் துணிந்து கிடக்கின்றனவென இலட்சுமணன் நோக்குற் றிறும்பூதிறம்பூதிது. இன்னஞ் சிலசேய்த்துச் சென்று பார்ப்போமென்று நடந்து பிராட்டியார் பொருட் டிரண்டு வீரர்களுக்கு நெடுஞ்சமர நேர்ந்திருக்கலாமென் றெ ண்ணுகின்றேனென்றனன். இராவணன் கோபங்கொண்டு சீதையினு னமக்கும், எவருக்கும் ஞாட்பு நேர்ந்தது? எதிர்த் துப்பொருதஜடாயு நம்மால் நன்முயொறுக்கப்பட்டானேயெ ன்றனன். ஜானகியார் பெரியவரே! பறவைக்கரசரே! வல்லி யத்தின் கையிற்கிடைத்த பிணையையொப்ப வருந்திய தமியே னை நோக்கியிரங்கி யோம்புவான் போந்தநீர் அவ்வறப்பயனை முற்றும் பெற்றீரில்லையே யென்று பொருமினர். அனலை மை திலியாரோ! இன்னலெய்தாதி ரென் றுத்தரியத்தாற் கண்ணீர் துடைத்து இராவணன் பெருந்திண்ணியன்; உலகமும்மை யினு மவனேடெதிர்த்து முரண்புரிவார் யாவருமிலர். பெரு மூப்பினராகிய ஜடாயு அத்தீயானே டெதிர்த்துப்பொருது மொத்துண்டார், அதற் கியாதுளுற்றறப்பாற்றென்றனள். இரா மபத்திரன் இலட்சுமணு! வில்லைத்தருதி தருதி யெனக்கதழ்ந்து கழறலுஞ் சுமித்திராகான்முளை அகாரணமாய் நம்பேர

ருளாளப்பெருமானுர் சிலையைக் கேட்டல் யாதென்றுன்னிக் கிட்டினன். மகாபார்சுவன் ஓ புருவங்கள் நெரிந்து கண்சே ந்து நிற்கு மிராமனதுமுனிவை நோக்குங்கா லீரேழுலகத் தையுமின்னே யழிப்பான் போலும். அம்மட்டுமோ ? பிர ளயகாலருத்திரமூர்த்தி யிவ்விராமனுடைய வொருகூற்றிலொ ருசிறுகூறென்று முன்னுநின்றே னென்றனன். இராவணன் அழுக்காறும், அச்சமுமெய்தி மகாபார்சுவா ! அழனைத் தடிந்து வாளின்முனை தேயச்செய்வதின் மாபெருங் கீர்த்தியு றுமாயின் தன்னைக்காக்கும் வலியில்லாஞகிய இவ்விராகவ னோடு செருப்பொருது வெற்றிபெறின் சீர்த்திபெறுவ தரிதா மோ ? இத்தயரதபுத்திரனை நோக்க வெனக்கு விருப்புக்கி டையாதாகலாற் புறம்போகுவலென் றெழுந்தான். மகாபார்சு வன் இலங்கேசரோ! உண்மை யிராமனே னீருரைப்பது தக் கதே. புஞ்சிகஸ்தலையல்லளோ அவனுடை யுருப்பெற்றுடுகின் றனள் வீற்றிருக்கலாமெனள, இராவணன் ஆமாமென்றிருந் தான். இரகுநாதன் இளையவனே ! ஆங்குவெள்விலங்கல் பெ ருமருத்தினுன் மறியுண்டுகிடந்தாலொப்பக் கிடக்கின்றவன் யா வன் ? அடுத்தடுத்துப் பெருமூச்சுவிடுகின்றுன். கண்ணை மூ டிமூடி விழிக்கின்றுன், புண்ணீருவட்டெழும் யாக்கையனுயி ருக்கின்றனன். முண்டகநாளத்தையயிலு மதவெற்புட்போல வோரரக்கன் சீதையை யுண்டுகிடக்கின்றனன்போலும். பற வையினுருவனு யிருக்கின்றனன். இவனைக்கோறல்புரிகின்றே னென்றனன். தசக்கிரீவன் எனது பிரியையாகிய சீதையைத் தின்றநிசாசரன்யாவன் ? எனது கூர்வாளுக்குச்சிற்றுணு வாக க்கருதிச் சானகியை யயின்றுனேவென்றென்று முருச்சினங் கொண்டான். மகாபார்சுவன் இலங்காதிபரோ! இராமன் ஜடா யுவைக் கண்ணுறீஇ யரக்கனெனவும் சீதையையுண்டவனெ னவுங்குழறுகின்றுன். அது செவியிற் சார்தலால் நீர் முனியலா மோ?சீதையைக் காகோளிக்காவிற்கடுஞ் சிறைப்படுத்தியதைப் பொச்சாந்திரோவென இராவணன் ஓ! ஓ! இது நாடகந்தானே யென்றிருந்தனன். சுமித்திராபுத்திர னுய்த்துணர்ந்துசுவாமி

விளையாதீர். நமது சிற்றப்பாவெனக்கருதாநின்றனெனென் றனன். எழினியினுள் நெடிதாயுளுள்ள இராமா! வாராய் குழந்தாய்! வாராய் நான் ஜடாயு என்னைத்தாக்காதி. ஓ ரரக் கன் கற்பினருங்கலத்தைத் தூக்கிக்கொடுபோயினன். நான் கண்டு தகைந்து அவனலடியுண்டு நின்னைக் கண்ணுற்றுச்சொ ல்லுவானேகு முயிரைத்தகைந்து கிடக்கின்றேனென்றனன். பத்துத்தலையன் செவியுற்று இராமன் வருங்காறு மிம்முதுக் கழு குயிர்தாங்கியிருந்து வார்த்தையும் விளம்புகின்றதே. நா னடித்தபோழ்தே யுயிர்வீடியதென்று வந்து விட்டேன். நல் லது நல்லதென்று சிரக்கம்பனஞ்செய்தனன். ஜானகியார் ரா வணனலடிபட்டயர்ந்த நமது முதிஞர் இராக்கதனொருவன் சீதையைக் கவர்ந்துசென்றன னென்பதை நமது நாயகருக் குக் கூறினரோ. இனி நம்மைத்தேடாதுதாழார். ஆயினும் நாமவரைச்சேவிக்க வெத்துணைக்காலஞ் செல்லுமோ வெ னச் சிறிதின்புந்துன்புங்கொளளும், அனலை நோக்கி மைதிலி யாரே! எல்லாவற்றையு மிந்நாடகத்தி னேக்குது மென்றனள் இராகவன் ஜடாயுவை யெடுத்துத் தனதுமார்போடணைத்து முதியோரே! அரிதரிது. சீதையையேந்திச்சென்ற அரக்க னெவன்? அவனூரெது? பேரெது? கழறவேண்டுமென்ற னன். இராவணன் முடைப்புலானுறம் பிணத்தைப்போர்த்தி ட்டுக் குத்திபயிலு மிம்முதியவெருவை இராமனுக்குச் சொ ல்லவேண்டியவெல்லாஞ் சொல்லுக. அதற்கு இராவணனச் சுறுவேனேவென்றனன். நம்மன்னையார் அந்தோ! தறு கணனற் றூக்குண்டயர்ந்து சோர்ந்த பெரியவர் நமது பெற் றிமையைமுற்று மொழிகின்றுரோ பாதிமொழிகையில் முடி கின்றுரோவென்று துயருற்றார். திரையினுள் குழந்தாய்! இ ராமபத்திரா! கண்சுழலுகின்றது. நெஞ்சுமறுகுகின்றது. வாய் குழறுகின்றது. சோகமேலிடுகின்றது. இனிநானுய்யேனுய் யேனென்றனர். இராவணன் சகுந்தமே! நீயுயிருய்யவேண்டு மென யாவர் வேண்டுகின்றார். இப்போதே சாகுதிசாகுதியெ ன்றனன், இராகவன் பெரியவுடையாரை நோக்கிச் சிற்றப்பரோ

லூக்கங்கொளீஇ மேலே சொன்மினெனப் பறவைவேந்து இராமசந்திரா ! நானென்சொல்கேன் ஓரரக்கனே தீங்கிழைத்தா னென்றனன், இருபதுகையன் அரக்கனு நான்? அரக்கர் பதியல்லேனோ? நல்லது நல்லதென்றனன், ஜானகியார்நாதரே! குழந்தாய்! இலட்சுமணா ! நானிவணிருக்கின்றேனே நுங்கட்குத் தெரியவில்லையா வென்றுரைத்து வெள்கி அனலே! இரகுநாதனைப்பிரிந்தமையாலுள்ளந் தெருமந்தென்வயப்படாமையால் நாடகமென்றோராது குழறுகின்றேனென்றனள். இராமபத்திரன் அடுக்களைபுக்கன்னத்தைக் கவருஞ்சுவாவைப் போலப்பன்னசாலை புகுந்தென் தன்னத்தைக் கைக்கொண்டு போயவனை யமன்கையிற் புகுத்தாமே விடுவேனோவென்றனன். இளையவன் எனதன்னை சானகியாரைக் கவர்ந்ததுமன்றிச் சிறியதந்தையையும் கொலைபுரிந்த பெருஞ்சழக்கனை யெனதுவாளால் வீசிச் சிறு துணிதுணியாய்க் தடிகின்றேனென்றனன். இராவண னவ்வன்மொழி செவிபுகலும் தோளாற்றலில்லான் வாய்வலியைக்கொண்டே யுயிர்வாழ்வன். இளையவன் வாள்பற்றவேண்டியமுறை யின்னதெனத்தெருளாநவனேனும் மாற்றம் விளம்பமட்டும்வல்லவனென, திரையினுள் ஜடாயு இராமசந்திரனை நோக்கிக் குழந்தாய்! விந்தமென்னு முகூர்த்தத்திற் கைவிட்டவொண்பொருள்தவறாமே கைவருமென்பர். சீதையை நீயடைவது திண்ணமென்றனன். இராவணன் ! விந்தமுகூர்த்தமென் றுணர்ந்தே நாஞ் சீதையையெடுத்து வந்தோம். காலத்தைக்கடப்பார் யாருமிலர். எல்லாருக்குங் காலம் பெரிதென்பர். அக்காலந் தசக்கிரீவனுக்கும்பெரிதாமோவென்றனன். எழினியினுள் சடாயு இராமபத்திரா! கேண்மோ விச்சிரவசுவென்னும் முனி புதல்வன் இராவணனென்றனன். இராவணன் திரிலோகத்தலைவனாகிய நமது பெயரைப் புல்லியமுதுப்புண்டரமொன்று வாய்கூசாதுரைக்கின்றதே. சீதையையெடுத்துவந்த அன்று இறகையுங் காலையும் வாளால் துணித்தேன். இறந்ததுபோல நிலமிசைவிழுந்தது. வீடியதென்றன்றோ வந்துவிட்டேன். அவ்வெல்லைவயே யொருவெட்

டுக் கழுத்திற்போட்டிருப்பேனே வித்தனையின்னலில்லை யென்றனன். ஜனகர் குலப்பொன்னன்னார் தெய்வாதீனம் கரவுபுரிந்தவன் இராவணனென்று மாமனார்சொன்னார். அம்மொழிகொண்டே யிரகுநாயகரு மிளையவனுமெல்லாந்தெரிந்துகொள்வமொன்று களித்தனர். இராமசந்திரன் ஜடாயுவை நோக்கிப் பெரியவரே! மேலே கூறுமின் கூறுமினென்றனன். இளையபெருமாள் விழியருவிவாரவுயங்கியரிதரிது. நமது சிற்றப்பர் நம்மை நீத்து விண்ணேறினரொன்றுயங்கலும், இராகவன் ஊற்றிருந்தொழுகியதெனக் கண்ணீர் மல்கத்தந்தையீர்! தந்தையின்றுணையீர்! எருவைக்கரசரே! வலியின்வலியே! தாதையையிழந்த வரந்தையை நும்மைக்கண்டன்றோவாறினம். இனியென்செயற்பாலோமெனப் பொருமிப்பொருமிப் புலம்பினன். மகாபார்சுவன் வேந்தர்பிரானே! இராம னித்தனையலக்கணு நும்மாலடைந்தனனெனத் தசக்கிரீவன் மகாபார்சுவா! இராமனால் நானுற்றசெல்லலை நீயுணர்கிலேயோ? தாடகையையும், சுவாகுவையும், கராளனையும், மாரீசனையும், கரனையும், தூடணனையும், திரிசிராவையும்,மகாரதிகர்களையு மிழந்தேன். எனது தங்கையோ மூக்கையுங் காதையுமிழந்தாளே யெனலும், மகாபார்சுவன் கொம்மைமுலையையு மியம்பக்கூடாதோவென்றுள்ளத்தினுணகைபுரிந்தான். தயக்கிரீவன் மகாபார்சுவா!எனது செல்வத்தங்கையை யெழிலழித்த அவ்விலட்சுமணனையின்னே தடிகின்றேன், சூர்ப்பநகை யவனுடலிழி செங்குருதியை வெப்பாறுமுன்பருகுகவெனக்குற்றுடைவாளையுருவினன். மகாபார்சுவன் இலங்காதிபரோ! இஃது நாடகமன்றோ? நீர் துணிசெயிற் கிருதாசியல்லளோ வுயிரிழப்பாளென்றனன். இளையபெருமாள் ஆராவமுதன்னாரே! கலுழற்க. ஒன்னலனுடைய் வுறைவிடத்தைத் துருவுவோமென இராமசந்திரன் இளையவனே! சீதையைக்கவர்ந்த விழுதைநிலனிலிருப்பினும், அளக்கரிலிருப்பினும், பாதலத்திலிருப்பினும், வானிலிருப்பினும், ஏனையவுலகங்களிலிருப்பினு நாம் சூழத்தக்க தென்னையுளது? மாசுண

த்தைக் கொல்லுங் கலுழனைப்போல நமது கணை அன்றோ னைவீட்டாதோவென்றனன். கைலையை யாடல்கொண்டோன் மகாபார்சுவா! வலாரி புராரி முதலிய திசைகாப்பாளர்கள் வாய்வெரீஇவெரீஇப்பாறப்பொருது வெற்றிகொண்ட இலங்கேசனுடைய வொளியையும் புகழையு முணராமே யிவ்விராமன் பயன்படா வீரம் பேசுகின்றானென்றனன். இளையபெருமாள் தாசரதியைவணங்கிச் சுவாமீ தேவியார் பக்கல் பெரும்பிழை யிழைத்த வளையெயிற்றுப் பேழ்வாயரக்கனைமட்டுங் கோறல்செய்வ தழகன்று. அவனது மனைவி மக்கள் நட்பினருள்ளிட்டாரைத் தேர்கரி பரிகாலாள்களோடு கோறல்வேண்டும். ஒருவனைக் கொன்றமையினால் நிலவுலகம் நிசாசரப்பூண்டிலதாகமாட்டாதென்றனன். இராவணன் மகாபார்சுவா! இவ்வறியாப்பருவ விளம் பைதலினுடைய மொழி நின்செவிவயிற் சார்ந்ததோவென அவன், பேரரசே! வலியில்லா நொய்யோன் வாய்விட்டுலம்புவதன்றி மற்றென்செய்வனென்றனன். ஜானகியார் குழந்தாய்! இலட்சுமணா! நன்றாய் மொழிந்தனை. எனக்குத் தீங்கிழைத்தபாவகாரியினது குலத்தைப்பூண்டின்றியழிவுகாணவேண்டுமென்றனர். இராமபத்திரன் இலட்சுமணா! இனிமேற் செயற்பாலதென்னவெனச் சுமித்திரை கான்முளை அடிகேள்! தென்றிசையைநோக்கியேகித் தெவ்வரை யுயிர்வவ்வி எம்பெருமாட்டியாரை யடையவேண்டுமெனப் பகர்ந்தனன். சீதாநாயகன், என்னின்றுணையே! இலட்சுமணா! நமது சிற்றப்பனுரைத் தாங்கிச் சென்று கோதாவிரிக் கரையிற் சிதையடுக்கி, அதன்மேல்வளர்த்தித் தீக்கடனீர்க்கடன்கள் யாவும் புரிந்து வருதியெனப் பணித்துப் போக்கி, ஐயோ சீதையினுடைய பிரிவென்னுங் காலச்செந்தழ லெனதுநெஞ்சையெரிக்கின்றதே, எவன் புரிவேனென வழுங்கினன். அச்செவ்வியிற் றிரையினுள் அத்தரோ! பிதிர்கடனாற்றிவருமென்னைச்கானுறைகின்ற வெல்லாமன்னுயிர்களோடு மொருவன் கைகளாற் பிணித்திழுக்கின்றானெனலும், இராமபத்திரன், ஓ! ஓ! இளையவனது தீங்குரல்போலக்காண்கி

ன்றதென வெண்ணுபு துன்னெனு மனத்தினனாகி இலட்சும ணு! வந்தேன் வந்தேனென்று விரைந்தனன். மகா பார்சுவன் இலங்கேசரே! இராமலட்சுமணர்களை வதைசெய்யும்பொருட் டு உமதாணைசுமந் தடவியிலிருக்கின்ற கவந்தன் இலட்சும ணனைப் பற்றி யீர்க்கின்றனனென்றனன். இராவணன் யாப் புறவீர்க்கக்கடவன். சுவைபார்த்துத்தினந் தயிலச்கடவனென் றனன். எழினியுள் இளையபெருமாள் எங்குரவரே! ஒரு விழி யுள்ளமுகனை யகட்டிடைக்கொண்ட வொருவன் மந்தரவெற் புப்போன்ற கைகளா லெல்லாவுயிர்களையு முகந்து வாய்ப்பெ ய்கின்றான், விரைந்துவருதியென்னலும், கவந்த னிளையவனை நோக்கி அத்தனை யெற்றுக்கோவிளிக்கின்றனை? நீயாவன்? அரசிளங்குமரனாகத் தோன்றுகின்றாய். தெய்வாதீனம். பசிப்பி ணியுற்றிருக்கின்ற வென்பால் விதியுந்தவந்தாய். நொந்தாவதெ ன்? நானின்னையொன்றும் புரியகில்லேன். சாலவொழுக்க முடையானு யென்வயிற்றிடைப் புகுதியென்றனன். இராக வன் விரைந்துபோதந்து நமதிளையவீர னவ்வரச்கனுடைய விருகரங்களையுந் துணித்தான், இருபுறத்தினின்று மிரண்டு வெங்குருதிப் புனல்யாறு கழுமிப்பெருகுகின்றன. இலட் சுமணன் வெற்றித்திருமகளுடனுறைய நிற்கின்றனனென வுவகையோங்கினன், இராவணன் இராமலட்சுமணர்களை க் கொல்வான் நமதுபணியைத் தலைபொறுத்துக் காடகமிறந் த கவந்தனுயிர்மாய்ந்துவிட்டான். மகா பார்சுவா! இஃதெ ன்னை வியப்பென்றனன். மைதிலியார் குழந்தாய்! பகவத்க டாட்சத்தினால் கூற்றங் குதித்துய்ந்தனையே யென்று மகிழ்ந்த னர். இளையபெருமாள் நமதத்தனைக்குறித் தசரீரி பிறக்கின்ற து; அஃதியாதென விண்ணை யண்ணாந்துநோக்க; இராமசந்தி ரா! நீ இராவணனைக் கொன்று ஜானகியை யடைவதற்கு விர கொன்று பகர்கின்றேன் கேட்டி. நான்கமைச்சர்களோடுரிசியு முகவடுக்கன்மிசையுறைகின்ற வலிமுகவிறையாகிய சுக்கிரீவ னைத் துணைக்கோடல்புரிதி. அன்னவனது முன்னோன் வாலி யைக்கோறி, கிட்கிந்தாபுரியை யக்கதிரவன் மகனுக்குக் கொடு

த்தி.நீபின்னர்ப்பெருநலங்கள் பெறுதி.முந்தை நானேவானேரி லொருவன்.தூலசிரசென்ற மாமுனிவருடைய வைவினு னிசி சரனுயினேன். அச்சாபத்தீர்வு செய்தருளியவள்ளலே! என்னு லாகிய சிற்றுதவியியற்றி னெனென்று ஓர் திப்பிய வுருச்கொ ண்டு விமானமீதிவர்ந்து பொலிகின்றேனென்றுனென்றனன். தசக்கிரீவன் கவந்தன் பிணக்குடைச்சழக்கன். நம்புடையிகந் துவிட்டு இராமன் புடைசார்ந்தான்; அற்புதமற்புதமென,மகா பார்சுவன் கவந்தனென்செய்வன்?இராக்கதவுருக்கொண்டிருந் தகாறு நம்மைச் சார்ந்திருந்தான்.கடவுள்யாக்கை பெற்றவுடன் இராமனைச்சார்ந்தானெனப் பகர்ந்தனன்.மைதிலியார் பகவத் கடாட்சத்தினுல் அரக்கருருத்தவிர்ந்த அப்பெருந்தகையாரா லும் சாலவுபகாரமடைந்தோமென்றனர். இராவணன் மகாபார் சுவா! இவ்விராமன் கரனைக்கொன்றவனேனும், பரசுராமனை வென்றவனேனும், தோலாவாற்றலுடையானும், பொழுது தோறு நான்குகடலினுஞ்சென்று நித்தியகன்மங்களைக்கழிப்ப வனும், நீலமால்வரை யுயிர்பெற்றெதிர்த்தாற்போன் றெதிர்த்த துந்துபியைத்தாக்கிக் குமைத்தவனும், சிவபூசனைவழாதியற்று பவனுமாகிய வாலியைக்கொல்லவல்லவனே? கிவந்ததோட்க வந்தன் இராமலட்சுமணரை முருக்கல்செய்வான் வாலியோடு முரணும்படிவஞ்சமாய்ப் புகன்றிருக்கின்றுனென்றுன்னுகின் றேனெனக்கழறினன். மகா பார்சுவன் வாலியினுடையமுடி வைக்கேள்வியுற்றபின் நாலைந்துகரணதெண்ணத்தின் முடிவெ ன்னுங்கொல் நோக்குவோமெனக்கருதுபு, எங்களிறையே! தாங்களுனைப்பதே திண்ணமென்றனன். இராகவன்நோக்கி விமானமீது பொலிகின்ற வுத்தமரோ!உம்மால்நாங்களுய்யுநெறி தெருண்டோமாகலின் உத்தமவுலகையடையுமினென்றனன். இலட்சுமணன்மீண்டு மத்தேவனென்னைகூறுகின்றுனென்று வானையண்ணாந்துநோக்கி,இராமபத்திரரோ!பம்பாசரசுசார்ந்து ஆங்கு உமதுவரவு நோக்காநின்ற சவரியைக்கண்டருளி, அப் பால்ரிசியமுகஞ்செல்லுதிரெனப் பகர்ந்து போகின்றுனென்ற னன். இராவணன் மகாபார்சுவா! முனிவர்படிவத்தனுய்க் கொ

மோனையுஞ் செவ்வியகோலையுங்கரத்தினேந்திய இராமனோடு சுக்கிரீவன் நட்புக்கொள்ளுவானோவென, மகா பார்சுவன் ஆம் அவன் கேண்மைபுரியானென்றனன். இராவணன் மகாபார்சுவா! ஆயிரமிராமராயினும் வாலியைக்கொல்ல வியலாதென மகாபார்சுவன், அவன்வாலில் நாஞ்சிமிழ்ப்புண்டால் இராமனவனைக் கோறல் புரியுமாற்ற லில்லானென்றெண்ணுவதோவென வுள்ளத்துளுன்னி நக்கு வேந்தே! எல்லாவற்றையு மிந்நாடகத்திற்கண்ணுறுவோமென்றனன். மைதிலியார் அனலையைக்கண்ணுற்று நங்காய்! சைரிபப்போத்துப்போல விருண்டு கறுத்தமேனியுடையானு யுட்கார்ந்துள்ள இக்கள்ளப்பாவியென்னையெடுத்து வருங்காலை யோர்பொருப்பின் கொடுமுடியில் வானரரைவரிருந்தனர். அவர்களிற் சுக்கிரீவனொருவனு யிருத்தல்வேண்டுமென, அனலை, ஜானகியாரோ! அவ்வானரவீரர்களைநோக்கி நீரொன்றும் வாய்விள்ள வில்லையோ வெனக் கடாயினள். மிதிலைநாடியார் அனலாய்! நாயினுமிழிந்த இராவணன் மனத்தினுங் கடித்தாயோடிவந்தான். யானே சித்தங்கலங்கியிருந்தனெனென்றார். இளையபெருமாள் முன்னே பார்த்து, ஆங்குத்தோன்றுகின்றது பம்பைப்பொய்கையெனக் கருதுகின்றேன். இன்னிளந்தென்றியால் சிந்தியமந்தாரமலர்கள்விலங்குகளின் குளம்பினுல் மிதியுண்டொழுகவிட்டதேறலால் நனைந்து குளிர்ந்தும், தேமா, தெங்கு, கமுகு, பனசம், விரிதலை முதலியவைகளடர்ந்து தண்ணெனுங் கொழுநிழல் பொருந்தியும், சுரபுன்னையினறுமணத்தையுந்திய சிறுபசுங்காலுற்றும், காண்டொறும்புதுக்களிதருகின்ற இவ்வழியினூடுசெல்வோமென்றனன். இரகுநாதன் பம்பையைநோக்கிக் கடக்ரிகள் தாமரைப்பூவை நாளத்தோடு பிடுங்கித் தமதுபிடிகளுக் கினிதுகொடுத்துத் தண்புனலைவாரி முகத்திலெற்றுகின்றன. வண்டுகளெழுந்திசைபாடப் பங்கயத் தெகினம்புட்கள் சிறையையுளர்ந்து பெடையைப் பாடணைக்கின்றன. யானே காதலியைப் பிரிவுற்றுத் தனியே யுழல்கின்றேனென்றுளமழுங்கிச் சோர்ந்துவிழுந்தனன். இராவணன் தெய்வா

தீனம், இராமனிப்போது சோர்வெய்தியவண்ணமே மாய்வானேல் நாஞ்செய்த தவப்பயனதுவே யெனக்கழறினன். அருட்படிவவன்னையார் அரிதரிது, நாயகர் நம்மை முன்னியடுத்தடுத் தயாவடைகின்றனர். நானென்செய்கேனென்றலக்கணுற்றனர். இளையபெருமாள் அண்ணு! அண்ணு! துயருறவேண்டா. தேவியைக்கவர்ந்த கள்வனையின்னுனெனத்தெருண்டோம். அன்னுனைவென்றிகொள்ளு மூபாயமுந்தெரிந்தோம். கதழ்ந்து நாங்கதிரவன்மைந்தனைக்காண்டல் வேண்டுமெனலும், இராகவன் ஒரு பரிசு சோகந்தெளிந்து இளையவனே! ரிசியமுகவெற்பின்னமெனைத்துச்சேய்த்தோவென வினயினன். சுமித்திராபுத்திரன் சுவாமீ! ஆங்குப் போதுகின்ற பிரமசாரியை வினவுகின்றேனென்னலும், என்னையாளுடை ஐயர் அணித்து வந்தனர். இராவணன், இவ்விராமலட்சுமணர் சுக்கிரீவனைநட்டுத் தன்னைக்கொல்லுவான் முயல்கின்றனரென்னு மதுவாலி செவியிற்படலு மவ்விருவரையுந் தான்கொல்லுவான் இம்மாணிவேடங்கொண்ட னுகுகின்முனென்று நினைக்கின்றேனென்முன். மைதிலியார் அனலே! ஓர் நிருதன் மாணவகப்படிவங்கொண்டு சுவாமிபக்கல் போதருகின்முன். சாலவலியனுய்த்தோற்றுகின்முன். மாயையால் நாயகரையென்செய்வனேவென்னு வச்சுறுகின்றேனென்முர். சுமித்திரா புத்திரன், ஆரியராகிய பிரமசாரியரோ! கவியரசாகிய சுக்கிரீவன்வசிக்கின்ற ரிசியமுகக் கார்வரையை நீரறிவீரோவென, மாணவகவடிவர் இவர் ரிசியமுகப் பெருவரையை வினவுவதை யோர்ந்தால் வாலியினதேவல்பூண்டு நம்மைவீட்ட விவ்விருவரும் போதருகின்றனர்போலும், அவர்பாற் சென்றுண்மை யறிதியென்று நம்மைவிடுத்த யூகபதியினதெண்ணமோதிண்ணம் அங்ஙனமாயினுமீங் கிவ்விருவரையுங் காண்டலும் நமக்கென்புருக அன்புதுவன்றுகின்றது. உளத்திலடங்காவுவப்பு நம்மையறியாமே யெய்துகின்றது. உடலமெல்லாம் புளகுபோர்க்கின்றது; அதைவென்கொல்? முற்றுமறிவோமென்றெண்ணி, ஐய! விசும்புபோழநிவந்தவக்குன்றந்தான் ரிசியமுகமென்று

கையாற் சுட்டிக்காட்டி, தேவரிருவிரையு மின்னரொனத்தெ ரிந்துகொள வெணுதுள்ள மவாவுகின்றது. தம்மைவினவ வெனது நாவோவெழவில்லையென்றனர். இராவணன் ஆ! ஆ! நாம் நினைந்தபடி யிப்பிரமசாரி வாலியன்றென்றுன்னி மகா பார்சுவா! கரன்முதலியோரைக்கோறலியற்றிய பெருஞ்சழக் குடைத்தியனொருவனென்றும், சூர்ப்பநகையினுடைய வெழி லையழித்த தீர்வில் பெருநவையாள னொருவனென்று மிச்சிறு வனறியான்போலு மென்றனன். ஜனகர்குலப்பெருந்தவப் பயனாயினார் அனலாய்! கேளாய், தெய்வமகளிரிருவ ரொனதுநா யகரைப்போலவும், இளையவனைப்போலவுந் திருக்கோலம்பூண் டு நடிக்கின்றனரொனவோராது, இராவணன் மகா பார்சுவனை நோக்கிக் கரன்முதலியோரைக் காதுதல் புரிந்தவ னொருவ னெனவும், சூர்ப்பநகையினது வடிவழகைக்குறைத்தவனொரு வனெனவுங் குழறுகின்றனனெனக்கூறியருளினர். சுமித் திரை கான்முளைமானவரை நோக்கி உத்தமரோ! கேண்மின், சூரியன்குலத்திற்றோன்றிய வறவர், வலியுடைய வசுரரை யாவியுண்ட மறவர். ஆரணஞ்சொன்ன அருமைவேள்விகளெ ல்லாமியற்றியியற்றி மறந்தபுனிதர். கொடையென்னுந் தரு வின் கொழுங்கொழுந்தோடி மேலுலகெங்கும் படருங் கீர்த்தி யர், அரசர்க்கரசர், நல்லறமூர்த்தியன்னார். தடமதிலயோத்தி யாண்ட தசரதரொன்னுமபிதாநர், அன்னவர் சிறுவரவர்; இவ் வாண்டகை யார்க்கிளையவன் யான். அவருடைய தேவியார் மிதிலைநாடியாரை யெனலும் பிரமசாரி ஐயன்மீரிருவிர் சீர்பா தத்திற்போற்றியெனப் போற்றிசெய்து சுமித்திரை கான்மு ளையாரை நோக்கிப்பெருமானாரோ! மேலொன்றும்புகலவேண் டா. இராவணன் புரிந்த திங்கையானறிவேனென்றனர். இல ட்சுமணன் புனிதரோ! செங்கதிரோன்புதல்வனு னுதவிபெ றுவான் யாங்களிவட்போந்தனெம். அவ்வேந்த லப்பொருப் பகத் திதுபோழ்திருப்பரோ! யாங்கள் செல்லினெங்களைப் பா ர்ப்பரோயென்று வினவலும், பிரமசாரியார் சூரியகுலதிலகரோ! கேண்மின் நான் பாற்கரன்மைந்தனுடைய அமைச்சரிலொ

ருவன், என்து நாமம் அனுமான். வாலியென்பவன் தனது தம்பி மனைவி தனக்கு மருகியெனக் கருதாது சுக்கிரீவனது காதலியைக் காதலித்துத் தன்வயமாக்கிக்கொண்டிருக்கின்றனன். அவ்வாலியினுடைய திறலை நீவிர்கேள்வியுற்றிருப்பீர்கள். வீரமேயுருக்கொண்டாங்குப்பொலிகின்ற தாங்கள் அவ்விந்திரன்காதலனைக்கோறல்செய் தாதித்தன் மதலைக்கில்லையு மரசையுமளிப்பிரோ லவ்வானர இறைவன் தனது படைக்கடலோடுவந்து இராவணனைக் வீட்டுறங்கவ்வையி னுங் கட்குதவிபுரித றிண்ணமென்றனர். இராவணன் பார்சுவா! இம்மாணியுருவனுடைய குழறலைக்கேட்டாயோ? இவனையின்னேகோறல்புரியாதுவிடேன். ரிசியமுகவரைபோய்ச்சுக்கிரீவனையுமுயிர்மாய்க்கின்றே னென்றனன். அஞ்சனைச் சிங்கம், தேவர்களே! வம்மின் ரிசியமுகஞ் சாரலாமென வணங்க, சக்கரவர்த்தித் திருக்குமாரரிருவரு நன்றென்றெழுந்து நடந்தருளினர். ஒப்புயர்வில்லாப்பேராற்றலுடைய இரகுநாதன் அனுமானே! இரசிதவெற்பெனநிவந்து குவிந்து கிடக்கின்ற என் பியாதென? வாதாத்துமஜர், வாலி கொன்ற துந்துபியினுடைய வென்பெனப் பணிவாய்மொழிந்தனர். இராகவ னவ்வெலும்பைக் கால்விரலாலுந்தியாங்கு நின்ற வேழுமராமரங்களை யோர்சிறுகணையெய்து தொளைத்தருளினர். அஞ்சனை மஞ்சர் தாசரதியாரது முழுவலி நம்மனோராலுன்னுந்தரத்த தன்றென்றிறும்பூதெய்தி அரகோதண்டகண்டகனை விழிநீர்வார வுடல்புளகுபோர்ப்ப நோக்கித் தேவதேவ! துந்துபியினுடைய மெய்யை ஓர் விரலாலுந்தியதையும், சாலவிருட்சங்களைத் தொளைத்ததையுங் கவியிறைபார்த்துத் தேவரால் வாலியை வெல்லலாமென்றெண்ணிவருகின்றனனென் றுச்சிகூப்பியகையினராய் நின்றனர். இராவணன் ஓ இராமன் காற்பெருவிரலால் துந்துபியினுடைய காயத்தைக் காயத்தையணவவெற்றினன். சாலம்ரங்களைத் தொளைத்தான். வாலியையுங் கொல்வனேவென்று சிறிதையமுற்றுப் பெருவிறல்வாலியைக் கொல்கின்றவனுமுளனே! அவ்வாலி

நமக்கு நமன்போல்பவ னல்லனோவென்றனன். ஜானகியார் தெய்வாதீனம் இந்த விடுக்கட்காலத்தில் சுவாமிக்கனுமானது துணைகிடைத்ததே. சுக்கிரீவனும் வருகின்றானென்றுள்ளே கிளுகிளுத்தனர். சுக்கிரீவன் ஆமாத்திரியர்களோடுவந்தான். வந்து அத்திவ்விய மங்களத் திருவுருவனைக்கண்டு வாலியினை சுமந்து நம்மைக்கொல்வான் யாவர்வருகின்றாரொன்றச் சுற்றோமோ அன்னோர்களை யனுமானழைத்துவருகின்றாரா கலா லவ்விருவரும் நல்லியல் புடையாரோ யெனக்கண்ணுகின் றேனென்றான். வாதாத்துமசர் தாசரதியாரே! சுக்கிரீவன் தங்களைச் சரணஞ்செய்கின்றானெனலும், இராமபதிரன் பரி தியின் கான்முளையைநோக்கி நண்பரோ! க்ஷேமமாவென்று வினவியருளினன். சுக்கிரீவன் சிரமிசைக்கைகூப்பி எத்தே வர்க்குந் தேவரோ! நட்பாளனே! க்ஷேமமாவென்று தாங்கள் திருவாய்மலர்ந்தருளிய பின்னர் க்ஷேம மென்னை யுறைவிட மாய்க்கொள்ளாது தாழுமோவென்றனன். சீதா நாயகன் வலிமுகவேர்தை நோக்கி, கேண்மையுடையாய்! விசிரவசுவி னுடைய புதல்வனாகிய இராவணனையறிதிகொல்? அவனுறை யுமிடந் தெரிதிகொலென, கவிகுலநாயகன் யானறியேனென் றனன். மகா பார்சுவன் இலங்கேசரோ! தாங்களுந் தாங்களு றையும் பதியுஞ் சுக்கிரீவன் தனக்குத் தெரியாவெனக்கிள த்துகின்றனனே. இஃதென்னை வியப்பெனத் தசக்கிரீவன் கைபுடைத்து நகைத்து மகாபார்சுவா! கேட்பாய் பஞ்சவடியி லிருந்து சீதையைக்கவர்ந்துவரும்போதென்னோ டெதிர்த்த ஜ டாயுவைத்தொலைத்து மீளுகையி னன்னாடோறு மாயிரத்தெ ட்டு லிங்கரூபமா யாராதித்துவருகின்ற பரமசிவனைவேண்டி நான் சீதையை எடுத்துக்கொடு செல்வதை யுயிருள்பொருள் உயிரில் பொருள்களொன்று முணரக்கூடாதென வரம்பெற் றேன், அச்சிவப்பிரசாதத்தால் சுக்கிரீவ னென்னையுணர்ந்திரு ந்து முணர்ந்திலேனெனப்பகர்கின்றானென்றான். சானகியார் அனலே! கேண்மோ மகராஜாவர்னவர் பத்துத்தலையனுறையும் புரியிலங்கையென்றுசொல்லவில்லை. நாம் செயலே மரக்கானி

லுறைவதைநாயகருக்கியாவர் கிளப்பாரோனமொழிந்தருளினர். அனலே, ஜானகியாரே! நமது நாயகர் சுக்கிரீவனைத் துணைக் கோடல்செய்தமையின் அவருடைய படைவயவர்களின் யாரோனு மிக்கரப்புறை யுள்ளுகி நம்மை நோக்கிச் சென்று அவருக்குரைப்பர். வருத்தமுறு திரென்றனள். சுக்கிரீவன் சுவாமி! இரகுகுலமாமணியே! நிருதனெருவன் ஓர் அரசகுலப்பொலம் பாவையனையாரைக் குடிலம்புரிந்து தூக்கிக்கொண் டெங்கட் புலனுக்குப் புலப்பட விட்புலனிற் செல்லுங்காலை யவ்வனிதா மணிபொன்மணியணிகலன்களை யோர்தூசினுட் பொதிந்தியாப்புற முடிந் தென்முன்போட்டனர். அது இதுவெனத்தந்தனன். இரகுநாதன் சீதையினுத்தரியந்தா னிது வென்று வாங்கினன். மைதிலியார், தெய்வாதீனம், நாமணியு மணியணியு மாடையும் இரகுபுங்கவரது திருக்கரமுற்றனவேயெனக் களித்தனர். இராமபத்திரன் அக்கலன்களை நோக்கி நோக்கிப் பொருமினன். இராவணன் மகா பார்சுவா! இராமன் சீதையினிடத்து வைத்துள்ள காதன்மிகுதியினலன்றே இன்னமுயிர்மாயா திருக்கின்றனென்றான். இட்சுவாகுகுல சம்பூதன் அணிமுடிச்சையவிழ்த்து ஒவ்வோரணியையும்பார்த்து, அக்கலனைவனையுமுறுப் பொவ்வொன்றையு நினைந்தழுங்கி வாடினன். இராவணன் தெய்வாதீனம். இராமன் இக்கலன்களைக் கண்ணுறுவதனல் கைம்மிகுந்த வயர்வுற்றுயிர்நீப்பனேற் சீதை யிணங்குவாள். அப்பெண்மணியோ டினிது வாழலாமென்றனன். சுக்கிரீவன் இரகுபுங்கவரோ! கேட்டருளிர். ஜானகியாரை விரைவினடைவீர். வருந்தாதிரோன இராகவன் நட்பாளனே! என்செய்கேன். இளையவனே! ஒன்றுந் தெரிதலிலாமல், மம்மருறுகின்றேன். என்னைத் தாங்குவாயென வலமந்து சோர்ந்து நிலனில் வீழ்ந்தனன். இராவணன் இனி யென்னை? இவ்விறுதித் தெருமரல் இராமனுயிருக்கிறுதியியற்றுதுபோகாது. ஐயமே யிலது. நமக்குப் பெருமகிழ்விதனி னூங்கியாது? உயிர்ப்புள்தா! அடங்கிவிட்டதா பார்ப்போமென்று குதுகுலித்தெழுந்தான். மகா பார்சுவன் இதுநாட்

கமன்றேவென்று எழுந்தவனை மறுத்திருவினன். ஜனககுல சுந்தரியார் தமதுபதியினுடைய சோர்வைக்காண்டலுந் திருவுளமறுகியயர்வுற்று அன்னே தேற்றத்தேறினர். இளையவன் தேற்றத்தேறிய இராமன் சுக்கிரீவா! எனது நட்பைவிரும்புகிற்றியேல் கைகொடுத்தியென்று தனது திருக்கரத்தை நீட்டலுஞ் சூரியன்கான்முளை தனதிருகையா லம்மலர்க்கரத்தைத்தாங்கிக் கண்ணிலொற்றிக்கொண்டனன். திரையினுள் நமக்குப் பேரன்பினனையும், உடன்பிறந்தானென்னு முறையுடையவனையுமிருக்கிற இலங்கேசனுடைய சுற்றத்தாரைக்கொன்றவன்யாவனே? நமக்கு விரோதியாகிய சுக்கிரீவனோடு நட்புக்கோடல் புரிகின்றவன்யாவனே? துந்துபியினுடைய மெய்யை விண்ணுறவுந்தினவன்யாவனே; சாலமரங்களைநொய்திற்புழைத்தவன் யாவனே? அவனுடைய தலையில் இப்பெரும்பாறைபோட்டழிவுசெய்கின்றேன். இராமனோடு நேர்நின்று சமம்பொருவனேல் எனது மாபெருங்கீர்த்திமாசுறுமென்று மொழிந்தனன். சுக்கிரீவன் ஐயோ! வாலி என்னோடு முரணுகின்றனனே, என்செய்கேன். இராமா! சரணம். இராகவா! சரணமென்றனன். அனுமான் நமது சுக்கிரீவனுக்குப் பேரிடுக்கணேர்ந்தது. வாலிவரக்கூடாத ரிசியமுகப்பொருப்பகத்தினின்றிறங்கி யிவ்வனத்தில்வந்ததே வெருவரத்தக்கது. ஆயினும் இரகுபுங்கவர் பக்கலி லெழுந்தருளியிருத்தலி னச்சமிலதென்றனர். இட்சுவாகு குலசம்பூதன் இலட்சுமணு? வாலிவந்து வாலுளைச்சீய்வேறெனவுரறுகின்றானென, இளையவன் உளங்கன்றி அடேதுட்டா! வாலீ! வலிமுகத்தொடு பொருமுரணுற்றுவது மன்னர்களாகிய எமக்கழகன்று. ஆயினும் வேலைசூழ் ஞாலத்திற் கிவ்வேலை வேந்துயார்? நீயுணர்வாயா! எனக்கு மூத்தவரும், எமதத்தருக் கிளையவருமாகிய பரதர், அடவிகளில் யாரேனும் யாதேனுந் தீச்செயல்புரியினன் னோரையொறுக்கவேண்டுமென அப்பரதமகாராஜரால் அண்ணனர் வேண்டிக்கொளப்பட்டிருக்குநர். நீ இளையானில்லாகியவுருமையோ டின்பநுகர்கின்ற பெருந்தீய மகாபாவியாகையா லின்னேவீட்டுகின்றோ

மென்றனன். இராவணன் இவ்வரசர்குலத் திளஞ்சிறுவனுடைய குழறல்கிடக்க, வாலி இராமனைக்கோறல்புரியாது விடான் ஐயமில்லை. நானிந்நாள்காறுஞ்செய்த சிவபூசையினது முழுப்பேற்றை யிற்றை ஞான்றுதானடைந்தேனெனப்பெரிதுகழறினன். திரையினுள் வாலி இலட்சுமண னென்னைக்குறித் தென்னை சொல்லினையெனவிடியேறெனவுரறி, காகமேறப்பனம்பழம்விழுந்ததென்னும் பொருளமைந்த காகதாளியஞாயம்போல விராதனெதிர்த்தலும், இலட்சுமணனோர் பாணம்விட்டதும், அவ்விராதனுடைய ஆயுண்முடிந்ததும் ஏககாலம். இலட்சுமணன் தன்னெய்யவலியினால் விராதனை யெருக்கியிருப்பனேல் இப்போழ்தென்முன்வருக. தன் வலியைக் காண்பிக்க. இன்றாயின் அவ்விராமன்வருக. ஓ இராமா! சீதையினது பிரிவாற்றாமன் மறுக்கங்கொண்டிருக்கின்றனை. இப்பெருஞ்சிலையானினது மண்டையைப் பிதிர் பிதிராகப் பிதிர்க்கின்றேனென்றனன். இராவணன் இந்திரனுடைய புதல்வனாகிய வாலி இராமனை நன்கெள்ளுகின்றனனெனக்களித்தனன். சீதையார் அனலாய்! கவிக்குலவரசனாகிய வாலி யுரப்புகின்றானே. மேல்வினை யென்னாங்கொலென வின்னலுற்றனர். இராகவன் வாலி யறைகூவாநின்றானே ஞாட்பியற்றத் தகுந்த நிலனுக்குப்போகுதுமெனப் புறம்போந்தான். எழினியினுள் அரிதரிது. திருவிழந்தேன் திருவிழந்தேன். அமங்கலமடைந்தேன். இரகு நாயசனது கடியவாளி யெனது கணவனுடைய வயிரவரையகலத்திற் றைத்துருவியுயிரையுண்டதே. நான் கெட்டேன் கெட்டேனென்றழுகுரல் பிறத்தலுஞ் சுக்கிரீவன் ஓ! ஓ! சுவாமி காலனுமுட்கும் வாலியை யுயிர்வாங்கியருளினராகலால் தாரையழுகின்றாள். இரகு புங்கவனை நாமெல்லாரும் நமக்கரிப்போமெனப் புறப்பட்டான். தசக்கிரீவன், இராமன் வாலியையுயிர்கவர்ந்தானென்பது வாய்மையின் பாலதாகுமா? புனல் சிலையைப்பொறுக்கு நோன்மை சான்றதா? என்னை பெருவியப்பெனத் திகைத்துயிர்ப்படங்கினன். திரையினுள் குத்திய துந்துபியின் மருப்பை யொசித்ததும்,

இராவணனதுபத்துத்தலைகளின் முட்டலைப் பொறத்ததுந்தா ணாயினுடைய குவிமுலையி லப்பிய செச்சையினு லொப்பனைவ ளைந்ததுமாகிய வாலியின் றிண்மைசான்றவரை புரையுரத்தை ப்பிளந்த இராமபாணம் நமக்குப் பெருநலத்தை யுதவுகென்று மங்கலமொழிபிறந்தது. மகா பார்சுவ னதனைக்கேட்டு இலங் காதிபரோ! வாலி மடிந்தமையால் சுக்கிரீவனுடைய மாராய வொலியைக் கேட்டீரோவென, இராவணன் முனிந்து பூச லில் விண்ணுலகரசன் ஞெடக்கமானவருடைய வெந்நழகை நோக்கிய பெரியவயவனுகிய எனக்குமுன் எந்நாளும் வீவுநே ராத வாலிக்கு நேர்ந்தாற்போல வெறுமையேயுகண்டெழுந்து பேயாட்டாடுகின்ற தெய்வப்பிணுக்கள் தலைமயிரை முற்றுங் கொய்யாது விடுகின்றிலேனென்றனன். மகா பார்சுவன் கை குவித்து மன்னரேறே! வெகுளற்க. இந்நாடகம் நமது பெரி யவர் சுக்கிராசாரியரல்லரோ? இயற்றியது. அதில் சிறிதே னும் பொய்விரவாதெனத் தசக்கிரீவன் ஆனுல் வாலியுயிர்நீத் தது மெய்ம்மைத்தா யிருக்கலாமெனக்கொடுஅரிதரிது. அடே வாலீ! எனக்குக்கேண்மையாளனுயிருந்தனையே, கரனுள்ளிட் டாரை முருக்கினவனை நீ கொல்வாயென வெண்ணியிருந் தேனே, அவனுல் நீ காதப்பட்டாயென்றேங்கினன். இளைய பெருமாள் நம்மாளுடை யருணம்பிகள் வாலியை விண்ணே ற்றிமீண்டு போதருகின்றுரெனலும் ஐயன்வந்து குழந்தாய்! இலட்சுமணு! இராச்சிய பட்டாபிஷேகம் சுக்கிரீவனுக்கும், யுவராச்சிய பட்டாபிஷேசம் அங்கதனுக்குஞ் செய்விக்கும் வண்ணங் கிட்கிந்தையி லினிதுறையும்முதினுர்களுக்கு நான் கட்டளை யிட்டுளேனென்றனன். திரையினுள் வாலியிறந் தான். சுக்கிரீவன் கவிகட்கரசனுகிச் சானகியைநாடத் தி சைகளுக்கு வானரப்படைகளை யேவினுனென்னு மொழி பிறந்தது. இராகவன் ஏ இலட்சுமணு! சீதையின்னவிடனி லிருக்கின்றனளென்று வானரத்தானைகள் தேடிவருங்காறும் ரிசியமுகச் சிலம்பின்மிசை யிருப்போமென வாங்குநின்று போந்தனன். ஜானகி பிராட்டியார் அனலை நின்வாய்மொ

ழியொன்றும் இன்றுகாறும் பொய்த்ததில்லையென்று மகிழ்ந் தனர். திரையினுள் சார்த்தூலனென்பவன் சுகனே! ஜடா யுத் தமையனாகிய சம்பாதி இலங்கையிற் பிண்டிவனத்திற் சீதையிருக்கின்றாளென அனுமா னதுகேட்டுப் பெரு நரலையைத்தாவி வருகின்றனன். பாராயெனச் சுகன் சார்த் தூலா! இது போழ்தே நாம் இலங்கேசனுக்குணர்த்துவோமெ ன்றுவிரைந்தான். இராவணன் என்னை! சுகசார்த்தூலரு டைய மாற்றந் தொலியாகக்காண்கின்றது. ஓ! ஓ! இராமன் செயலையுணர்ந்து வருமினென்று நாம் விடுத்தோமே. அவ் விருவரு மீண்டுவருகின்றனர்போலுமென் றுன்னிச் சீதை மேல் விருப்புக்கொண்டு மற்றொன்றும் புரியா தரசியற் கவ் வையை யொரு சிறிதுமுள்ளாம லந்தப்புரத்திலேயே படுத்துக் கிடந்த நம்மைப் புறனிற்கொணரும்பொருட் டமைச் சராயோ ராய்ந்து இந்நாடகம் புதுவதுபுனைந்தனர்போலு மென்றனன். மகா பார்சுவன் இலங்கேசரே! உண்மைதானென்று புன்ன கைகொண்டனன். சீதாபிராட்டியார் திருவுள முகந்தருளி அனலே! அனுமான் நம்மைத் துருவிவருகின்றானென்று கே ட்டேமல்லேமோ? நாம் கடுகிக்காகோளிவனஞ் செல்குது மென் றுங்கட்சென்றருளினர். இராவணன் சில நிருதர்களைக் கூய்நீவிர்சென்றுவானரங்கள்போதருகின்ற நீணெறிகளில் பு னலற வற்றச்செய்யுமின். உணவு எவ்வளவொருசிறிதேனுங் கிடையாமே அழிபசியினுலுலக்குமாறு தேனிறால்களையும், காய்கனிதரு தருக்களையும், பூங்கொடிகளையும், கிழங்குவகை களைத்தருகின்ற கொடிகளையும், குறுஞ்செடிகளையும் அகழ்ந் தெறிமின். நெருஞ்சின்முள் கூரிய வச்சிரமுதலிய வற்றால் வட்டைகண் முற்றும் நிரப்புமின். இலங்கையாங்கணுளதெ ன அச்செம்மூக்கூனற் கவிகள் வினவுமேல் விண்ணின்கண் ணதெனத் திண்ணமாகச் செப்புமினெனக் கட்டளையிட்டு மகா பார்சுவா! போதுதியென்றுபோயினன்.

ஆறுமங்கம் முற்றிற்று.

---

இராவணன் செல்வத் தங்கையும்,அரக்கர்குலனை யொருங்கு கொன்று தீர்த்த கொடிய திராப்பிணியும்,பாவத்திற்குச் செவி லியுமாகியசூர்ப்பநகை, தீக்கொழுந்துபோலுங் குருளவிழ்ந்து நிலனுறப்புரள, பறைபோன்ற இருகண்களிலும் ஆறுகள் உள போலநீர்மல்கிவார,பெருமுழைவாயோலமிட்டரற்ற,மாரிலெற் றிக்கொண்டோடிவந்து அண்ணு! தசக்கிரீவா ! கும்பகன்ன ! குழந்தாய் மேகநாதா! அதிகாயா! அட்சகுமாரா! திரிசிரசே! தேவாந்தகா! நராந்தகா! வச்சிரதந்தா! துன்முகா! பிரகத்தா! கும்பா! நிகும்பா! மகாபார்சுவா! மகோதரா! நீவிரெல்லீரும் எ ங்கேசென்றீர்கள். வானுடாளச் சென்றீர்களோ? தேவாசுரர் களுடைய எண்ணிலுங் கண்ணிலுமுள்ளநீவிர், எட்டிலுள்ளவர் களானீர்களே. தமியேன் இனி எஞ்ஞான்று நுங்களை யொரு சேரக்கண்ணுறுவேன். அண்ணு! இராவணு! திசைக்களிற்றின் றிண்மருப்பொசித்த நுனது வயிரவணாயகலம்பிளந்து வாய்வ ழியு நாசிவழியும் செங்குருதி நீத்தம்போலப்பெருகக் குப்புற்று மண்ணணைக்கவ்வி வீழ்ந்துகிடக்கின்றனையே அவ்விதம்வீழ, தஞ் சமடைந்தபாலனையாவது,அரிவையையாவதுவஞ்சித்து இழுக் குத்தோடுவாைந்து அவருடைய பொருளைக் கவர்ந்தனையோ? அவ்வாறு கைதவம்புரி கைதவனன்றே நின்போல வீழக்கடவ ன். அல்லது செந்நாப்புலவர்மாட்டுக்குற்ற மேதேனுமிழைத் தனையோ? அம்மெய்ந்நாப்புலவர் சினந்து நினக்கங்கத மொ ழிந்தனரோ?அல்லது அந்தணர்க் கவமதி யயர்ந்தனையோ? அ தனுல் வாழ்நாள் குறைந்தனையோ?அல்லது உண்மை வழக்கை யிழந்தவரது கண்ணீர் குலத்தை வேரோடரியும் வாளென்றுே ராது மனுநெறிவழுவி மாறுபுரிந்தனையோ? இவ்வடாதவற்றில் எதைவிடாது புரிந்து இவ்விதங் குருதிகாலுபு வீழ்ந்துகிடக்கி ன்றுய். நீ ஆயிரம் வேதங்கள்கற்ற புனிதனல்லையோ. சிவார் ச்சனை அவாவுறத் தவாதுசெய்தனையல்லையோ? ஆயிரத்தெ ட்டிலிங்கம்வைத்திலிங்கமென்னு நாமம் இன்றுேடற்றதே நீ யுயிரிழந்தமையினுல். ஊழி வெந்தீயென இராமபாணம்

முனிந்துவந்தகாலே, பரமசிவா! நீயே தஞ்சந் தஞ்சமென்று நீ சொல்லவில்லையோ? சொல்லவயர்பவனல்லையே. நீ புகலடைந்தும், அச்செஞ்சடையோன் இராமபாணத்துக்கச்சுற்றுச் சரண்புக்க சயந்தனைக் கைவிட்டாற்போல நின்னையுங் கைந்நெகிழ்த்தனனோ? அந்தோ! பாதிப்பெண்ணுருவனை நம்பிக் கெட்டனையே. புருடோத்தமனம்பால்வெம்பாப் பட்டனையே. இனி நானென் செய்கேனென்றேங்கி, அந்தோ அனுமந்தனுடைய வால்கொளுத்திய இலங்கை யின்னம்வேகின்றதே தணிந்திலதே. விபீடணனுடைய மந்திரியாகிய சம்பாதி இராவணனாதியர் இறந்தாரென்றும்,விபீடணனுக்கு இலங்காதிபத்தியங் கிடைத்ததென்றுங் குதுகுலிக்கின்றான். அப்பாபியாலேயே விபீடணன் தான்தோன்றலுற்ற மரபு மாசுண்ணுமா குலப்பகைஞனைத் தஞ்சம்புக்கான். நிருதகுலத்துக் கூழிகாலம்போல இராமன்வந்தான். ஓ அண்ணா! இப்போழ்து சீதையை மறந்தனையோ? உண்டாலன்றோ நஞ்சுகொல்லும். நீ கண்ணுற்பார்த்த குறையாலே ஜானகியென்னும்பெருவிடம் நின்னுயிரைப்போக்கிற்றே. என்றுபுலம்பி வாய்திறந்துலம்பினள். பின்னர்ப்பாகவதோத்தமரான விபீஷணாழ்வானுடைய அமைச்சரி லொருவனாகிய சம்பாதிபோந்தான். வந்து அரகோதண்ட கண்டகரும், சரணாகதவற்சலரும், மலைகளை யமலையவிந்தலைதாங்கச் செய்து திருவணையியற்றியவரும்,இராவணனை விண்ணேற்றியவருமாகிய இரகுபுங்கவருடைய நிரவதிக சௌலப்பிய சௌசீலியாதியுத்தம குணங்களை யென்சொல்லிவாழ்த்துகேன். வியப்பு வியப்பெனப் பெருமகிழ்வுற்று,ஆங்குப் பேட்டுக்கோட்டானென நின்ற சூர்ப்பநகையைக் கண்ணுற்று, துட்டையாகிய இவள் அறத்தினுருவினனாகிய விபீஷணன் இலங்கையாட்சியை யெய்தியதை நோனுமலிடும்பையுறுகின்றனள். நீ கவல்வதுயாதென அவளைக் கடாவுவோமெனக்கருதி ஏ மங்காய்! என் மழுங்கியிருக்கின்றனையெனலும், சூர்ப்பநகை, அரக்கியரெல்லாரு மிப்போழ் தென்போலியராயிருப்ப,நின்மனைவிமாத்திரந்தவிர்ந்திருப்பானேனென்று நினைந்துதான்மற்றொன்று

மிலது; ஓ சம்பாதி ஜானகி இலங்கேசனைக் கோறல்செய்தவெ
னது நாயகர்பாற் செல்லுகின்றேன். என்னோடு நீயும் வாரா
யென வென்னை விளித்தனள். ஒருப்பட்டு நானும் பிண்டிக்
காவையண்டினேன். வேத்திரக்கோல்கைக்கொண்டிராநின்
ற குப்பாயத்தார்க ளென்னைநோக்கி அடிமூக்கறையே! அக
லப்போ; எம்மன்னையார் போதுகின்றனர். முன்னே நில்லா
திநில்லாதியென்று வெருட்டினரெனச் சம்பாதி சூர்ப்பநகாய்!
நீமூக்கறையல்லையோ? பயணம் புரிவோர் உறுப்பறுபட்டவர்
களை யெதிர்ப்படுவரேல் கருதிச்செல்லுங் கவ்வைமுற்றுப் பெ
ருமையே அன்றிப் போரவின்னலு முறுவரெனஎண்ணூற்
புலவரியம்புவர். நீ மூக்கறை காதறையாகலால் கஞ்சுகிகள்
துரத்தினர். அதனால் நினக்கென்னை இன்னல்? நீ யெதிர்
சென்ற பொல்லாநிமித்தத்தினால் ஜானகியார் இடுக்கணுற்றன
ரென்றனன். சூர்ப்பநகை அஃதென்னையோவெனச் சம்பா
தி நங்காய்! நீ கேட்டிலையோ? இராக்கதிரை விரும்புஞ்
சகோரத்தை யொத்துத் தம்மை விரும்புகின்றவள் சானகி
யென்று இராமபிரானார் உணர்ந்திருந்துங் காணலுற்ற வுடன்
முனிந்தருளினர். அம்மைதிலியார்தமதுதூய்மையைக் காட்
டுவான் அனலில் மூழ்கிவந்தனர். அம்மிதிலைநாடியார் உயி
ரன்னதுணைவராற் சினங்கொள்ளப்பட்டதும், பெருந்தீயின்
மூழ்கப்பெற்றதும் நின்னையாற்றெதிர்ப்பட்டமையினாலன்றோ
வென்றனன். சூர்ப்பநகை அவ்வின்னாச்சொல் செவிவயிற்
சார்தலும், முலையையிழந்த அற்றை ஞான்றினுங் கைம்மிகுந்
து நாணமுற்று, சம்பாதியே! இப்பொழ்து ஆடவர் பெண்மை
யை யவாவுந் திருத்தோளராகிய இராமபிரானா ரென்செய்
கின்றாரென அமைச்சன் சூர்ப்பநகாய்! இரகுநாதர் இராவண
னைச் சவட்டிப் பொன்னிற் பொலியுஞ் சீதாபிராட்டியாரை
யடைந்து வானரப்படையுடன் புட்பகமிவர்ந்து அயோத்தி
மாநகரஞ்சார முயல்கின்றனர். தமது திருத்தம்பியாகிய பர
தாழ்வானுக்குத் தமது வரவையுணர்த்த அனுமானை விடுகின்
றாரென் றோதியகன்றான். சூர்ப்பநகை ஆங்கது செவியேற்

று, அநுமான் செல்லுமுன் நாம் விமலையுற்று, இராமலட்சுமணருயிர் நீத்தாரெனப் பரதனுக்குக் கிளத்துவமேல் அவன் அவணுள்ள எல்லாரோடுந் துஞ்சுவன். பரதன் தொடக்கமாயோர் விளிந்தகாலையில் நமதுகுலனையழிவுகண்ட இராமனுடைய மரபுஞ் சிறிதுலந்ததாகுமெனக் கடைப்பிடித்துச் சென்றனள். பின்னர் முழுவலன்பினுரு விஃதெனத்தோன்றும் பரதாழ்வான் புனைந்துவிட்ட தாழ்சடையராய், சீரைசுற்றிய விடையராய், உணங்கிமெலிந்து துவண்ட யாக்கையராய்த் திருத்தம்பியாருடன்வந்தனர். வந்து குழந்தாய்! சத்துருக்கினு! நம்மாளுடை நம்பிகளாகிய தாரகவாச்சியரது சீர்பாதகாணிக்கையாகத் தென்றிசைக்கு விடுப்பா னம்மால்விளிக்கப்பட்டுவந்துள்ள பலதேய மன்னர்கள் கொணர்ந்திறுத்த திறையை எல்லா வுலகத்திறையினுடைய பாதுகங்களுக்குக்காட்டித் தனசாலையிற்குவித்து இலச்சினைபோக்கி, அவ்வேந்தர்கட்கு முகமனுரைத்து, அவர்களுக்கு மவர்கள் படைகளுக்கு முறையுளமைத்து, செயற்குரிய வேலையவும் புரிதியெனச் சத்துருக்கினுழ்வான் அத்தரே! தேவர் முந்தியே கட்டளையிட்டருள, அடியே னவ்வாறு வழாநெறியிற் புரிந்துவிட்டேன். அவ்வேந்தர்களும் நாவண்ணிக்கும் அறுசுவையுணவயின்று அவாசித்தேத்தேகத் தேவரதானையை யெதிர்நோக்காநிற்கின்றனர். மீண்டுந்தேவர் அதனையே செப்புகின்ற தென்னையெனலும், பரதாழ்வான் குழந்தாய்! எம்பெருமான்வனத்தி லுறைவதைக் கருதிக்கருதி நெஞ்சுகவல்கின்றமையால் மம்மருற்றுப் பொச்சாக்கின்றேன். நீ யெல்லாவற்றையு மறவியின்றிக் கண்ணுறுவாயென்றனர். சத்துருக்கினுழ்வான் நன்றென்று பணிந்திருத்தலும் அடாநெறியொழுகாப் புரவலர் புங்கவர் சத்துருக்கினு! கேட்டி ஒன்பதுவகை மணிகள் குயின்ற பொன்திணிமுடி மிலைச்சு முடியிற் சடையையும், கடவுட்பொன்னுடையணியு நுசுப்பில்வற்கலையையுந் தரித்துச் சித்திரகூடத்தின்சென்னியில் பன்னசாலையில் புலியத ளாசனத்தில் வீற்றிருந்த நம்மரும்பெற லடிகளைக் கண்கள் மறந்தனவில்லையே

யென்றனர். இளையவர்க்கிளையார் கண்ணீர்மல்கிக்காரச் சரு வசுவாமியினுடைய செயலை நினைந்து யாம் என்செய்குதும், அரிதரிதென்றனர். பரதாழ்வான் எல்லாவுலகத்தவர்களுக் குங் களைகணுகிய நம்பிரானுர் வெம்பரல்களுமுட்களும் கூர்ங் கற்களும் பரந்துள்ள வெங்கானிடைப் பூவினுமெல்லிய சீர்பா தம் வருந்தநடக்கின்றனரோ. காய் கனி இலைகிழங்குகளை ய ருந்துகின்றனரோ. சருகுகளைப் பரப்பிச் சேக்கை கொள்கின் றனரோ. என்செய்வலெனப் பொருமிச் சோகாத்தனர். சத் துருக்கினுழ்வான், அண்ணு! அயர்வையொழிதிர். அடுத்த டுத்து நினைந்தயர்ந்தாவ தென்னுெவென்று தேற்றினர். வேந் தரேந்தலார் சத்துருக்கினு! அரக்கனு லபகரிக்கப்பட்ட மிதி லை நாடியார் இற்றைக்காறும் உயிருய்வரென நான் கருதவில் லை. அவ்வன்னையார் தன்மையங்ஙனமாயின் அண்ணனுர் பெற்றியென்னுமோவெனச் சத்துருக்கினுழ்வான் அத்தரோ! நம்பெருமானுடைய செயலை நன்குணர்ந்து வனசரர் பதியா கிய குகப்பெருமான் திருமுகமொன்று வரைந்துவிடுத்தனர். படிக்கின்றேன், கேட்டருளுமெனப் பரதாழ்வான் சத்துருக் கினு! திருமராடி பெற்றுப் பத்திரப்பழுவஞ்செறி சித்திரகூ டத்தினின்று மீண்டுவரும் வேலை குகப்பெருமானைக்கண்ணு ற்று, அன்ப! இரகுநாதருடைய நலங்களை யடுத்தடுத்து வி ளுய்த் தெரித்தல்வேண்டுமெனச் செப்பினேன். உள்ளன்பு ள்ள குகப்பெருமா னதனை மறவாமை, ஓர் நிசாசரன்கலை யுரு க்கொளீஇச் சுவாமியையு மிளையவனையும் பன்னசாலையினி ன்றுசேய்மையிற்கொடு சென்றனனெனவும், மற்ருேர் நிரு தன் நீத்தோன்படிவங்கொண்டு அம்மனையைக் கரவிற்றூக் கிப் போயினுனெனவும், முன்னே பொறித்துவிடுத்தனர் இப்போழ் தென்வரைந்திருக்கின்ருர். வாசியென வநுஞை செய்தனர். சத்துருக்கினுழ்வான் நன்றென்று இலச்சினையை நீக்கி முடங்கலைநிமிர்த்து உலகெங்கும் பாயிருளையோட்டிச் சேயொளிபரப்புந் தினகரகுலதிலகரும், சருவஞ்ஞராகிய தாச ரதியார்க்கிளைஞரும், ஆயிரமுடங்கலிற் பொறிப்பவடங்கா மா

கீர்த்தியுடையாரும், மன்னர் மன்னருமாகிய பரதசுவாமிகளு டைய திருவடித்தாமரைகளில் நாயேன் குகன் தாளுந்தடக்கை யுங் கூப்பி அநந்ததண்டஞ் சமர்ப்பித் தெழுதிக்கொண்ட விண்ணப்பம். தமது தாசவர்க்கங்களாகிய நாங்களெல்லாரும் க்ஷேமம். தேவருடைய க்ஷேமாதிசயங்களைப்பற்றி ஸ்ரீமுகம் பிரசாதித்தருளல்வேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன். முன்னே அடியேன் வரைந்துவிடுத்த பத்திரிகையால் நம்பெருமானுருடைய செயல்களைத் திருவுளமுணர்ந்திருக்குமே, பின்னர் அநந்தகலியாண குணகண பரிபூரணர் தேவியாரை யெங்குந் தேடிக்காணாது தென்திசையை நோக்கிச் சிறிதுதூரஞ்சென்று புகழ்க்குயிரைவிற்பான் அருந்தவமுயன்று தோன்றிய பெரியவுடையாரைக் காண்டல்புரிந்து தீமையிழைத்தவன் இராவணனென்று அவராலுணர்ந்து, அப்புறஞ்சென்று கவந்தனை யுயிர்வாங்கி, அவனுரையால் ரிசியமுகஞ்சென்று சுக்கிரீவனை நட்டு, வாலியை முருக்கி, அம்மகாராஜாவுக் கரசீந்து, கார்காலங்கழிந்தபின், அச்சூரிய புத்திரன் நாடவிடுத்த வானரசேனையால் பிராட்டியார் சிறையிருந்தருளு முறையு ளிலங்கை யெனத்தேறி மகதேவனுகிய வருணனைக்குறித்து நோற்றுப் புனன்மன்னவன் வராமையாற் றீக்கணையெய்து வயப்படுத்தி, கடலில் நூறுயோசனைதூரந் திருவணைபுரிந்தருளி வானரப் பெரும்படைகளோடு சென்று இலங்காபுரியை வளைந்துகொண்டிருக்கின்றார். இலட்சுமணசுவாமி பகவத் கைங்கரியஞ் செய்துகொண்டு உணவுமுறக்கமுமின்றி யினிதிருக்கின்றார். பெரும்பௌவத்தில் அணையியற்றப்பட்டிருத்தலின் இலங்கை செல்வது அரிதன்றாதலால் வனசரரைவிடுத்து மேனிகழ்வதை யுணர்ந்து விண்ணப்பஞ்செய்கின்றேன். பலதண்டம், இங்ஙனம் தாசன் குகனென்பதைப்படித்துக் காட்டியசத்துருக்கினுழ்வான் பரதசுவாமியை நோக்கி, அண்ணனோ! இரகுநாதருக் குதவிசெய்யும்பொருட் டிங்கிருபர்களை யினியாங்கட்செல்லவிடுக்கவேண்டியதில்லை. சுவாமி இலங்கையுற்றாராகலால் நிருதரை மூலமறச்செய்தேயிருப்பர். இப்பதிகளெல்லாருந்

தமது பதியேக விடைகொடுக்கின்றேனெனப் பரதசுவாமி சத்துருக்கினு! அவ்வண்ணமேசெய்தி. நமது குகப்பிரானெழுதியதெல்லாம் வாய்மையே. நானொன் றியம்புகின்றேன் கேள். சின்னாட்குமுர்தி விண்ணினெறியிற் கந்தருவரிருவர்சென்றார். அவரி லொருவன் மற்றொருவனைநோக்கா, ஆகண்டலன் இராமபத்திரராலோருதவியையடையக் கருதியிருக்கின்றமையின் தனது புத்திரனாகிய வாலியைக்கொன்றமையைக்குறித்துப் பருவரலுற்றிலன், ஆச்சரியமாச்சரியம்! இன்றுகாறுங்கேட்டதுமில்லை, பார்த்ததுமில்லை. தாசரதியார் புணரியிற் சேதுக்கட்டியருளினரொன்று பேசிக்கொண்டு போயினரொன்றனர். சத்துருக்கினாழ்வான் பெரியீர்! மற்கடங்களுக்கும் அரக்கர்களுக்கு மிப்போது சமரநிகழ்கின்றது. அதனை நீ யெவ்வாறுணர்ந்தாயெனிற் சொல்லுகின்றேன்கேட்டருளும். ஓர்நாள் பெருமாருதமெழுந்து மண்ணைவாரியிறைத்தது, நான் பிங்களனைக்கூய் இம்மண்மாரியால்வையமுய்யச் செய்யலாவதுண்டோ? உளதாயிற் பரிகாரமென் புரியலாமென்று வசிட்டபகவானை வினவிவர விடுத்தனன். அப்பிங்களன்சென் றஃதையுறைப்பச் செவியுற்றருளிய வசிட்டபகவான் இது மண்மாரியன்று. இலங்காபுரியில் நிருதர்களும், கவிகளும் பொருகின்ற வெஞ்சமரத்தைச்சென்று கண்ணுற்றுமீள்கின்ற பெரிய திருவடிகளுடைய சிறகுவீசு பெருங்காற்றாகையால் ஏதமுறாது, அச்சுறுதல் வேண்டாவென்று சொல்லென்று சொல்லினானெனப் பிங்களன் சொற்றனனென்றனர். பின்னர்த்திரையினுள் அமித்திரர்களடைந்த வெற்றியினாலு மித்திரர்களுற்றதோல்வியினாலுமின்னற்பாடுற்ற யான் மாதவமியற்றப் பனிவரை புகுகின்றேனென வோர்மாற்றம் பிறந்தது. பரதசுவாமி யம்மொழியைச் செவியுற்றுச் சமரம் பொருகின்றவர்களு ளொருவருக்குத் தோல்வியு மற்றொருவருக்கு வெற்றியு முற்றமையில் யாவளோ வொருத்தி யலக்கணுழக்கின்றாளென்றனர். உடனே சூர்ப்பநகை தவப்பெண்படிவம்பெற்றுப்போந்து மேவினருக்குச்சார்ந்த கீழ்மையாலு மே

வலருக்குநேர்ந்தமேன்மையாலு மறுக்கமுற்ற நான் அருந்தவம் புரிய இமமலைசாருகின்றேனென்று மீண்டும் பகர்ந்தனள். பரதாழ்வான் குழந்தாய்! சத்துருக்கினு! இவள்யாவள்? ஆ ரொன்று வினவுவாய். பக்தராவியாராகிய நமது சுவாமியா ரது செய்தியைச்செப்பினுஞ் செப்புவளென முத்துருக்கொண் டன்ன சத்துருக்கினுழ்வான் ஓ தாபசீ நீயாவள்? எவணின்று போதுகின்றனை. புகலுதியென வினயினர். சூர்ப்பநகை சத்துருக்கினுழ்வானை முன்னையதவப்பேற்றாற்கண்டு ஆ! ஆ! நம்முடைய மூக்கையுங் காதையுமரிந்த அரசிளங்குமரன் இ ங்கே திருக்கின்ருனென்று வெருவுக்கொண்டு நன்ருய் நோக் குற்று இவன் அவ்விலட்சுமணனல்லன். அவனைப்போலி ருக்கின்ருனுகலால் அவனுடைய தம்பி சத்துருக்கினனுயிரு க்கலாமென்று நினைவுற்று மூக்கையுங் காதையுங் கையாற் ருெட்டுப்பார்த்து ஆ! ஆ! நாமிப்போது தாபசியைப்போல வேடங்கொண்டிருக்கின்றமையின் நாசியும், வார்குழையும் ப டைத்திருக்கின்ருேமாகலால் மூக்கறைபோலக் குணகுணவெ ன்று பேசோம். நமது கூற்றைக் கேட்டொருவரு நகையாடா ரொன்று துணிந்து சத்துருக்கினனை நோக்கி நீ யாது கூறினு யென, இளையவர்க் கிளையார் தவமங்காய்! நீ யாவள்? எவணி ருந்துபோதருகின்றனை? சாற்றுதியென்றேனென்ருர். சூர்ப் பநகை நெட்டுயிர்ப்புயிர்த்துப் பெரும்பீழை யுற்றவள்போலப் பாவனைகாட்டி வாயாலிச்சுக்கொட்டி, எவளோ வொருத்தி யெங்கேயோ போகின்றேன். நீ என்னை வினவுவானேனெ ன்று சலித்துப் புகன்ருள். பரதாழ்வான் இத்தவப்பெண் வெஞ்சமத்தி லுடைந்தவர்கட்கிரங்கி வருந்துகின்ருள். இப் போழ்து நமது சுவாமிக்கும் பந்துத்தலையனுக்குந்தான் பொ ருமுரணேர்ந்திருக்கின்றது. அத்தனுர்க்கு அமரில் வெற்றியி லையோ? அஃதன்ருயின் இத்தவப்பெண் வேறுகாரணத்தாற் பொருமுகின்ருளோ? அஃதறிவாமெனத்திருவுளத்துன்னித் தாபசீ! நின்பெயரோதெனக் கொடியாள் நாம் யாவரொருவ ரை வேணவாவுற்று நாசியையுஞ் செவியையுமிழந்ததையே

பயனுயடைந்தேமோ அவ்வரசப்போரேறு சிவணக் காண்கி
ன்றமையினுல் இவ்வாண்டகை பரதனுகல்வேண்டும். அவ
னுடைய பக்கலில் உவன் வணக்கத்தோடு வாய்பொத்தி நின்
றமையின் சத்துருக்கினனேயென்று தெருண்டு இளையார்க்
கிளையாரை நோக்கிக் குழந்தாய்? என்னசொல்லினையெனக்
கடாவினள். உடனே சத்துருக்கிஞழ்வான் நங்காய்! நினது
நாம மென்னென்று அண்ணனுர் கடாவுகின்ருரொன்றனர்.
தீத்தொழிலா ளதனைக்கேட்டுப் பிறந்தநாள்தொட் டெனக்
குச் சூர்ப்பநகை யெனப்பெயர் வழங்கும். உற்றபெற்றியால்
மூக்கறையே யெனவு மழைப்பரொன்று மனத்தினுளோதி
ஐய! என்னைப் பருணுதினியென்று ரிசியமுகப்பறம்பி லுறை
யாநின்ற முற்றத்துறந்த முனிவர்கள் சொல்லுவர். புலத்திய
னுடைய மரபில் நான் அருமையாய்த் தோன்றியவளாகை
யால் முனிவர்களெல்லாரு மென்னை நட்பார்களென்றனள்.
பரதசுவாமி மங்காய்! நீ புலத்திய மரபினையெனவும், ரிசி
யமுகவரையினின்று வருகின்றனையெனவு மறிந்தோமென்
னுஞ் சூர்ப்பநகை யதற்கென்னையென்ருள். சத்துருக்கிஞழ்
வான் இராவணன் தங்கையை நோக்குற்று நீ நிசி சரகுல
மாதோவென அரக்கி யென்னைக் கேட்கவும் வேண்டுமோ
வென்று வுள்ளத்திலுள்ளி மெள்ள வெள்ளிப் புன்முறுவல்
செய்து, சீற்றங்கொண்டவள்போல நடித்துக்காட்டி, புலத்தி
யர் மரபிற்பிறந்த நான் அரக்கியாகத்தானிருக்கவேண்டுமோ
வென்ருள். பரதாழ்வான் குழந்தாய் சத்துருக்கின! தாபசிக்
குச் சினமூளும்வண்ணம் உரையுரையாதி. புலத்தியருடைய
மைந்தர் விச்சிரவசுவும், அவருடைய புதல்வர் குபேரரும் இ
ராக்கதரா? அல்லரோ யென்றனர். சூர்ப்பநகை இராட்சத
குலனிற் ருேற்றஞ்செய்தும் அன்ன விருவோரும் அரக்க
ராகாதவாறுபோலப் பிறப்பினுற் கடைப்பட்ட விபீடணனும்
அரக்கனல்லனேயென்றுகருதி, அப்பா! பரதா! நன்ரு
யியம்பினையென்றனள். பரத சுவாமி நங்காய்! நீ யல்ல
லுற்றனையாகத் தோற்றுகின்றி. அதற்குக் காரணமென்னை

கழறுதியென்றனர். சூர்ப்பநகை கேட்டியப்பா! விளம்பு கின்றேன். சாது சனங்களினுடைய வீவினாலுஞ் செறுநருடையவுய்தியினாலு மிவ்வரந்தையடைகின்றேனெனச் சத்துருக்கினாழ்வான் பருணுதினீ! உனக்குற்றவரு முருதவரும் யாவரொன்றனர். சூர்ப்பநகை எனக் கரக்கர் மித்திரர் வானரமித்திரரொன்று மனத்திலோதி முறுவலித்துக் குழந்தாய்! எனக்கு வானரர்மித்திரர், அரக்கரமித்திரரொன்றனள். பரதசுவாமி யச்சொற்செவியேற்று நமது சுவாமியோடுற்ற கவிகட்குற்ற பெற்றிமையெற்றோவென் றுடல்பனித்துப் பருணுதினீ! ரிசியமுகப்பொருப்பினின்று போந்தேனென்றாய். ஆங்குத்தான் அரக்கருக்கும் வானரருக்கும் போர் நடந்ததோவென, இராவணனுக் கிளையாள் ஐய! ஆங்கில்லை, இலங்காபுரியிலென்றனள். பரதாழ்வான் உள்ளம் புழுங்கிக் கண்ணீர் சொரிந்து இளையவனை நோக்கலும், அச்சத்துருக்கினாழ்வான் சூர்ப்பநகையைக் கண்ணுற்று இவ்வெல்லா நீ யெங்ஙனம் உணர்ந்தனையென்றனர், சூர்ப்பநகை குழந்தாய்! கிட்கிந்தையெனவோர் பெருமுழையிருக்கின்ற தன்றோவெனலும், இளையவர்க் கிளையவர் மாதவப்பன்னி! கிட்கிந்தாபுரிக் கரசனாகிய வாலி க்ஷேமமாயிருக்கின்றானோவெனக் கடாயினர். அரக்கிதாதா! இரகுகுலத்திலுதித்த இராமசந்திரர் வாலியை யவன் தந்தையுலகுக்குச்செல்ல விடைகொடுத்து, அவ்வாலியினது தம்பியார் சுக்கிரீவருக்குக் கவியரசுரிமைதந்தருளினர். இப்போதச் சுக்கிரீவர் கிட்கிந்தாநகரவாையராயிருக்கின்றனரொன்றனள். சத்துருக்கினாழ்வான் நல்லது நீ மேலே விளம்புதியென்த்தியாள் கேளப்பா! உருமையினுடைய சிலதியாகிய சங்குகருணியென்ற வானரப்பெண் எனதாருயிரன்ன விகுளை. அவ ளென்வயின்வந்து, உருமை தீப்பிழம்பிற்குப்புற்றனளென்றோதிக் கலுழ்ந்தனள். அதனாலுணர்ந்தேனென்றனள். பரதாழ்வான் பருணுதினீ! உருமையாவளெனத் திமைச்குக் கொள்கலமாயாள் குழந்தாய்! அவ்வுருமை சூரிய புத்திரராகிய சுக்கிரீவருடைய தேவியென்றனள். சத்துருக்கினாழ்வான்

தாபசி! சுக்கிரீவர் அரக்கரால்மொத்துண்டலந்தனரோவெனப் படிற்றெழுக்கப் புல்லியள் கண்மழை வாரத்தொடங்கி, அவர்மாத்திரமன்று அமைச்சராகிய அனுமானும் இளவரசாகிய அங்கதப்பெருமானும், ஏனைவலிமுகங்களும் வான்புக்கனவொன்றனள். சத்துருக்கினழ்வான் பருணுதினீ! இரகுகுலத்தை விளக்கஞ்செய்தருளிய மன்னிளங்குமார ரிருவர் இலங்கையின்கண் ணேகினர்களே, அன்னவர்களதுசெய்தி யென்னையோவெனலும், பெண்ணிற்கூற்றமன்னாள் வெறென்னவிருக்கின்றது: இராக்கதர்கள் வெற்றிகொள்வது வெஞ்சமத்தில் விஞ்சுற்ற வஞ்சத்தினலன்றோவென்றனள். சத்துருக்கினழ்வான் தாபசி! நிருதர்கள் எஞ்சலில் வலியமைந்த மஞ்சரிருவரிடத்தும் மாயையியற்றினரோவென, நாயினுங்கடையாள் கேளப்பா! அரக்கர்கள் கடலின் வடகூலஞ்சார்ந்து மானிடவுருக்கொண்டு தசக்கிரீவனேடு ஞாட்புப்புரியாநின்ற இராமலட்சுமணர்களுக்குத் துணைபுரிவான்வேந்தரேந்தலாகிய பரத ரெங்களைவிடுத்தன ரெனவுரைத்துத் திருவணைமீது நடந்திலங்கை போந்துவேந்துகுலவிளம்புதல்வர் போருழப்பினலலந்து கண்வளருங்காலை வாளையுறையினின்றுரீஇ யென்றோதிப் பொருமினள். சத்துருக்கினழ்வான் பருணுதினீ! பின்பு நிருதர்கள் யாது புரிந்தனர்கள். சொல் சொல்லெனத் தீவினைக் குறையுளாள் நமது மூத்தவள்ளல்களை யம்பாலெறிந்தவருடைய தம்பியர்களை நாம் வாக்குப் படையாலடிப்போமெனச்சொடு, சத்துருக்கினனை நோக்கி, தாதா! சூரியன் மரபிற்றேன்றிய இராமலட்சுமணனை நீ யறியாய். நானன்குணர்ந்தவளாகலா லெனதுள்ளம்வேகின்றது. என்னை சொல்வேனென்றேங்கினள். பரதப்பெயரண்ணலார் தாபசி! மேலே சொல்சொல்லெனப் புலாலுணங்கு பேழ்வாயரக்கி கேளப்பா! வந்த நிருதர்கள் இராமலட்சுமணனை யென்செய்தனர்? பெயர்மாத்திர நிலவுலகினிலவும்வண்ணஞ் செய்தனவொன்றனள். பரதாழ்வான், அச்சொல் செவி புகாமுன் வாளராவினஞ்சுதலைக்கொண்டு மெய்யயர்ந்து விழும் வேழமென்ன நிலத்திலுற்றுப் புழுதியுடல் போர்ப்பப்

புரண்டு, கொல்லனூதுகின்ற உதியிலெழுதழலென உயிர்த்து யிர்த்துள்ளம் புலர்ந்து நாவுலர்ந்து கண்கள் சோரியைக்கான்று, ஐம்புலன்களும் அலந்தலையுற்றுயிர் நீங்கு மற்ற நேர்ந்திருந்தனர். அப்பாகவதோத்தம ரெய்தியபையுளைச் சொல்ல வல்லுநர்யாவர்? இளையவர்க்கிளையாரு மவ்வாறே யயர்ந்துயங்கினர். நாயெனக் கடைப்பட்ட பேயனைய சூர்ப்பநகை சோர்ந்தவரை நோக்கி யுள்ளுக்குளே கிளுகிளுத்து நீ விரிருவிரும்யாவர்? நுங்கட்குச் செல்லலை விளைக்குஞ் செய்தியிஃ தெனவுணராமற்பேதைமையினுற் புகன்றேன். சோகந் தீர்மின். ஒன்னலரை வெல்லும் வீரதுன்னுமின். இனி யிழைக்குவ தென்னென்றுதேற்றினள். பரதசுவாமி அத்தரோ! அத்தரோ! லட்சுமணு! லட்சுமணு! என்றெழுவர். நிலத்தில்வீழ்வர். ஓவியமொப்ப உயிர்ப்படங்கி யாவியோய்வர். மீண்டுமெழுவர். வெந்தபுண்ணில் தீக்கொள்ளி நுழைந்தாலொப்ப வுழைப்பர். ஒன்றுந் தெரியாது மம்மருறுவர். மீண்டும் புவியில்வீழ்ந்து பேதைப் பெண்டிர்போலப்புரளுவர். அந்தோ! இதென்னகாலம் ஊழியினிறுதியோ? இருங்கதிர்மரபு இன்ருே டிறுதியெய்தியதோ வெனறேங்குவர். பெண்ணிற்றீயனையாள் பரதாழ்வானை நோக்கி முற்றுங்கேளப்பா! சுக்கிரீவாதியருஞ் சக்கரவர்த்திமக்களுக் கருகிற்றுஞ்சினுர்கள். மானிடவேடங்கொண்ட அரக்கர்கள் யாவரும்வாளென்னு நமனைக் கைகளிற் பற்றியிருந்தார்கள். நான் வேறு பகர்வதெவன்! நீயிரிருவிரும்யாவர்? சொல்லுமினெனச் சத்துருக்கினுழ்வான் சிறிது சோக நீங்கி அயர்வுயிர்த்துத் தாபசீ! நாங்கள் பரத சத்துருக்கினர். இரகு புங்கவருக் கிளைஞர்களென்றனர். சூர்ப்பநகை பேரிடுக் கணுற்றவள்போலத் தோற்றுவித்து அந்தோ! நீவிர் இராமபிரானேடுடன் ருேற்றினீர்களென நான் முன்னமேயுணராமற் கெட்டேன் கெட்டேன். இன்னறருசெய்தி பன்னுதல் கடனன்றென்று மேலோரியம்புவர். அதையறிந்தும், "நுண்ணுணர்வுடையோர் நூலொடுபழகினும் பெண்ணறிவென்பது பெறும் பேதைமைத்து" என்பதற் கியையவியம்பிவிட்டேன்; அண்ணுத்

தல்செய்யாநிரயத்தில் இன்னே வீழ்ந்தேனெனவாய் வெரீஇ யினள். பரதசுவாமி தாபசி! நீயேன் கலுழ்கின்றனை. நினக் கியாதிழவு? இச்செய்தியை மற்றெவராயினும்கூற எமது தொளை ச்செவியிற் கேட்கத்தான் வேண்டுமென்றனர். சத்துருக்கினுழ் வான் தவமங்காய்! மிதிலையர்கோ னங்கையினுடைய செய் கையை நீ யறியாயோவென்றனர். சூர்ப்பநகை அப்பா! என் னென்றுசொல்கேன். இராக்கதனுல் கரவுசெய்யப்பட்ட அம் மைதிலி இராமலட்சுமணர் இறந்தமைகேட்டுத் கழுத்திற் சுரு க்கிட்டுக்கொண்டுயிரையுந் துயரையுமொருங்கு துறந்தாளெ னப் பரதசுவாமி ஆவிபதைப்ப வலக்கணெய்தி மெய்தள்ளாடித் துமித்துமுறித்த மரம்போல அலறிவீழ்ந்து மிதிலையர்கோன் மங்காய்! ஆருயிர்க்கணவனைப்பின்பற்றினையோவென்று புலம் பிப் புலம்பிப் புழுங்கிப் புவியிற் புரளாநின்ற சத்துருக்கினுழ் வானைக் கரத்தாலெடுத் துரத்தோடணைத்துக் குழந்தாய்! இனி யாமென் செய்குதுமென்றனர். சத்துருக்கினுழ்வான் சினம் பொங்கி அண்ணுலோ! முன்னர் அரக்கரை வேரறுப்போம். பின்னர் நாமும் நமதருள் வள்ளலார் சீர்பாதநிழலைச் சாருவோ மென்றனர். தீயினுந்தீயள் அரக்கர்பூண்டு இன்னமுமுளதோ வெனத் தன்னுணைத்துக் குழந்தைகாள்! பேரின்னல்கொ ண்ட நுங்களுக் கிது தகுதியன்று. நீர்கள் மறுகுகின்ற பழங்க ளுல் வில்லம்பேந்தவு நுங்கட் காற்றலிலது. நுங்கள் சீதை புரிந்தவாறு நீவிருஞ் செய்வதே கருமமென்றனள். பரதாழ் வான்அன்னே! சுவாமி இனிதெழுந்தருளுவர். அவர் சீர்பா தத்தைப்பணிந்து சேவிக்கலாமென்று நாளை யெண்ணிக்கொண் டிருந்தேனே, என்னைத் தமியனுய் விட்டேகினுரோ. என்னை யாளுடையார் திறனன்றுநன்று. இன்று கழிந்தால் பதினுன்கி யாண்டிறுதி யுற்றனவாகலாற் பக்தவற்சலர் நாளைவருவரொன்று பெருமகிழ்வுப் பரவையிலழுந்திய நான் பேரிடும்பைப் புணரி யில்வீழ்ந்தேன். பெரிய பிராட்டியார் திருவிளையாட்டாத்திரு ச்கையிலேந்து செம்முண்டகமலர்மானுந் திப்பிய சரணங்களை யும், சரற்கால சந்திரனெத்த திருமுகத்தையும், கருணை கழுமு

திருவிழிகளையு மினி நானெஞ்ஞான்று காண்பேனென்றழுங் கினர். சூர்ப்பநகை குழந்தாய் பரதா! அலக்கணடையாதி சத்துருக்கினனைத் தேற்றுதி. இப்போழ்து நேர்ந்துள்ள இன்னுமையைப்போக்க விரகு நாடுவாயென்றனள். பரதாழ்வான் அந்தோ! சித்திரகூடத்தில் என்னைத்தழுவுபுகுழந்தாய்! நீபாதுகங்களைவைத்துக்கொண்டு அரசியல்வழாது நடாத்துதி இனிதோம்புதி நான் நந்தந்தையாரதாணைப்படி ஈரேழ்வற்சரங் கானிலுறைந்துவந்து, நீ எண்ணிய வெண்ணியாங்கு நிறைவு செய்கின்றனென்றருளிய நம்பெருமானர்சொற் பொய்த்தாரே. இரகுகுலத்திற் தோற்றஞ்செய்த முந்தையோர் பொய்ம்மைமறந்தும் பகர்வரோ? அந்தோ! என்செய்கேன், இனி ஆவி நீப்பதன்றி வேறென்றுமுளதோ? சத்துருக்கினு! ஆதித்தன் மரபு நம்மாலிற்றைப்போழ் திற்றதெனலாகாது. நீயிருந்து பிதிர்கடனாற்றிக்கொண்டும், வமிச விருத்திசெய்துகொண்டும், உயிர்வீடு மெனக்கும், இரகு புங்கவருக்கும், இளையவனுக்குஞ் சிறிது நீர்க்கடனாற்றுதியென்றனர். சத்துருக்கினுழ்வான் தொழுது அத்தரோ! இந்திரனும் விரும்பு மரசியலைக் கையிகந்து கானுழைச்சென்ற வொருவரை யொருவாது ஒருவர்சென்றருளினர். மூத்தோன் புறவத்திலுறையத் தம்பி பதியிலுறைந்து இன்பந் துய்த்தானென்னுஞ் சொல்நிற்கு மென்றஞ்சி நகரம் புகாதிருந்த நீர், அண்ணனர் வாழுநாளிழந்தாரென்றுருயிர் நீப்பான் தொடங்குகின்றீர். என்னை யரசாளுதி யென்கின்றீர். என்திற நன்றுநன்று நீ ரெனக்கடுத்த தியம்பிவீர் உமக்கு மடுத்ததன்று. வானேகும் நெறியை யடிகளுக்குயானே காட்டுவெனென்றனர். பரதசுவாமி அரிதரிது. இலட்சுமணு! அத்தீருடைய திருவுளத்தைப் பின்பற்றியன்றே வென்னையீன்ற பாவியையு மந்தரையையுங் கோறலியற்றுது தவிர்ந்தேன். அண்ணனைப் பிரியாதுகானினுந் தொடர்ந்து சென்ற நீ விண்ணுலகுந்தொடர்ந்து சென்றனையோ? பெருந்தீயோன் யானுகையால் சுவாமியைப் பிரிந்திங்கிருந்து, அவர் தன்னடிச்சோதிக் கெழுந்தருளியதைக் கேட்டுவருந்துகின்

றேனுயினேன். இனித்தாழேன், வந்தேன் வந்தேனென்றே ங்கி, சத்துருக்கினு! நமது பிதிர்களுக்கு நங்கள் மூவர்க்குந் திலோதகம்விட நின்னைத்தவிர வொருவனைக் காட்டுவாய், நீயு மென்னோ டுயிர்நீப்பாயேல் அன்னைமார்களுக்குக் களைகளுர்? படைப்பின் ருெடக்கத்திலேயே தோற்றிய பானுகுலம் நமது நாளி லிறுதியுறலாமோ வென்றழுங்கினர். சூர்ப்பநகை ஆ! ஆ! சத்துருக்கினுழ்வான் சாகாதுயிர்வாழ்வனேல் நமதுவிருப் புமுற்றுமுற்றுப் பெருதெனக்கொடு, குழந்தாய்! பரதா! நின் னினுஞ் சத்துருக்கினன் பெரும்பழங்கணுறுகின்ருன். இத்தி றத்தி லுனுதாணையைக் கைக்கொளமாட்டான். நீ மாய அவன் பார்த்திருப்பனோவென்றனள். சத்துருக்கினுழ்வான் நிலத் தில்வீழ்ந்து புழுதியுடன் முற்றும்போர்ப்ப அண்ணனுரே! நீரிப் போது கூறுங்கூற்றினுலே கூற்றின்வாய்விழுவேன். உமது சீர்பாதத்தைப்பிரிந்து, நொடிப்பொழுதுந் தரிப்பேனோவென் றரற்றினர். சூர்ப்பநகை சத்துருக்கினு! வாளா கலுழ்வதிற்பய னெவன்? விராயும், தீயுங்கடிதுவருக. எனக்கு நட்பினர்க ளாய வானரர்கள் மாய்ந்தமையினுல் நானுந் தீப்பிழம்பின் முழுகுகின்றேனென்றனள். பரதாழ்வான் அன்னை! கோசலை யே! கரையில்லாத் துயர்க்கடலிலழுந்திஞய். ஓ கேகயன்மா தே! கதிருமதியுமுள்ளளவும் வசையளற்றிலழுந்திக் கிடந்து ழைப்பாய். தாயே! சுமித்திரையே! நீபெற்ற பிள்ளைகளிரு வரையுமிழந்தனையே. ஏகூனி! இக்கேட்டுக்கெல்லாங் காரண மானவளே! நீயெல்லா நிரயத்திலு முறைவாயுறைவாய். பிதா வே! இந்திரனுக்கு நட்பாளரே! பேய்ப்பெண்டு மொழிக்கிண ங்கினிர். பின்னை அருஞ்செல்வக்காதலர்களை நெஞ்சுதுணிந்து கானிலேகவிட்டீர். இரகுகுலத்தைச்சுட்டீர். நீர் மெய்ம்மை காத்ததிறம் அழகிதழகிதென்றனர். சூர்ப்பநகை பரதசுவா மியை நோக்கி, என்னப்பா! இவ்வழுகையாற் பயனென்னை யோ? செந்நெருப்பில் விழுந்தாலன்றி யின்னல் நம்மைவிட் டொழியாது. சத்துருக்கினு! கடுப்பினில் நெருப்பினைவளர்த் தியென்றனள். இளையர்க் கிளைவர் பருணுதினி சொல்வது

தக்கதேயெனப் புறம்போந்து மீண்டும்வந்து அத்தரோ! வெந் தழற் குழியிழைத்துளேனெனப் பரதாழ்வான் மிகுதியும் பெருமகிழ்விதென்றனர். சூர்ப்பநகை நுன்னினும் நொதுமலாகியவெனக்குப் பெருமகிழ்விதென்று மனத்தினுள் மூரல்புரிந்து குழந்தாய்! பரதா! தீச்குளிப்ப வெழுந்திருக்கலாமேயென்றனள். பரதாழ்வான் தாபசீ! எமது குலகுரவராகிய வசிட்டபகவான் பால் நீ சென்று ஓர் விண்ணப்பஞ்செய்து வருவாயெனச் சூர்ப்பநகை நாம் தீமூழ்காதுய்யப் பரதனே நல்லவிரகுகூறு கின்றானென்றுன்னி, தாதா! அஃதென்னையோவென்றனள். பரதாழ்வான் நங்காய் இராமலட்சுமணர்தன்னுடைச் சோதிக்கெழுந்தருளினமையால் அடியேங்களும் சூழ்விசும்புகுகின்றோமென்றும், நாங்கள் நால்வரும் அந்நிரதிசயவின்பவீடடையத் தண்ணருள்புரியவேண்டுமென்றும், இன்றுமுதல் மனுவே விரிநீர்வியனுலகைப் பொதுவறப்புரத்தல் செய்யவேண்டுமென்றும், எமதன்னையாரை இன்னலுழவாவண்ணம் தேற்றவேண்டுமென்றும் நான் தொழுது கேட்டுக்கொண்டதாய் ஓதுவாயென்றனர். சூர்ப்பநகை நாம் பேணியது பேணியாங்கு நிரம்பிற்றெனப் போரவுகந்து குழந்தாய்! நான் சென்று செப்புவானேன்? ஞானப்பார்வையினால் அவரெல்லாவற்றையு முணர்ந்துகொளவல்லர். நீவிராவி நீக்காவிடினும் நான் நீக்காதொழியேனென்றோதி அத்தீப்பிழப்பினுணுழைவாள்போல விரைந்து அனற்குண்டத்தை வலம்வந்தாள். சத்துருக்கினாழ்வான் பருணுதினீ! நாங்கள் முன்னே தீப்பாய்கின்றோம். நீ அத்தரோவலின்படி வசிட்டபகவான் வயிற் சென்று மீளுதியென்று தகைதலும், இராவணன் தங்கை குழந்தைகாள்! நான் வசிட்டபகவா னாச்சிரமஞ்சென்று துன்னந்துவந்து நெருப்பிலேயேவீழ்கின்றேன். எனதுவரவை நோக்கி நீயிர்பீழைதுய்த்திருத்தல்வேண்டா. தழற்பிழம்பி லின்னே விழாதிருப்பிரோல் அரந்தையே நுங்களைக்கொல்லும். கதழ்ந்துகனலிற் குளிமினென்றோதி, இன்னோரிருவரும் சேர்ந்தாரைக் கொல்லியிற் குப்புறுவதில் ஐயமேயில்லை. இனி

நாஞ்செய்யவேண்டுவ தொன்றுமிலதெனக்கொடு புறமேவந் தாள். பரதாழ்வானும், சத்துருக்கினாழ்வானும் தீப்பாய்தல் செய்யக் குண்டத்தை வலம்வந்தனர். அவ்வேலை திரையினு ள்முதுகுரவரது மொழியை நிறைவுசெய்வான், புறவத்திற்கே கிய நாயகனைவிடாது தொடர்ந்துபோய வெனதருஞ் செல் வக்காதலி சீதை அடவியி லென்னதுன்பமடைகின்றாளோ வென்று வெய்துற்றுள்ள நான் இடி-விழுந்தாற்போலக் குராக் கமழ்குழலியாகிய குழந்தை இராக்கதனாற் கவரப்பட்டாளெ ன்று கேள்விப்படுகின்றேன். என்செய்கேனென்று வாக் குப்பிறந்தது. பர்தாழ்வா னதனைக்கேட்டுச் சத்துருக்கின! நமதுஜனகமகா ராசருடைய இனியதீங்குரலாகத் தோன்று கின்றதென்றனர். மீண்டுந் திரையினுள் இராவணா! நீ வேத சாத்திரங்களைக் கற்றவனல்லையோ? நீதியினெறியையுணர்ந்த வனல்லையோ? எனது தநயையைக் கரவுசெய்த லொழுக்கத் தின்பாலதோ? அது எங்களுக்கு மரபுத்தொழிலென்கின்றா யோ; தாமசமூர்த்தியை நீ பூசனைபுரிகின்றமையால் தாம சகுணத்தையே மேற்கொண்டிருக்கின்றாய்; அடாமூடா! என து புதல்வி பங்கயச்செல்வியடா, கனலைத் தூசில்முடியு முழு மகனைப்போல அவளை யெடுத்தனையேயடா. நீ வழிபாடியற்று ம் உமையாள் கொழுநன் நின்னைப் பாதுகாப்புப் புரியினுமெ னது ஜாமாதாவினுடைய தம்பியே நின்னைக்கொன்றுவிடுவன டா. அரிதரிது. ஆ குழந்தை சீதா! பத்துத்தலையையும், இரு பதுகையையுமுடைய புல்லிய நாயன்றா னின்னைக்கவர்ந்து சேறலுறுங்காலை நீயென் செய்தனையோ? எங்ஙனமறுகினை யோ? என்னை விளித்தனையோ? நினது காதற் கணவனைக்கரு தினையோ? கொழுந்தன்மார்களைக் கூயினையோ? என்று இரங் கும் வாக்கொலித்தது, சத்துருக்கினாழ்வான் அண்ணன்றோ! மிதிலைநாடியா ரிறந்தமையைச் சனகப் பெரும்புரவலர் உண ர்ந்திலர்போலுமெனப் பரதசுவாமி! பெருந்தகையாரும், நமது குலனுக்குப் பெரியாருமாகிய ஜனகப்பெயர்ப் பெரியவேந்தர் எழுந்தருளியிருக்கையில் அவரை வணங்கிப்பணியாமல்வெந்

தழலில்வீழ்வது தகுதியுடைய தன்றெனநின்றார். உடனே ஞானமேயுருக்கொண்டன்ன ஜனகக்காவலர் அரிதரிது. விண்ணங்காறுநிவந்து வெய்யசெந்தீக் கொழுஞ்சிகைவிட்டெரிகின்றது. பரதசத்துருக்கினர் கனலில்மூழ்க முயல்கின்றனர். இஃதென்னை யென்னையென்று விரைந்தணுகலும் பரத சத்துருக்கினர்பெருந்தகையீர்! யாவரும் வழிபடற்குரிய வொழுக்கமிக்காரே! யாங்கள் பணிகின்றனம். இதுவே முடிவிற்புரி நமக்காரம். இராக்கதருடைய புள்ளுவத்தினால் இராம லட்சுமணருயிர்நீத்தனர். தொண்டரேந் தீப்புகுகின்றோமென்றனர். ஜனகர் ஆ! ஆ! என்னைப்போலத் தீவினையாளனுமுளனோவென்று சோகாத்தனர். பரத சத்துருக்கினர் பெரியாரே! அறமூர்த்தியரே! சோகந் தணிதிரெனத்தேற்றினர். ஜனகர் கண்விழித்து அந்தோ! நிலனிற்றோற்றஞ்செய்த திருமகளுடைய கொண்கன் பரமாத்துமனெனவும், மூவா முதல்வனெனவும், ஊர்மிளையினது தலைவனும் அப்பெற்றியனே யெனவும் எண்ணூலார்புகன்றனர். எனது தீயவினையால் அவர்கண் மொழிந்தமொழியும் பொய்த்துப்போயிற்றே. அந்தோ? இரகுநாதரிறந்தனரென்றசொல் செவிவயிற்புகுந்து, யாஜ்ஞவல்கியப் பெருமுனிவர்பால் இறைநிலையையும், மெய்யாமுயிர்நிலையையும், அவனை அடையப்பெறும்நிலையையும்மற்று நிலைகளையுமுணர்த்தும் மெய்ம்மைவேதாந்த சாத்திரங்களைக்கற்றுணர்ந்தடைந்த ஞானத்தை வெருட்டித்துரத்திவிட்டதே. இவ்வின்னல்கலந் தென்னைக்கொல்லுகின்றதேயென்றனர். சத்துருக்கினாழ்வான் பெரியாரே! மிதிலாதிபதியாரே! நுமது புதல்வியாருமென்று கழறிப்பொருமிப்பொருமியழுதனர். ஜனகரதனைச் செவியுற்று நன்றுநன்று, அமங்கலையாய் நான் தன்னைப் பாராமற்போய்விட்டாளே. அவள் உத்தமி. கொழுநனைப்பிரிந்து நொடிவரையுந் தரியாளென்றோதிக் குழந்தாய்! பரதா! இராவணனோடு செருச்செய்ய இரகுநாயகருக்குத் துணையாக வேந்தர்களைக்கூ யனுப்புகின்றாயென்று கேள்வியுற்று நேரேவந்து நின்பக்கல்செய்தி தெரிந்துசெல்லலாமென்று

வந்தேன். இனிநான் மீண்டுசென்று செல்லலுக்குப் பிடிபடுக் கப்பட்டகளிறுபோ லாவதினும், நுங்களோ டொருசேரப் பெருந்தழற் பிழம்புக்குப் புதுவிருந்தாவேனென்றனர். அவ் வேலையெழினியினுள் இராமசந்திரன் இராவணனைக் கோற லிழைத்து, ஜனகர்திருக்குமாரியாராகிய சீதாபிராட்டியாரை யடைந்து, விதிசிவேந்திராதிய கடவுளர்களாலு முனிவர்களா லுர்துதிக்கப்பட்டு, ஈரேழுலகிலும் பெருஞ்சீர்த்திபெற்றுத் தே வியாரோடும், திருத்தம்பியாரோடும், சுக்கிரீவாதியரோடும் புட்பகமேறி எழுந்தருளுகின்றார். பரதசத்துருக்கினர்களே! தணற்கட் புகுதலொழிகென மொழிபிறந்தது. சத்துருக்கினுழ் வான் இம்மாற்றம் பகர்ந்த பிரமசரிய வொழுக்கத்தான் யாவ னெனலும், சனகர் பரதா! விளையாதை, நலந்தருமொழியா யிருக்கின்றது. செவியுறுவோமென்றனர். பரதாழ்வான் பூச் சியரோ! இனி நன்மைதருமொழி யேது? கிட்கிந்தையினின்று போர்த தாபசி யாங்கள் பரதசத்துருக்கினரொன்று தெருளா மே சுவாமியினுடைய செயலை யியம்பலுற்றுப் பின்னர்க்கே தச் செய்தியை யாமெற்றுக்குத்தெரித்தனமெனத் துயர்ந்த னள். நாங்கள் அழற்பெரும் பிழம்பின் முழுகாமையின் பொ ருட் டத்தாபசியம்மாணவவுருக்கொடு பொய்ம்மைகூறுகின்று ளென்றோதி, தீக்கழுமிய குண்டத்தைக்கிட்டினார். எம்மையாளு டைய ஐயராகிய அனுமான் மாணியுருப்பெற்று வந்து பரதசு வாமியே! நில்லுமின் நில்லுமின் நான் பகர்கின்றேன் கேண் மின். கவிச்சேனாதிபதியாகிய நீலன் இராக்கதப் படைத்தலை வனாகிய பிரகத்தனைவதைத்தான். இராவணனுடைய தம்பி கும்பகன்னனை இராமபத்திரர் கோறல்செய்தருளினார். அத் தசக்கிரீவனுடைய புத்திரனாகிய இந்திரசித்துவை இளையபெ ருமாள் விண்ணேற்றியருளினர். பின்னர்ப் பெருமாள் தசக் கிரீவனை உயிர்க்கொலைபுரிந்தருளி, வயத்திருமகளையும், நிலத் திருமகளையுமடைந்தருளினர். கார்முகினடுவணிற்ப, அதனி ருபாங்கரும் இருமின்னல்கள் நிலைகொளீஇ நிற்றல்போலச்க வினவிளங்குகின்ற மூவரையுங் கலிதீரக்கண்ணுற்று, நீவிர்களை

காணுண்ணுப் பேரின்பப்பௌவத்தின் மூழ்குவீரென்றனர். பரதாழ்வான் மாயைவல்ல அரக்கராலண்ணனுர்வஞ்சிக்கப்பட்டனரோ;அவரினி யிங்குவருதலேதென,எம்மையடிமைகொண்டதிருவடிகள் பரதரே!கேண்மின் நமது இரகுபுங்கவராகிய கதிரவன்முன் அரக்கர்மாயையிருள்நிலேக்குமோ? இராவணனுடைய புத்திரனும், மகாமாயாவியும், அத்திரசத்திரங்களில் வல்லவனுமாகிய மேகநாதனெய்த நாகக்கணையினுல் இராமலட்சுமணர் கட்டுண்டனரென்றனர். சத்துருக்கினுழ்வான் தாபசியானவள் நம் ஆராவமிழ்தனன் இருவரும் அராக் கணைக்குக் கட்டுப்பட்டதைக் கருதியே யிறந்தனரென்ருளோ? மேலே நிகழ்த்துமென்ருர். வாதாத்துமஜர் தாரகப்பரமனுக்குச் சகாயஞ்செய்யும்பொருட்டு இந்திரனுல் வேண்டுகொளப்பட்டுப் பெரியதிருவடிகள் வந்தனரென்றனர். பரதாழ்வான் குழந்தாய்! சத்துருக்கினு! நீ சின்னுண்முன்னர்ச் சாற்றிய பகவான் வசிட்டமுனிவருடைய மாற்றத்தை யிப்போ திவர்செப்புகின்றனரென்றனர். அஞ்சனைமஞ்சர் கேட்டருண்மின் பரதரோ! வயினதேய ரொழுந்தருளவு நாகாத்திரம், தானுய்ந்தாற் சாலுமென் றிரியல்போயிற்றென்றனர். பரதசுவாமி சத்துருக்கினு! நம்மாளுடை யருள்வள்ளலாரிடத்து இந்திரன் விழைவுற்ற பயன் இராவணசங்காரமென்றிதுபோழ்து தெரியவந்ததென்றனர். ஜனகபூபதியார்வாதாத்துமஜரை நோக்கி ஐயரோ! எங்களாவியை எங்கட்களித்த நீர்யாவர்? தெருளச்செப்புமினென, அநிலன்செல்வமைந்தர் வேந்தர் பெருந்தகையாரோ! தொண்டனேன் சுக்கிரீவருடைய அமைச்சரிலொருவன்; எனது நாமம் அனுமானெனச் சத்துருக்கினுழ்வான் இஃதென்னை வியப்பிற்று? இலங்காபுரியில் நிகழ்ந்த பொருமுரணிடைச் சுக்கிரீவன் அனுமான், அங்கதனுதிய ரெல்லாருந் துஞ்சினரென்று பருணுதினிசொற்றனளே, மற்ருேர் அனுமானுமுளனே? என்றனர். அஞ்சனைமஞ்சர் அழகிதழகிது. பருணுதினியாவளெனச் சத்துருக்கினுழ்வான் ரிசியமுகபருப்பதத்தில் தவஞ்செய்பவளாம். சுக்கிரீவாதியருக்கு நண்பளாம்.

அவளை நீ ரறியீரோவென்றனர். வாதாத்துமஜர் தமக்குள் சூழ்வுற்று, தயக்கிரீவனுள்ளிட்டார் விளிந்தமையினாலும், விபீஷணாழ்வான் இலங்காதிபத்தியத்தைக்கொண்டமையினாலும், சூர்ப்பநகை வருந்துகின்றனளென்று மந்திரி சம்பாதி சாற்றக்கேள்வியுற்றேமல்லேமோ. அவளே யிவட்போந்து வஞ்சஞ்செய்திருக்கின்றன ளென்றோர்ந்து பரதசுவாமியே! கேட்டருண்மின். ரிசியமுகப் பொருப்பிற் பருணுதினி யென்றொருத்தியுமில்லை. இராவணனுடைய தங்கை சூர்ப்பநகை தவப்பெண் வடிவங்கொண்டு நுங்களைப்படிறு புரியும்பொருட்டுப் போந்தாளெனக் கருதாநின்றேனென்றனர். பரதாழ்வான் உண்மைதான். அவளே தான்புலத்தியர் மரபிற்றோன்றினவளென்று சொற்றாளென்றனர். அக்காலை திருவடிகள் பரதாழ்வானே! தென்றிசையைப்பார்த்தருண்மின். நம் பேரருளாளப்பெருமாள் நம்மன்னையாருடனும், இளையவருடனும், மகாராஜர் விபீஷணாழ்வான் குகப்பெருமான் முதலியோருடனும், கிட்கிந்தையிலுறைபவர்களாகிய வலிமுகமடந்தையர்களுடனும் புட்பகமிசைவருகின்றனர். நும்மைத்துனைந்து நோக்கி யருளவேண்டுமென ஜகத்காரணர் திருவுள்ளங்கொண்டமையினால் புட்பகத்தினதுகடுமையை நோக்குமின். அம்மானத்துக் கொருபொருள் சேய்மைத்தென்பதும், ஒருபொருள் அண்மைத்தென்பதுங் கிடையாதுகண்டீர். நமதத்தனுருடைய தொண்டர்குழாம் ஒருமரனினின்று மற்றோர் மரனிற்றாவியும், ஆகாயவழியிலும் நிபிடீகரித்தும்வருகின்றன பார்த்தருண்மின். வலிமுகங்களாலும், காருகங்களாலும், செங்குரங்குகளாலும், குடாவடிக் குழுவாலும் நிலன்குழியுறப்போயது நோக்கியருண்மினென்றனர். ஜனகர் ஈமது குழந்தை சீதையினால் அலங்கரிக்கப்பட்ட இடதுபாகத்தையுடைய குழந்தை இராமபிரான் இளையவனோடும், ஏனையரோடும் புட்பகத்தினின்றிறங்கி வருகின்றனரென்று மகிழ்வுபூத்தனர். பரதாழ்வான் இருவிழியுங் குளிர்ப்ப நோக்குற்றன்றலர்ந்த செந்தாமரை புரையுஞ் சரணத்தையுடைய நம் அரும்பெறலடி

களைச் சேவிக்கப்பெற்றேன். அமுதப் பெரும்புணரியிடை மூழ்கினேனென்றனர். சத்துருக்கிஞழ்வான் இன்னகாலத்தில் இதுநேரும் இது நேராதெனவுணரவல்லவர்யாவர்? இமைப்பொழு திவ்வாண்டகையா ரீங்கணெழுந்தருளாவிடின் தியிடைமுழுகிச் சாம்பராயவிந்திருப்போம். எழுந்தருளி யுயிர்புரந்தனரொன்றனர். புட்பகத்தினின் றிறங்கியருளிய தாரக வாச்சியர் ஜனககுலசுந்தரீ! சாகரத்தையும், மகேந்திரத்தையும், ரிசியமுக விலங்கலையும், பஞ்சவடியையும், எழின்மிக்க சித்திரகூடத்தையும் பகவான் பாதோதகத்தையுங்கடந்து அயோத்தி புகுந்தோமென்றருளிச்செய்தனர். இளையவர் அத்தரோ! ஜனகப்பெரும்புரவலரும், என்னண்ணனும் சத்துருக்கினனு மெதிர்கோள்செய்யவருகின்றனர். நோக்குற்றருண்மினென்றனர். உடனே பரதாழ்வான் வந்து அண்ணு? கடல்வண்ணு? கருணைசுரந்துமடைதிறந்த கமலக்கண்ணு! தாரகப்பரமா! அடியனேன்பரதன் சேவிக்கின்றேன்; சருவலோக சரண்ணியா! சரணுகதவற்சலா! கருணுசாகரா! நின்ருெழும்பனேன் சேவிக்கின்றேனென்று தொழுது தொழுதின்புற்றனர். இராமபத்திரர் பரதாழ்வானை யருணேக்கினேக்கி முடிமுதலடிகாறுந் திருக்கரங்களாற் றைவந்து தழுவிக்கொண்டு குழந்தாய்! பரதா! ஆயிரமௌலிப் பெருமானுடைய திருவருளால் நாம் நால்வரு மொன்றுசேர்ந்தோமென்றருளிச்செய்தனர். பரதாழ்வானையும்,இராமபிரானையும், இலட்சுமணரும், சத்துருக்கினரும் பணிந்தெழுந்தார்கள். மறத்தை வீட்டியறத்தை நாட்டியருளுவான் திருவவதரித்த இராமபத்திரர் பெரியீர்! மிதிலையர் புரவலரோ! இராமன் சேவியாநின்றேனென்றனர். இளையவரவ்வாறே செப்பிச்செய்தனர். ஜானகியார் தந்தையீர்! சேவிக்கின்றேனென்றனர். ஜனகர் ஆசிகூறி இரகுபுங்கவா நோக்கா, குழந்தாய்! இராவண சங்காரஞ்செய்து விண்ணவர்க்கும், பண்ணவர்க்கும், மண்ணவர்க்கு மிடுக்கணகற்றிச் சிதையையடைந்து இனிது மீண்டனையே; தெய்வாதீனமென்றனர். இராகவபிரான் அஞ்சலிசெய்துகொண்டு சித்தி

னிலையையும், அசித்தினிலையையும், ஈச்சுரனிலையையும் தக்கவாறுணர்ந்த அடிகளே! தமது தண்ணருளினாலும், வசிட்டபகவான், பகவான் விசுவாமித்திரர்முதலிய முனிவர்களுடைய ஆசிகளினாலும் பற்றலரைப் பற்றற வெற்றியியற்றிப் போந்தனேனென்றனர். உடனே விசுவாமித்திரர்வந்தார். வந்து வலாரிமுதலிய வானவர் குழுமியண்மி யென்னைக் கண்ணுற்று, உமதாணையை மேற்கொண்டு இராவணனைச் சார்ந்தவரை இராகவன்கொன்றருளுவன், அத் தசக்கிரீவன் முனிந்தேதேனுந் தீங்குசெய்வன். அவனை முருக்குவான் தாசரதிக்கு விடுபடை விடாப்படைகளைக் கொடுத்தருளுமென நீயிர்கூறியவாறு யானுங்கொடுத்தேன். இரகுபுங்கவன் நிருதர் வேரறுத்துமீண்டதைச் சமாதியாலுணர்ந்து மகிழ்ந்து இரகுநாதனைக்காணப் போந்தேனென்றோதித் திருமிப்பார்த்தார். இராமபத்திரர் பகவானே! விசுவாமித்திரரே! இராமன் அடிபணிகின்றேனெனலும், பரதாழ்வானும், இளையபெருமாளும், சத்துருக்கினாழ்வானும், பிராட்டியாரு மம்முனிவரைச்சேவித்தனர். காதிகாதலர் மகிழ்ந்தாசிகூறி இராமசந்திரனைக் கண்ணுற்று, தாரகப்பரம! இம்மும்மை யுலகத்தையும் நலிந்து கொண்டிருந்த ஈரைந்துசென்னியனைக்கொன்ற நின்னால அந்தணரனைவரும், முனைவரும், இமையவரும் பாதுகாவல் செய்யப்பட்டார்களென் றுவந்தருளச் சீதாநாயகர் இவ்வனைத்துந் தேவருடைய திருவருளினாற்றலேயெனமொழிந்தனர். பரதாழ்வான் பகவான் விசுவாமித்திரரே! எமதத்தரை யிந்நந்திக்கிராமத்திலேயே முடிசூட்டிப் பின்னர் அயோத்திக் கழைத்துக்கொடுபோகவேண்டும். அனுமான், விபீஷணர், சுக்கிரீவர், அங்கதர், குகர்முதலிய நண்பர்களுமவ்வாறே விரும்புகின்றார்களெனலும், காதி காதலரும், ஜனகப்பெருந்தகையாரும் ,பரதாழ்வானுடைய அன்பிற்கோர்வரம்பில்லையென்றனர். உடனே திருவடிகள் உலகமூன்றினுமுள்ள அறப்புனல்களையெல்லா மொடியெல்வையிற் கொணருகின்றேனென்று புறம்போந்தனர். ஜனகப் பெருமானார் குழந்தை சத்துருக்கின! வசி

ட்டபகவானையும், மற்றமுனிகணங்களையும், அமைச்சர்களையும் அரசர்களையும், நின தன்னைமார்களையுங் கதழ்ந்து ஈங்கட்போதரச் செய்தியெனலும், அச்சத்துருக்கினுழ்வான் நன்றென்று விரைந்தனர். எழினியுள் இராமதிவாகரனுக்குத்திருமுடிபுனையும் பெருவிழாவாகையான் நறுஞ்சந்தம்,நாண்மலர்,அக்கதை கொணரத்தக்கன. அநுமான்கொணர்ந்த அறத்துறைப்புனல்களைப் பொன்னங்குடன்களில் நிரப்பித்தர்ப்பனஞ் செய்யவேண்டியது. அரியணை, வெண்கொற்றக்குடை, வெண்கவரி, மணிமுடி முதலியவற்றைக் கொணரவேண்டும். ஒப்பனைகள் செய்துகொடு கன்னியர்கள் வருதல்வேண்டும்? அரசுவாவையும்,பரிமாவையுங்கொண்டுவந்து நிறுத்தல்வேண்டும். வேதியர்களையும், அந்தணமாதவர்களையும், அரசமாதவர்களையும், அரசர்களையும் விளித்துவந்திம்மண்டபத்தில் வீற்றிருப்பச்செய்யவேண்டும். கடிமுரசுமுதலிய பல்லியங்களைத் துவைப்பவேண்டுமென்று வாக்குப்பிறந்தது. ஜனகப்பிரானுர் இராமபட்டாபிஷேகத்துக் காகவேண்டியவற்றுக்கு வசிட்டர் கட்டளைசெய்கின்முர் போலுமென்றனர். பின்னர்ச் சத்துருக்கினுழ்வான்வந்து தாரகவாச்சியரைத்தொழுது சுவாமி! வசிட்டபகவானும், அன்னையர்களும், ஏனைரும் போதந்துவிட்டார்களென; இராமபத்திரர் எம்பெருமாட்டியாரோடும், இளையபெருமாளோடும், வசிட்டபகவானையும், அன்னையரையும்வணங்கினர். அருந்ததிகேள்வர்மகிழ்ந்து திருவருள்செய்தனர். சக்கரவர்த்தி தேவியார்மூவரும் கொங்கைபால்சோரத் தமதுதிருக்குமாரரையும், மருகியையுந் தழுவிக்கொண்டுச்சிமோந்தனர். பின்னை வசிட்டபகவான், நட்பினரோ! விசுவாமித்திரரோ! மனுமுதலாகிய அரசர்களுக்குப்பட்டத் திருமஞ்சனமாட்டிய நவமணிகுயிற்றிய அரியணைமிசை ஸ்ரீசானகீரமணரை வீற்றிருப்பச்செய்துமுடிசூட்டுவோமெனப்பகவான் கோசிகர் பகவான் வசிட்டமுனிவரோ! தேவர் திருவுளப்பாங்கின்படி செய்கவென்றனர். வசிட்டபகவான் ஜனகவேந்தரை நோக்கி நுமது கருத்தியாதோ? என்று குறிப்பின்வினவ, மிதிலைநாடர் வசிட்டபகவானே! அடியே

னைக்கேட்கவேண்டுமோ? சூரியகுலத்துக்குத் தாயும், தந்தையும், தவமும், கடவுளும், அறம்பொருளின்பங்களும் வேறாகிய நிரதிசயவீட்டுலகுந்தேவரல்லீரோவென்றனர். பகவான் வசிட்டப்பெயரறவரதனைச்செவியுற்றுப் போரவுகந்து ஐயருக்குச் சடாசோதனமும், மங்கலத்திருமஞ்சனமுஞ் செய்வித்துத் தூரிய மொலிப்ப, மங்கலமியம்ப, கருணைசொருபியும், பிரபன்னர்களுக்குப் புருஷகாரியும், தவம் புரிந்தவர்களைச்செய்தவத்திற்கீடாகப் பிரமனாகவும், சிவனாகவும், இந்திரனாகவும், மற்றுந் தேவர்களாகவுஞ் செய்தருளிய கடைநோக்குடைய பிராட்டியாருமாகிய ஜனககுல அன்னத்தோடு இராமபிரானை, சம்பு இடையறுமறப்பன்னி யின்பநடங்குயிற்று நாமனை, தாரகப்பரமனை, நாரணனை யாவர் கண்ணுக்குங் கருத்துக்குமினியானை, நிரவதிக சௌலப்பிய சௌசீல்யாதி குணோத்தமனை, மலர்மேலலர் பூத்தாங்குத் திருத்தொண்டர்கள துள்ளமுளரி மலர்மிசைமலரும் முண்டகத்தாளானை, நான்முகனைம்முகன்முதலிய விண்ணவர் முதலியோரரந்தைபோக்கி, அறத்தை ஆக்குவான் அயோத்தியில் திருவவதரித்த பேரருளாளனை, உள்ளுவாருள்ளத் துவட்டெழு நறுந்தேறலை, என்னப்பனை யரியாதனத்திலிருவி யபிடேகஞ்செய்து திருமுடிசூட்டினர். வேதியர்களு முனிவர்களும் அகங்களிதூங்கவாசிகூறினர். மன்னர்கள் திறையோடிறைஞ்சிப்பொலம்பூத்தூவி ஜயவிஜயீபவா, கோதண்டராமாவென்றுகொண்டாடி ஞாலமுற்று மரசாளுகை தாங்கொண்டருளின ரெனக்களித்தனர். மாகதரேத்தினர். சுமங்கல மங்கையர் மங்கலம்பாடினர். கலைமகள் கொழுநனும், உமையவள்கணவனும், சசிமணமகனும், ஏனையவிமையவர்களும், அந்தரநண்ணித் துந்துபிமுழக்கி மந்தார நறுமலர் மாரிபெய்து, சேவித்துப் பாடியாடியுளங்களிநிரம்பினர். தெய்வமகளிர்கள் நடனஞ்செய்தனர். கந்தருவர் கானஞ்செய்தனர். ஜனகப்பெயர்ப்புரவலர் தெய்வாதீனம். இராமபட்டாபிஷேகநடந்தது. வேதபாரகர்கள் பூதானங் கோதானம்பெற்றுப் பேருவகைகொள்கின்றார்கள். எறும்பிமுதல் எறும்புக

டையிட்ட மன்னுயிர்கள் அமுதினுமினிய அமுதுண்டுகளிக்கின்றன. அநுமான், விபீஷணுழ்வான், மகாராசா, அங்கதப்பெருமான் முதலியவரும், பார்வேந்தரும் பெரும்பரிசுபெற்று மகிழ்கின்றனர். பூதேவருடைய ஆசீர்வாதத்தால் இராமசந்திரரும், நமது குழந்தையும், இலட்சுமிநாராயணர்போல இனிது நெடி தூழிவாழ்ந் திருத்தல்வேண்டுமென்றனர். பின்னர் வசிட்டபகவானுணையால் தாரகப்பரமர் பட்டத்துக்குரிய இருசெவிமும்மத நால்வாய்ப்பொருப்பின்மீதிவர்ந்து, அந்தணரருமறை வருக்கமோதி நிறைபொலங்குடமேந்திச்சூழ, மங்கலமயிலன்னர் பல்லாண்டுபாட, அரசர்கள்பங்கயச் செங்கைகூப்பியிருமருங்குஞ்செல்ல, வாரியமுங்கத்தூரியமுழங்க, மறுதேயஞ்சென்றுநெடிது நாட்பிரிவுற்ற காதற்கணவன்வரக்கண்ட கற்புடை நங்கையென அலங்காரங்கொண்ட ஸ்ரீ அயோத்தியைவலம்வந்து பாகவதோத்தமர்களை முன்னர்ப்புகுதவேவிப் பொன்னன்ன நம்பெருமாட்டியாரோடு பொன்மனை புகுந்தனர். பின்னர்ப் பகவான் விசுவாமித்திரர் இராமசந்திரா! எனதாச்சிரமமேகலாமா? என்னல் நினக்காகவேண்டிய தேதேனுமின்னமுளதோவென, இராமபத்திரர் அம்மாமுனிவரைத்தொழுது சுவாமீ! தேவர் கருணையால் சீதையை விவாகஞ்செய்தேன். தேவகண்டகனுகிய தசக்கிரீவனைக்கோறல்செய்தேன். எனதாருயி ரன்ன பரதனைக்கண்டேன். தேவரைச்சேவித்தேன். ஒன்றுங் குறைவில்லையென்றனர். அணித்துநின்ற பரதசுவாமி, பகவானே! காதிகாதலரோ! எனக் கொருசிறிது வரமருளவேண்டுமென்றுதொழுது, சுவாமி கோசிகரோ? கோக்களும், அறங்கரைநாவினருமறையந்தணர்களும், சாதுக்களு மெஞ்ஞான்றும் இன்பந் துய்த்தினிது வாழவேண்டும். இருமறை நூல்களையுணர்ந்த மேலோர்களை நிச்சலுஞ் சேவிக்கின்ற மன்னர்களே யிந்நிலனைப் புரத்தல்வேண்டும். கல்விமான்களெல்லாரும் அரசர்களால் மேல்வருகவெனக் கொண்டாடப்படவேண்டும். சீவைணவமே இருள்தருமா ஞாலத்தில் கலியினது வலியைவென்று

விளங்கவேண்டும். தெய்வத் திருமட்குறியும், இராமகதையும், இராமசரணத்திற்பத்தியுமே தரணியெங்கும் பரவவேண்டும் இராமசரிதையைப் படிப்போரும், வடிப்போரும்,கேட்போரு மப்பிறப்பிலேயே நிரதிசய வின்பவீடெய்தவேண்டுமென்று பிரார்த்தித்தனர். கோசிகமாமுனிவர், பரதா! வையமுய்ய நீ நன்குகேட்டனை. பகவான் அவ்வாறே அருளுவனொன்றருளி ஸ்ரீயப்பதிக்கும் ஆசியருளித்தம தாச்சிரமமேகினர். அஜசங்க ரேர்திராதியருக்கு நற்பதமருளிய சிற்பரனுக்குச் சருவாபீ ஷ்டமு முண்டாகுகவென்று பிராமணர்களு முனிவர்களும் திருவருள்செய்து தத்த முறைவிடஞ்சார்ந்தனர். ஜனகப் பெயர்க்காவலரும் மிதிலைசேர்ந்தனர். அனுமான், விபீஷணுழ் வான், மகாராசா, அங்கதப்பிரான், குகப்பெருமான் முதலி யோரும், மாயிருஞாலமன்னரும் சேவித்து விடைபெற்றுத் தத்தம்பதிமேயினர். தாரகப்பரமர் ஈரேழுலகினுந் தனிச் செங்கோல் பொதுவறநடாய், அருமறையறையுமறமென்னும் பைங்கூழ்வளர மேகமு மின்னலும்போலச் சனககுல சுந்தரி யாரோடு அரியணைமேவி வீற்றிருந்தருளினர்.

பக்தஜனங்களைப் பாதுகாத்து, அவர்களுடைய இஷ்டபூர்த்தி செய்வதில் கற்பகவிருட்சம்போன்றஅநந்தகலியாண குணகண பரிபூர்ணராகிய ஸ்ரீராமபிரானுரேயென்று நமக்கு மங்களத் தைக் கொடுக்கக்கடவரென முதனூலாசிரியர் மங்களமருளிச் செய்தனர்.

ஏழாம் அங்கம் முற்றிற்று.

ஸ்ரீ ராமதாசர்கள் திருவடிகளேசரணம்,

**ஜாநகீபரிணயம்.**

முற்றுப்பெற்றது.

---

ஸ்ரீ சடகோபமகாதேசிகர் பொன்னடிகள்வாழ்க.

ஸ்ரீ
ஸ்ரீநிகமாந்தகுரவேநம:

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| க0 | கரு | வென | வென் |
| கக | கஉ | மரன்கள் பூக்களால் | மரர்களில் பூக்கள |
| உக | கக | என்னுற்ருயே | என்னுற்றீரே |
| உ௩ | உக | ழுதுக்கி | ழதுக்கி |
| உச | கஎ | நெடுட்யிர் | நெட்டுயிர் |
| உசு | கசு | முறித்தும் | முறித்தவனும் |
| ௩ரு | க0 | கின்றரென | கின்றனரென |
| சஎ | கசு | வீட்டுதற்கு | வீட்டியதற்கு |
| சஅ | உக | படிங்கொ | படிவங்கொ |
| சகூ | உரு | கைகளால் | கைகள் |
| ருஎ | கரு | புதல்வர் | புதல்வன் |
| சுசு | உஉ | குலத்துவசன் | குசத்துவசன் |
| எ0 | உசு | முனிவர்பாலணைந்து | முனிவனாக்கண்ணுற்று |
| எஉ | உரு | மிசை | மீசை |
| எசு | ௩க | சொல்லாய் | சொல்லீர் |
| எஎ | கக | சொல்லாய் | சொல்லீர் |
| ஷை | கச | சொல்லாயெ | சொல்லீரொ |
| அசு | கூ | ப்றையை | பாறையை |
| அகூ | ககூ | துடைத்து | டைத்து |
| கூஎ | கசு | பராய் | பாராய் |
| கூஅ | க0 | விசு | விசும் |
| கக௪ | கச | துணியாய்க்தடி | துணியர்த்தடி |
| ககஎ | உசு | நோக்க | நோக்கி |
| ககஅ | ரு | பொலிகின்றேனென்ரு னென்றனன் | பொலிகின்ருனென்ற னன் |
| க௩௩ | ௩க | ஆயிரமுடங்க | ஆயிரமுடங்க |
| க௩ச | ககூ | தீத்கணை | தீக்கணை |
| க௩எ | கசு | அறிந்தோமென் | அறிந்தோமென |
| கருஅ | ககூ | ஷேமமா | க்ஷேமமா |
| கருகூ | அ | வெறென் | வேறென் |
| கச0 | கஅ | வெனறேங்கு | வென்றேங்கு |
| ஷை | ௩0 | பெறும் | பெரும் |
| கசக | அ | கேட்டுத்கழுத்திற் | கேட்டுச்கழுத்திற் |
| கருக | அ | கொன்றருளுவன் | கொன்றருளினன் |
| ஷை | கக | நீயிர்கூறியவர்று | கூறியவாறு |
| ஷை | கஅ | நலிந்து | நலிந்து |

